# தொல்காப்பியம்

## பொருளியல்

## உரைவளம்

க. வெள்ளைவாரணன்

மதுரை காமராசர் பல்கலைக்கழகம்



21

பதிப்புத்துறை

# தொல்காப்பியம்

## பொருளியல்

உரைவளம்

பேராசிரியர் க. வெள்ளைவாரணன்

ஆய்வுரையுடன்



பதிப்புத்துறை

மதுரை காமராசர் பல்கலைக்கழகம்



**விலை ரூ. 11/-**

பதிப்பு எண் : 61

பதிப்பு விவரங்கள் :

1) உரைவள ஆசிரியர் : பேராசிரியர் க. வெள்ளைவாரணன்
*(Prof. K. Vellaivaranan)*

2) தலைப்பு : தொல்காப்பியம்-பொருளியல்-உரைவளம்
*(Tolkappiyam-Poruliyal-Variorum edition)*

3) பதிப்பு :

அ) இடம் : மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
*(Madurai Kamaraj University, Madurai-21)*

ஆ) பதிப்பித்தோர் : பதிப்புத்துறை *(Publications Division)*
*Madurai Kamaraj University, Madurai-21.*

இ) ஆண்டு : 1983 (முதற் பதிப்பு)

4) மொத்த பக்கங்கள் : 6+172

5) பொருள் : உரைவளம்

6) படிகள் : 1200

7) அச்சும் அமைப்பும் : ப்ரியா பிரிண்ட்ஸ், மதுரை.

# பதிப்புரை

தொல்காப்பியப் பொருளதிகாரத்தின் ஐந்தாவதாக அமைந்தது பொருளியல் என்பதாகும். இவ்வியலுக்கு இளம்பூரணருரையும் நச்சினார்க்கினியருரையும் என இரண்டுரைகளேயுள்ளன. இவ்வுரைகள் இரண்டும் சூத்திரந்தோறும் இளம்பூரணருரை முதலாவதாகவும் நச்சினார்க்கினியருரை இரண்டாவதாகவும் கால அடைவினையொட்டி அமைக்கப்பெற்றன. இவ்வுரைகளைப் பயில்வார்க்கு உறுதுணையாக இன்றியமையாத் உரைவிளக்கங்கள் அவ்வவ்வுரைகளின்கீழ் அடிக்குறிப்பாகத் தரப்பெற்றன. சூத்திரந்தோறும் அமைந்த இவ்வுரைகளின் பின் தொல்காப்பிய மூலத்தை அடியொற்றிச் சூத்திரத்தின் கருத்தும் பொருளும் விளங்க எளிய தமிழ் நடையில் ஆய்வுரைப் பகுதி எழுதிச் சேர்க்கப்பெற்றுள்ளது. பொருளியலுக்கு அமைந்த இரண்டுரைகளிலும் உரையாசிரியர்கள் காட்டிய உதாரணச் செய்யுட்களிற் பெரும்பாலன தொல்காப்பிய இலக்கணவிதிகளை உள்ளவாறறிதற்குத் துணைசெய்யும் இலக்கியங்களாகத் திகழ்தலின் அவை உரைகளிற் கண்ட வண்ணமே முழுவுருவில் வெளியிடப் பெற்றுள்ளன. முன்னைய இயல்களிற் போலவே இவ்வியலிலும் சூத்திர எண்களும் பக்க எண்களும் தமிழெண்களாகவே அமைக்கப்பெற்றது.

பதிப்புத்துறை,

மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

# தொல்காப்பிய நூற்பா

| | நூற்பா | உரைகள் ★ 1 | 2 | 3 |
|---|---|---|---|---|
| | | (பக்க எண்) | | |
| 1. | இசைதிரிந் திசைப்பினும் | ௧ | ௪ | ௬ |
| 2. | நோயும் இன்பமும் | ௮ | ௰௩ | ௰௮ |
| 3. | கனவும் உரித்தால் | ௨௰ | ௨௰ | ௨௧ |
| 4. | தாய்க்கும் உரித்தால் | ௨௨ | ௨௨ | ௨௨ |
| 5. | பால்கெழு கிளவி | ௨௩ | ௨௪ | ௨௫ |
| 6 | உயிரும் நாணும் | ௨௬ | ௨௭ | ௨௮ |
| 7. | வண்ணந் திரிந்து | ௨௯ | ௨௯ | ௨௰ |
| 8. | உடம்பும் உயிரும் | ௩௰ | ௩௰ | ௩௨ |
| 9. | ஒரு சிறை நெஞ்சொடு | ௩௨ | ௩௩ | ௩௪ |
| 10. | தன்வயிற் கரத்தலும் | ௩௪ | ௩௫ | ௩௬ |
| 11. | அறத்தொடு நிற்குங் | ௩௭ | ௩௮ | ௩௯ |
| 12. | எளித்தல் ஏத்தல் | ௪௰ | ௪௧ | ௪௬ |
| 13. | உற்றுழி யல்லது | ௪௭ | ௪௮ | ௪௯ |
| 14. | செறிவும் நிறைவும் | ௫௰ | ௫௰ | ௫௩ |
| 15. | பொழுதும் ஆறுங் | ௫௨ | ௫௨ | ௫௬ |
| 16. | வேட்கை மறுத்துக் | ௫௭ | ௫௭ | ௫௯ |
| 17. | தேரும் யானையுங் | ௬௰ | ௬௪ | ௬௨ |
| 18. | உண்டற்குரிய | ௬௩ | ௬௩ | ௬௫ |
| 19. | பொருளென மொழிதலும் | [illegible] | ௬௭ | ௬௮ |
| 20. | அன்பே அறனே | ௬௬ | ௬௮ | ௬௯ |
| 21. | சுரமென மொழிதலும் | ௭௰ | ௭௰ | ௭௧ |
| 22. | உயர்ந்தோர் கிளவி | ௭௨ | ௭௨ | ௭௩ |
| 23. | அறக்கழி வுடையன | ௭௪ | ௭௫ | ௭௭ |
| 24. | மிக்க பொருளினுட் | ௭௭ | ௭௮ | ௭௯ |
| 25. | முறைப்பெயர் மருங்கினற் | ௮௰ | ௮௧ | ௮௨ |
| 26. | தாயத்தின் அடையா | ௮௩ | ௮௪ | ௮௫ |

---

★ 1 இளம்பூரணர்
2. நச்சினார்க்கினியர்
3. வெள்ளைவாரணனார்

---

★ 1. இளம்பூரணர்

2. நச்சினார்க்கினியர்

3. வெள்ளைவாரணன்

# சுருக்க விளக்கம்

## 1. ஆசிரியர்கள்

| | |
|---|---|
| இளம். | — இளம்பூரணர் |
| நச். | — நச்சினார்க்கினியர் |

## 2. நூல்கள்

| | |
|---|---|
| அகம். | — அகநானூறு |
| ஐங். | — ஐங்குறுநூறு |
| கலி. | — கலித்தொகை |
| கார்நாற். | — கார்நாற்பது |
| குறள். | — திருக்குறள் |
| குறுந். | — குறுந்தொகை |
| தண்டி. | — தண்டியலங்காரம் |
| திணை. நூற். | — திணைமாலை நூற்றைம்பது |
| தொல். | — தொல்காப்பியம் |
| நற். | — நற்றிணை |
| நாலடி. | — நாலடியார் |
| பதிற்றுப். | — பதிற்றுப்பத்து |
| புறம். | — புறநானூறு |

# தொல்காப்பியம்

## பொருளதிகாரம்

### பொருளியல்

க. இசைதிரிந் திசைப்பினும் இயையுமன் பொருளே
அசைதிரிந் திசையா என்மனார் புலவர்.

என்பது சூத்திரம்.

**இளம்பூரணம் :**

இவ்வோத்து என்ன பெயர்த்தோ எனின், பொருளியல் என்னும் பெயர்த்து; பொருளியல்பு உணர்த்தினமையாற் பெற்ற பெயர்.[1] என்னை பொருளியல்பு உணர்த்தியவாறு எனின், மேற் சொல்லப்பட்ட ஓத்துக்களினும் இனிச் சொல்லும் ஓத்துக்களினும் வரும் பொருளினது தன்மை யுணர்த்துதலிற் பொருளியல் உணர்த்திற்றாம்.

இதனை 'ஒழிபியல்' எனினும் இழுக்காது. அகப்பொருள்

---

1. பொருளதிகாரத்தில் அகத்திணையியல் முதல் கற்பியல் ஈறாக முன்னுள்ள இயல்களிலும் மெய்ப்பாட்டியல் முதலாக மரபியல் ஈறாகப் பின்வரும் இயல்களிலும் கூறப்படும் பொருளினது தன்மையுணர்த்துவது இவ்வியலாதலின் இது பொருளியல் எனப்பெயர் பெறுவதாயிற்று என்பதாம்.

புறப்பொருள் என்பன இரண்டு பொருண்மையினும் எஞ்சி நின்றன கூறினமையின்.[1]

இதன் தலைச்சூத்திரம்[2] என்னுதலிற்றோ எனின், தொடர் மொழிக்கட் பொருள் இயையுமாறு உணர்த்திற்று.

(இ-ள்) இசைதிரிந்து ஒலிப்பினும் பொருள் இயையும்; அவ்வழி அச்சொற்கு அங்கமாகிய அசை[3] திரிந்தொலியா[4] என்றவாறு.

என்றது, சொலலொடுசொல் தொடர்வுபடும் வாய்பாட்டால் தொடராது பிறிதோர் வாய்பாட்டால் தொடுப்பினும் பொருட்டொடர்பு உண்டாயிற் பொருள் இயையும்வழி அசைச்சொற்கள் திரியாது நின்ற நிலையே பொருள்படுமாறாயிற்று[5].

உதாரணம் :-

""கார்விரி கொன்றைப் பொன்னேர் புதுமலர்த்
தாரன் மாலையன் றைதந்த கண்ணியன
மார்பி னஃதே மையில் நுண்ஞாண்
நுதல திமையா நாட்டம் இகலட்டுக்
கையது கணிச்சியொடு மழுவே மூவாய்
வேலும் உண்டத் தோலா தோற்கே

1. அகம், புறம் எனப் பகுத்துரைக்கப்படும் இருவகை ஒழுகலாறுகள் பற்றிய இலக்கணங்களிலும் இதுவரை கூறப்படாது எஞ்சியுள்ள பொருளினது இலக்கணங்கூறுவது இவ்வியலாதலின் இதனை 'ஒழிபியல்' என்ற பெயராற் கூறுதலும் தவறாகாதென்பதாம்.

2. இதன் தலைச்சூத்திரம்—இப்பொருளியலின் முதற்சூத்திரம்.

3. சொல்லுக்கு அங்கமாகிய அசையாவன சொல்லின் கூறுகளாகிய பகுதி விகுதி இடைநிலை முதலிய சொல்லுறுப்புக்கள்.

4. அசை திரிந்து ஒலியாமையாவது, சொல்லொடு சொல் தொடர்ந்து பொருள் கொள்வதற்கேற்றவாறு இனம் ஒத்த தொடர்மொழிகளாற் குறிக்கப்படாது வேறு வேறு தொடர்மொழிகளாற் கூறப்பட்டாலும் அம்மொழிகளின் உறுப்புக்களாகிய அசைச் சொற்கள் திரியாது நின்ற நிலையிலே பொருட்டொடர்புடையனவாய்த் தம்முள் இயைந்து பொருள்தருதல்.

5. "என்றது, சொல்லொடு சொல் தொடர்புபடும் வாய்பாட்டாற்றொடராது பிறிதோர் வாய்பாட்டாற் றொடுப்பினும் பொருட்டொடர்பு உண்டாயிற்பொருள் இயையும். அவ்வழி அசைச் சொற்கள் திரியாது நின்ற நிலையே பொருள்படுமாறாயிற்று"

என இவ்வுரைப்பகுதி அமைந்திருத்தல் வேண்டும்.

ஊர்ந்த தேறே சேர்ந்தோள் உமையே
செவ்வான் அன்ன மேனி அவ்வான்
இலங்குபிறை அன்ன விலங்கு வால் வையெயிற்று
எரியகைந் தன்ன அவிர்ந்துவிளங்கு புரிசடை
முதிராத் திங்களொடு சுடரும் சென்னி
மூவா அமரரு முனிவரும் பிறரும்
யாவரும் அறியாத் தொன்முறை மரபின்
வரிகிளர் வயமான் உரிவை தைஇய
யாழ்கெழு மணிமிடற் றந்தணன்
தாவில் தாள்நிழல் தவிர்ந்தன்றால் உலகே.''

(அகம். கடவுள் வாழ்த்து.)

இதற்குக் கொன்றையாலமைந்த தாரினனாய் மாலையனாய்க் கண்ணியனாய் நுண் ஞாண் மார்பினனாய் இமையா நாட்டத்து நுதலினனாய்க் கணிச்சியு மழுவு மூவாய் வேலும் ஏந்திய கையினனாய் யாவர்க்குந் தோலாதோனுமாய் ஏற்றினையு மூர்ந்து உமையாளையுஞ் சேர்ந்து செவ்வானன்ன மேனியையும் பிறை போன்ற எயிற்றினையும் எரி போன்ற சடையினையும் திங்களோடு சுடருஞ் சென்னியையும் உடையனாய் மூவாவமரர் முதலிய யாவரு மறியாத் தொன்முறை மரபினனாய்ப் புலியதளையும் உடுத்த யாழ்கெழு மணிமிடற் றந்தணனது சிவானுபூதியிற் பேருலகந் தங்கிற்று [1] எனப் பொருள் உரைக்குங் காலத்து அதன்கண் இடைக்கிடந்த சொற்கள் முன்னொடுபின் வாய்பாடுகள் சேராதன்றே [2] அவ்வழி அவ்வாய்பாட்டாற் போந்த

---

1. யாழ்கெழுமணிமிடற் றந்தணனாகிய சிவபெருமானது திருவடித்துணையே மன்னுயிர்களுக்குப் பிறவியாகிய வெம்மையினை நீக்கி வீடுபேறாகிய தண்ணிழல் தந்தருளும் என்பது தோன்றத் தாள்நிழல் என்றார். தாள்நிழல் என்பதற்குச் 'சிவானுபூதி' எனவும், உலகு என்றது உயர்ந்தோராகிய சிவஞானிகளைக் குறிக்கும் என்பதுதோன்றப் 'பேருலகம்' எனவும் இளம்பூரணர் உரை வரைந்துள்ளார். இவரது உரைவிளக்கம், 'நலம்புரி கொள்கைப் புலம் பிரிந்துறையும் செலவு' (திருமுருகு—63) எனவரும் திருமுருகாற்றுப்படைத் தொடரையும், ''தென்னன் பெருந்துறையான்...தாட்டாமரைகாட்டித் தன் கருணைத்தேன் காட்டி' (திருவம்மானை) எனவரும் திருவாசகத் தொடரையும் நினைவுகூரும் முறையில் அமைந்துள்ளமை கருதத் தகுவதாகும்.

2. சேராதன்றே—சேராதல்லவா?

பொருளுரைப்பச்[1] சேர்ந்தவாறும் இசைதிரித்து இசைத்தவாறும் அவை[2] தத்தம் நிலையிற் குலையாமை நின்று பொருள் பட்ட வாறுங் கண்டு கொள்க.

"ஊறொரால் உற்றபின் ஒல்காமை இவ்விரண்டின்
ஆறென்பர் ஆய்ந்தவர் கோள்." (குறள். சுசுஉ)

இதுவும் இரண்டென்னுந் தொகைக்கு 'ஊறொராமை' எனப் பொருள் உரைக்க வேண்டும். (க)

**நச்சினார்க்கினியம் :**

இவ்வோத்துப் பொருளிலக்கணம் உணர்த்தினமையிற் பொருளியலென்னும் பெயர்த்தாயிற்று. ஏனை ஒத்துக்களும் பொருளதிலக்கணமன்றே உணர்த்தின, இதற்கிது பெயராயவாறென்னை யெனின்; சொல்லதிகாரத்திற் கூறிய சொற்களை மரபியலின் இருதிணை ஐம்பா லியனெறி வழாமைத் திரிபில்சொல் லென்ப ராதலின் அவை ஈண்டுத் தம் பொருளை வேறுபட்டிசைப்பினும் பொருளாமெனவும், இப் பொருளதிகாரத்து முன்னர்க்கூறிய பொருள்களிற் பிறழ்ந்திசைப்பனவும்பொருளாமெனவும் அமைத்துச் சொல்லுணர்த்தும் பொருளுந் தொடர்மொழி யுணர்த்தும் பொருளும் ஒருங்கே கூறலிற் பொருளியலென்றார்.[3] இச் சூத்திரம் இவ்வோத்தின்கண் அமைக்கின்ற வழுவமைதிகளெல்லாஞ் சொற் பொருளின் வழுவமைதியும் பொருளின் வழு வமைதியுமென இரு

---

1. அவ்வாய்பாட்டாற் போந்த பொருளாவது, சொற்றொடர்களின் தொடரமைப்பிலன்றி அத்தொடர்ப்பொருள்களிலிருந்து கருத்துவகையாற் கிடைத்த தொகைப் பொருளாகும்.

2. 'அவை' என்பதனை 'அசை' எனத் திருத்திப் பொருள் கொள்ளுதல் வேண்டும்.

3. இருதிணை ஐம்பால் இயல்நெறி வழுவாவண்ணம் சொல்லதிகாரத்திற் கூறப்பட்ட திரிபில்லாத சொற்கள் இப்பொருளதிகாரத்தில் தம்பொருளை வேறு பட்டிசைப்பினும் பொருளாக அமைத்துக்கொள்ளப்படுமெனவும், இப்பொருளதி காரத்தில் முன்னர்க் கூறப்பட்ட பொருள்கள் வேறுபட்டிசைப்பினும் பொருளாக அமைத்துக்கொள்ளப்படும் எனவும் தனிச் சொற்பொருளும் தொடர்மொழிப்பொரு ளும் ஒருங்கே கூறலின் இவ்வியல் பொருளியல் என்னும் பெயருடையதாயிற்று என்பது இவ்வியலின் பொருளமைதி குறித்து நச்சினார்க்கினியர் தரும் விளக்க மாகும்.

வகைய என்கின்றது.[1]

(இ-ள்.) இசை திரிந்து இசைப்பினும்—சொற்கள் தத்தம் பொருளுணர்த்தாது வேறுபட்டிசைப்பினும் : அசை திரிந்து இயலா இசைப்பினும் - இவ்வதிகாரத்துள் யாத்த பொருள்கள் நாடக வழக்கும் உலகியல் வழக்குமாகிய புலனெறி வழக்கிற் றிரிந்து இயன்றிசைப்பினும் ; மன் பொருள்இயையும் என்மனார் புலவர்—அவை மிகவும் பொருளேயாய்ப் பொருந்து மென்று தொல்லாசிரியர் கூறுவர் (எ-று) அதனால் யானும் அவ்வாறு கூறுவலென்றார்.[2]

சொல்லாவது எழுத்தினான் ஆக்கப்பட்டுப் பொருளறி வுறுக்கும் ஓசையாதலின் அதனை இசையென்றார் ; இஃது ஆகு பெயர். அசைக்கப்பட்டது அசையென்பதும் ஆகுபெயர்.[3] 'நோயு மின்பமும்' (தொல். பொ. 196) என்பதனுள் 'இருபெயர் மூன்று முரிய வாக' என்பதனால் திணை மயங்குமென்றும், 'உண்டற் குரிய வல்லாப் பொருளை' (தொல். பொ. 213) என்றும் பிறாண் டுஞ் சொல் வேறுபட்டுப் பொருளுணர்த்துதலும், இறைச்சிப் பொருண் முதலியன நாடக வழக்கின் வழீஇயவாறுந், 'தேரும் யானையும்' (தொல். பொ. 212) 'அறக்கழிவுடையன' (தொல். பொ. 218) 'தாயத்தி னடையா' (தொல். பொ. 221) என்னுஞ்

---

1. பொருளியலுட் கூறப்படும் விதிகள் யாவும் சொற்பொருளின் வழுவமைதி யும் பொருளின் வழுவமைதியும் என இருதிறப்படும் என உணர்த்துதல் இம்முதற் சூத்திரத்தின் கருத்தென்பர் நச்சினார்க்கினியர். ஆயின் இக்கருத்தினை விளக்கு தற்குரிய வகையில் இச்சூத்திரத்தின் சொற்கிடக்கை அமையவில்லையென்பது இங்கு நினைக்கத்தக்கதாகும்.

2. இச்சூத்திரத்தின் தொடர்மொழியமைப்பினைக் கருத்திற் கொள்ளாது 'இசை திரிந்து இசைப்பினும் அசைதிரிந்து இயலா இசைப்பினும் மன் பொருள் இயையும்' எனத்தாம் விரும்பியவாறே சொற்களை முன்னும் பின்னும் கூட்டி நச்சி னார்க்கினியர் வரைந்துள்ள இவ்வுரை ஆசிரியர் கருத்துக்கும் சூத்திரச் சொற் கிடக்கைக்கும் சிறிதும் பொருந்துவதாக அமையவில்லை.

3. இசை—ஓசை; ஈண்டு ஓசையினையுடைய சொல்லுக்கு ஆயினமையின் ஆகுபெயர் என்றார். இது பண்பாகு பெயர். 'அசை' என்பதற்கு 'யாத்த பொருள் கள்' எனப்பொருள் கொண்டமையின் 'அசைக்கப்பட்டது அசை என்பதும் ஆகு பெயர்' என்றார். அசைத்தல்—கட்டுதல்., கட்டப்பட்ட பொருள்கட்கு ஆயினமை யின் இது தொழிலாகுபெயர் எனப்படும். 'அசைதிரிந்தியலா' எனப்பாடங்கொண் டார் நச்சினார்க்கினியர்.

சூத்திர முதலியன உலகியல்வழக்கின் வழீஇயவாறுங் கூறி, அவ் வழு அமைக்கின்றவாறு மேலே காண்க. புறத்திணையியலுட் புறத் திணை வழுக்கூறி அகப்பொருட்குரிய வழுவே ஈண்டுக் கூறுகின்ற தென்றுணர்க. [1]

'இயலா' என்றதனால் 'என்செய்வா' மென்றவழிப் 'பொன் செய்வா' மென்றாற்போல வினாவிற் பயவாது [2] இறைபயந்தாற் போல நிற்பனவுங் கொள்க. இன்னும் அதனானே செய்யுளிடத் துச் சொற்பொருளானன்றித் [3] தொடர்பொருளாற் பொருள் வேறு பட இசைத்தலுங் கொள்க. அது சூத்திரத்துஞ் செய்யுளுள்ளும் பொருள் கூறுமாற்றா னுணர்க. (க)

**ஆய்வுரை:** *களவும் கற்பும் என மேற்குறித்த அகத்திணை யொழுகலாற்றில் இடம் பெறுவதற்குரிய சொற்பொருளமைதியி னையும் பொருளின் அமைதியினையும் உணர்த்துதலின் இது பொருளியல என்னும் பெயர்த்தாயிற்று. அகப்பொருள் புறப் பொருள் என்பன இரண்டுபொருண்மையினும் இதுவரை கூறப் படாது எஞ்சிநின்றனவற்றைக் கூறுதலின் இதனை ஒழிபியல் எனினுங் குற்றமில்லை என்பர் இளம்பூரணர்.*

*சொல்லதிகாரத்திற் கூறிய சொற்களை மரபியலின் இரு திணையம்பால் இயல்நெறிவழாமைத் திரிபில்சொல் எனத் தொல காப்பியனார் கூறலின், அத்தகைய சொற்கள் புலனெறிவழக்கு மாகிய இவ்வகத்திணையொழுகலாற்றில் தம் பொருளை வேறு*

---

1. புறத்திணையியலிலுள்ள 'வெறியறிசிறப்பின்' (5) என்னும் முதற்குறிப்பு டைய சூத்திரம் புறத்திணைக்கெல்லாம் பொதுவாகிய வழுவேழும் உணர்த்திற் றென்பதும் அதுபோன்று அகப்பொருட்குரிய வழுவினை எடுத்துரைத்து அமைதி கூறும் முறையில் அமைந்தது பொருளியலாகிய இவ்வியலென்பதும் நச்சினார்க் கினியர் கருத்தாகும்.

2. 'வினாவிற் பயவாது' என்பதனை 'வினாவிறைபயவாது' எனத் திருத்திக் கொள்க. இறை—மறுமொழி. வினா இறை பயத்தலாவது, 'சாத்தா உண்டியோ, என வினாவிய நிலையில் 'உண்ணேனோ' எனவரும் அவன்கூற்று வினாவுக்கு வினாவாகக் காணப்பட்டாலும் 'உண்டேன்' என்னும் மறுமொழிப் பயனைத் தருதல்.

3. சொற்பொருள் என்றது, தொடர்மொழியில் அமைந்த ஒரு சொல்லுக் குரிய பொருளை. தொடர்ப்பொருள் என்றது, தொடர் மொழி முழுவதற்கும் உரிய பொருளமைப்பினை.

பட்டு இசைப்பினும் பொருளாகக்கொள்ளப்படுமெனவும், இப் பொருளதிகாரத்தில் முன்னர்க் கூறிய பொருளிற் பிறழ்ந்திசைப் பனவும் பொருளாகக் கொள்ளப்படும் எனவும் அமைத்து, இவ் வாறு சொல்லுணர்த்தும் பொருளும் தொடர்மொழியுணர்த்தும் பொருளும் ஒருங்கே கூறலிற் பொருளியல் என்றார் என்பர் நச்சினார்க்கினியர். இப்பொருளியலிற் கூறப்பட்டனயாவும் சொற் பொருளின் வழுவமைதியும் பொருளின் வழுவமைதியும் என இரு பகுதிப்படுமென்பதும், புறத்திணையியலுட் புறத்திணை வழுக்கூறி அகப்பொருட்குரிய வழுவே இவ்வியலிற் கூறுகின்றதென்பதும் நச்சினார்க்கினியர் கருத்தாகும்.

அகப்பொருளொழுகலாற்றில், தலைவன், தலைவி தோழி முதலியோர் உரையாடுதற்குரிய சொற்பொருள் அமைதியினையும் அவருடைய உரையாடல்களில் அமைதற்குரிய பொருள்வகை யினையும் சிறப்புமுறையில் விரித்துக் கூறுவது இப்பொருளியல் எனக் கருதுதல் பொருந்தும். இவ்வியலிலுள்ள சூததிரங்கள் 52 ஆக இளம்பூரணருரையிலும் 54-ஆக நச்சினார்க்கினியருரையி லும் பகுத்து உரை வரையப்பெற்றுள்ளன. இளம்பூரணர் உரையுள 'அன்பேயறனே' என்னும் முதற்குறிப்புடைய சூத்திரம் ஏடெழுதுவோர் பிழையால விடுபட்டதாயினும் அதற்குரிய உரை யின் குறைப்பகுதிகாணப்படுதலால் அவர்கருத்துப்படி பொருளி யற் சூத்திரங்கள் 53 எனக்கொள்ளுதல் பொருத்தமுடையதாகும்.

முதற்சூத்திரமாகிய இது, தொடர்மொழிகள் தம்முள் வேறு பட்டனவாகச் சொல்வகையால் திரிந்துவரினும் பொருளில் வேறு படாது இயைதல் உண்டு என்கின்றது.

(இ-ள்) சொற்கள் தம்முள் தொடர்வுபடும் வாய்பாட்டால் தொடர்ந்து நில்லாது பிறிதோர் வாய்பாட்டால் தொடர்ந்து நிற்பி னும் சொல்லக்கருதிய பொருள் இயைபுபெறப் புலப்படும். அந் நிலையிற் சொற்களுக்கு உறுப்பாகிய அசைச்சொற்கள் திரிந்து ஒலியா என்று கூறுவர் புலவர் எ-று.

இசை- சொல., என்றது, தொடர்மொழிகளை. திரிந்து இசைத்தலாவது தொடர்ந்து பொருள்கொள்ளுதற்கேற்ற ஒத்த வாய்பாடுகளாக அமைதலின்றி வேறுவேறு தொடர்மொழிக ளாகக் கூறப்படுதல். அசை- மொழிக்கு உறுப்புக்களாகிய விகுதி முதலியன.

இளம்பூரணர் உரையில் எடுத்துக்காட்டப்பெற்ற 'கார்விரி கொன்றைப் பொன்னேர்புதுமலர்த்தாரன்' எனவரும் அகநானூற்றுக கடவுள்வாழ்த்துப் பாடலின்கண் 'தாரன்' 'மாலையன்' என்றாங்கு ஆண்பாற்குறிப்புவினைமுற்றும் 'நுதலது இமையா நாட்டம்' மூவாய்வேலும்உண்டு, என்றாங்கு ஒன்றன்பாற் குறிப்புவினைமுற்றும், 'சேர்ந்தோள் உமை' என உயர்திணைப்பெண்பால் தெரிநிலைவினைமுற்றும் ஆகப்பால வேறுபட்ட தொடர்மொழிகள் இடையிடையே விரவிவந்தாலும் இடைக்கிடந்த தொடர்மொழிகளின் வாய்பாடுகள் சொல் தொடர்புடையனவாய்த் தம்முட் சேராதநிலையில் அவ்வாய்பாடுகளாற் கூறப்படும் பொருள்களாற் போந்த பொருள்களைமட்டும் கருத்துவகையாற் கொண்டு பொருள்கூற, அத்தொடர்மொழிச்சொற்கள திரிந்து தம்முட் பொருளால் இயைந்து சேர்ந்தமையும், அச்சொற்களின் உறுப்புக்களாகிய அசைச்சொற்கள் தத்தம் நிலையிற் குலையாதபடியே நின்று பொருள்பட்டமையும், அப்பாடற்கு இளம்பூரண அடிகள் வரைந்துகாட்டிய உரையால் இனிது புலனாதல் காண்க.

உ. நோயும் இன்பமும் இருவகை நிலையிற்
காமம் கண்ணிய மரபிடை தெரிய
எட்டன் பகுதியும் விளங்க ஒட்டிய
உறுப்புடை யதுபோல் உணர்வுடை யதுபோல்
மறுத்துரைப் பதுபோல் நெஞ்சொடு புணர்த்துஞ்
சொல்லா மரபி னவற்றொடு கெழீஇச்
செய்யா மரபிற் றொழிற்படுத் தடக்கியும்
அவரவர் உறுபிணி தமபோற் சேர்த்தியும்
அறிவும் புலனும் வேறுபட நிறீஇ
இருபெயர் மூன்றும் உரிய வாக
உவம வாயிற் படுத்தலும் உவமம்
ஒன்றிடத் திருவர்க்கும் உரியபாற் கிளவி.

**என்—எனின், ஒருசார் காமப்பொருண்மைபற்றி நிகழ்வதோர் கிளவி யுணர்த்திற்று.[1]**

---

1. காமத்திணையெனப்படும் அகப்பொருளொழுகலாற்றிலொழுகும் காதலர்பால் இடம்பெறும் ஒருசார்பொருள்வகை பற்றிய கூற்றுக்களை வகுத்துரைப்பது இச்சூத்திரம்.

(இ-ள்,) நோயும் இன்பமும் இருவகை நிலையிற் காமங் கண்ணிய மரபிடை தெரிய எட்டன் பகுதியும் விளங்க[1] ஒட்டிய உறுப்புடையதுபோல் உணர்வுடையதுபோல் மறுத்துரைப்பது போல் நெஞ்சொடு புணர்த்தும் என்பது—துன்பமும் இன்பமும் ஆகிய இருவகை நிலையினையுமுடைய காமத்தைக் குறித்த மரபு இடையீடுபடுதலான் மெய்ப்பாடு எட்டாகிய எட்டன் பகுதியும் விளங்கப் பொருந்திய உறுப்புடையது போலவும் உணர்வுடையது போலவும் மறுத்துரைப்பது போலவும் நெஞ்சொடு புணர்த்துக் கூறியும் என்றவாறு.

'காமங்கண்ணிய' என்றதனால் அகப்பொருளாகிய காமமும் புறப்பொருளாகிய காமமும் கொள்ளப்படும். 'இடைதெரிய' என்பதனை,

> "இன்பம்
> இடைதெரிந் தின்னாமை நோக்கி மனையாறு
> அடைவொழிந்தார் ஆன்றமைந் தார்" (நாலடி. ருச)

என்றாற் போலக் கொள்க. 'தெரிய' என்னும் செயவெனெச்சம் ஏதுப் பொருண்மை குறித்துநின்றது. மெய்ப்பாடு எட்டாவது :— நகை, அழுகை, உவகை, இளிவரல், அச்சம், பெருமிதம், மருட்கை வெகுளி ; இவற்றின் பகுதி மெய்ப்பாட்டியலுட் காண்க. இம் மெய்ப்பாடு உறுப்புடையதுபோலச் சொல்லப்பட்ட நெஞ்சின்கட் புலப்பட என்றவாறு.

சொல்லா மரபினவற்றொடு கெழீஇச் செய்யா மரபிற் றொழிற்படுத்தடக்கியும் என்பது—சொல்லாத மரபினையுடையவற் றோடு கெழுமி அவை செய்யாத மரபை யாண்டுப் படுத்தியவற்றை யும் நெஞ்சினைப் போல அடக்கியும் என்றவாறு.

சொல்லாமரபின ஆவன—புள்ளும், மாவும், மரனும், கடலும், கானலும் முதலாயின. செய்யா மரபாவன—தூதாச் சேறலும் வருதலும் உளபோலக்கூறும் அவைபோல்வனவும் பிறவும்.

---

1. எட்டன்பகுதியும் விளங்க—எண்வகைமெய்ப்பாடுகளும் உறுப்புடையது போற்கூறப்பட்ட நெஞ்சின்கண் விளங்க.

அவரவருறுபிணி தமபோற் போற்றியும் என்பது—யாவர் சிலர் யாதொரு பிணியுற்றார் அவருற்ற பிணியைத் தாமுற்ற பிணி போலச் சேர்த்தியும் என்றவாறு.[1]

'அவரவர்' என்பது உயர்திணையாய்க் கூறினும் இருதிணையுங் கொள்ளப்படும்.

''ஒருபாற் கிளவி ஏனைப்பாற் கண்ணும்
வருவகை தானே வழக்கென மொழிப''(பொருளியல். உஎ)
என்பதனால்.

அறிவும் புலனும்[2] வேறுபட நிறீஇ இருபெயர் மூன்றும் உரியவாக வுவமவாயிற் படுத்தலும் உவமம்[3] ஒன்றிடத்து என்பது—அறிவையும் அறியப்படும் பொருளையும் வேறுபட நிறுத்தி இருவகைப்பட்ட பெயரும் மூவகைப்பட்ட பொருட்கும் உரித்தாக உவமம் பொருந்து மிடத்து உவமவாயிற் படுத்தலும் என்றவாறு.

வேறுபட நிறுத்தலாவது—தத்தம் நிலைமை யொழிய வென்றவாறு. இருபெயராவது—உவமைப்பெயரும் உவமிக்கும் பெயரும். மூன்றும் உரியவாகும் என்பது—தொழிலும் பண்பும் பயனும். 'உவமம் ஒன்றிடத்து' என்றதனை மொழி மாற்றுக

இருவர்க்கும் உரிய பாற் கிளவி[4] என்பது—தலைமகற்குந் தலைமகட்கும் உரிய வொருகூற்றுக் கிளவி என்றவாறு.

---

1. 'அவரவருறுபிணிதமபோற் சேர்த்தியும்' என்பதே இளம்பூரணர் கொண்ட பாடம், 'அவரவர்' என உயர்திணையாற் கூறினும் 'அவையவை'என அஃறிணையும் கொள்ளப்படும் என்பதாம்.

2. உவமைக்கும் பொருளுக்கு மிடையேயமைந்த பொதுத்தன்மைகளை வினை பயன் மெய் உரு என உவமவியலில் நான்காகப் பகுத்துரைக்கும் தொல்காப்பியர் இங்கு அவற்றை 'மூன்று' எனக் குறித்தார் என்றல் பொருந்தாது.

3. உவமம் ஒன்றிடத்து உவமவாயிற்படுத்தலும் என இயைத்துப்பொருள் வரையப்பெற்றது.

4. உணர்ச்சி வசப்பட்டு உள்ளக்கலக்கமுற்ற ஒருதிறத்தார்க்கே யுரியதாய்ப் பயின்று வரும் கூற்றுவகை பாற்கிளவி எனப்படும். பால்—பக்கம். கிளவி-சொல்வகை.

அவற்றுள் நெஞ்சொடு புணர்த்தற்கு உதாரணம்:—

"கைகவியாச் சென்று கண்புதையாக் குறுகிப்
பிடிக்கை யன்ன பின்னகந் தீண்டித்தன்
தொடிக்கை தைவரத் தோய்ந்தன்று கொல்லோ
நாணொடு மிடைந்த கற்பின் வாணுதல்
அந்தீங் கிளவிக் குறுமகள்
மென்தோள் பெறநசைஇச் சென்றஎன் நெஞ்சே"
(அகம்.க)

என்பது உறுப்புடையதுபோல உவகைபற்றி வந்தது.

"சென்றதுகொல் போந்ததுகொல் செவ்வி பெறுந்
துணையும்
நின்றதுகொல் நேர்மருங்கிற் கையூன்றி—முன்றில்
முழங்குங் கடாயானை மொய்ம்மலர்த்தார் மாறற்கு
உழந்துபின் சென்றஎன் நெஞ்சு."(முத்தொள்ளாயிரம்.சுக)

இது அவலம்பற்றி நெஞ்சினை உறுப்புடையதுபோற் கூறிய பெண் பாற் கூற்று.

"உள்ளம் பிணிக்கொண் டோள்வயின் நெஞ்சஞ்
செல்லல் தீர்கஞ் செல்வா மென்னும்."(நற்றிணை.உஅச)

என்றவழி உணர்வுடையது போல் இளிவரல் பற்றிவந்த தலை மகன் கூற்று.

"குறுநிலைக் குரவின் சிறுநனை நறுவீ
வண்டுதரு நாற்றம் வளிகலந் தீயக்
கண்களி பெறூஉங் கவின்பெறு காலை
யெல்வளை நெகிழ்த்தோற் கல்ல லுறீஇயர்
சென்ற நெஞ்சம் செய்வினைக் குசாவா
தொருங்குவரல் நசையொடு வருந்துங் கொல்லோ
அருளா னாகலின் அழிந்திவண் வந்து
தொன்னலன் இழந்தஎன் பொன்னிறம் நோக்கி
ஏதி லாட்டி இவளெனப்
போயின்று கொல்லோ நோய்தலை மணந்தே."
(நற்றிணை.நக)

இஃது உணர்வுடையது போல் இளிவரல்பற்றி வந்த தலைமகள் கூற்று

"நின்மொழிகொண் டியானோ விடுவேன்மற் றென்மொழிகொண்
டென்னெஞ்சம் ஏவல் செயின்." (கலித்.ககரு)

இது மறுத்துரைப்பது போல் தலைமகன் கூற்று: உவகைபற்றி வந்தது.

"அவர்நெஞ் சவர்க்காதல் கண்டும் எவனெஞ்சே
நீயெமக் காகா தது." (குறள்.கஉகக)

இதுவும் மறுத்துரைப்பதுபோல் தலைவி கூற்று: இளிவரல்பற்றி வந்தது.

"இருளிடை மிதிப்புழி நோக்கியவர்
தளரடி தாங்கிய சென்றவெ னெஞ்சு.[1] (அகம் கஉஅ)

இஃது அச்சம்பற்றி வந்தது. பிறவு மன்ன.

சொல்லாமரபி னவற்றொடு கெழீஇச் செய்யாமரபிற் றொழிற்படுத் தடக்கியும் என்பதற்குச் செய்யுள்:—

"கானலுங் கழறாது கழியுங் கூறாது
தேனிமிர் நறுமலர்ப் புன்னையும் மொழியாது
ஒருநீ அல்லது பிறி தியாதும் இலனே
இருங்கழி மலர்ந்த கண்போல் நெய்தற்
கமழிதழ் நாற்றம் அமிழ்தென நசைஇத்
தண்டா தூதிய வண்டினங் களி சிறந்து
பறைஇய தளருந் துறைவனை நீயே
சொல்லல் வேண்டுமால்..." (அகம். கஎ0)

என்பது தலைவி கூற்று. தலைவன் கூற்று வந்தவழிக்காண்க.

அவரவர் உறுபிணி தமபோற் சேர்த்தியதற்குச் செய்யுள்:—

"பாய்திரை பாடோவாப் பரப்புநீர்ப் பனிக்கடல்
தூவறத் துறந்தனன் துறைவனென் றவன்றிறம்
நோய்தெற உழப்பார்கண் இமிழ்தியோ எம்போலக்
காதல்செய் தகன்றாரை உடையையோநீ" (கலித் கஉக)

1. பிறவு மன்ன.

அறிவும் புலனும் வேறுபட நிறீஇ உவமவாயிற்படுத்தற்குச் செய்யுள்:—

"ஓங்கெழிற் கொம்பர் நடுவி தெனப்புல்லும்
காந்தட் கிவருங் கருவிளம் பூக்கொள்ளும்
மாந்தளிர்க் கையில் தடவரு மாமயில்
பூம்பொழில் நோக்கிப் புகுவன பின்செல்லும்
தோளெனச் சென்ற துளங்கொளி வேய்தொடும்
நீள்கதுப் பிஃதென நீரற் றறல்புகும்
வாளொளி முல்லை முகையை முறுவலென்று
ஆள்வலி மிக்கான் அஃதறி கல்லான்."

இவை, இடையுங் கையு முதலாகிய உறுப்புக்களைப் பற்றிய உவமவாயிற்படுத்தறியும் அறிவையும் அறியப்படும் பொருளையும் வேறுபட நிறுத்தி உவமம் பொருந்தியவழிக் கூறியவாறு காண்க. வேயைத் தோள் போலுமென்னாது தோளென்று தொட்டமையால் அறியப்படும் பொருள் வேறுபட்டது. அதனைத் திரியக் காண்டலால் அறிவு வேறுபட்டது. பித்துங்களியும் போல் முலையெனச் சென்று வேயைத்தொடும் என்னாது தோளெனச் சென்று வேயைத் தொட்டமையால் உவமம் ஒன்றியவழி உவமவாயிற் படுத்தது. (உ)

நச்சினார்க்கினியம் :

இது, முற்கூறிய இருவகையானும் பொருள்வேறுபட்டு வழீஇ யமையுமாறு கூறுகின்றது.

(இ - ள்.) நோயும் இன்பமும் இருவகை நிலையிற் காமம் கண்ணிய மரபிடை தெரிய - துன்பமும் இன்பமுமாகிய இரண்டு நிலைக்களத்துங் காமங் கருதின வரலாற்று முறைமையிடம் விளங்க; எட்டன் பகுதியும் விளங்க - நகை முதலிய மெய்ப்பாடு எட்டனுடைய கூறுபாடுந் தோன்ற; அறிவும் புலனும் வேறுபட நிறீஇ இருபெயர் மூன்றும் உரியவாக [1] - மனவறிவும்

1. இருபெயர் மூன்றும் உரியவாதல் என்றது, அஃறிணையில் ஒன்றன்பால் பலவின்பாலாகிய இருபாலின் கண்ணும் உயர்திணைக்குரிய ஆண்பால் பெண்பால் பலர்பால் ஆகிய மூன்று வகைப்பொருள்களும் பொருந்த அமைதல்... என்றது 'நெஞ்சு' என்னும் அஃறிணையொருமை தலைவன் நெஞ்சாக அமையும் போது அதனை உயர்திணை ஆண்பாலாகவும் தலைவியின் நெஞ்சாக அமையும் போது உயர்திணைப் பெண்பாலாகவும் பன்மையாற்கூறும் வழிப் பலர்பாலாகவும் கொள்ளுதல்.

பொறியறிவும் வேறுபட நிறுத்தி அஃறிணை யிருபாற்கண்ணும் உயர்திணை மூன்றுபொருளு முரியவாக; அவரவர் ஒட்டிய உறுப் புடையதுபோல் உணர்வுடையதுபோல் மறுத்துரைப்பது போல் நெஞ்சொடு புணர்த்தும் - கூறுகின்ற அவரவர் தமக்குப் பொருந்திய உறுப்பெல்லாம் அதுவுடையது போலவும் உணர்வுடையது போல வும் மறுமாற்றந் தருவதுபோலவும் தந்நெஞ்சொடு புணர்த்துச் சொல்லியும்; சொல்லா மரபினவற்றொடு கெழீஇச் செய்யாமர பிற் றொழிற்படுத்து அடக்கியும் - வார்த்தை சொல்லா முறைமை யுடையனவாகிய புள்ளும் மாவும் முதலியவற்றோடே அவை வார்த்தை கூறுவனவாகப் பொருந்தி அவை செய்த லாற்றாத முறைமையினையுடைய தொழிலினை அவற்றின் மேலே ஏற்றியும்; உறுபிணி தமபோலச் சேர்த்தியும்—அச்சொல்லா மரபினவை உற்ற பிணிகளைத் தம் பிணிக்கு வருந்தின போலச்சார்த்திக்கூறியும்; உவ மம் ஒன்றிடத்து உவமவாயிற்படுத்தலும் - அம் மூவகைப்பொருளை உவமஞ்செய்தற்குப் பொருந்துமிடத்து உவமத்தின் வழியிலே சார்த் திக்கூறுதலும்; இருவர்க்கும் உரிய பாற்கிளவி - அத் தலைவர்க்குந் தலைவியர்க்கு முரிய இலக்கணத்திற் பக்கச் சொல் (எ · று)

தெரிய விளங்க உரியவாகப் புணர்த்தும் அடக்கியுஞ் சேர்த் தும் அவற்றைப் படுத்தலும் இவ்விருவர்க்குமுரிய பாற்கிளவியென முடிக்க. 'அவரவ' ரென்கின்றார், அகத்திணையியலுட் பலராகக் கூறிய தலைவரையுந் தலைவியரையும். 'இருவ' ரென்றதும் அவரென்னுஞ் சுட்டு. நெஞ்சென்றும் அஃறிணை யொருமையைத் தெரியவிளங்கத் தலைவன் கூறும்வழி உயர்திணையாண்பாலாகவுந் தலைவி கூறும்வழி உயர்திணைப்பெண்பா லாகவும் பன்மையாற் கூறும்வழிப் பன்மைப்பாலாகவுங் கொள்க. என்றுஞ்சொல்லா மரபினவற்றையும் உயர்திணைப் பாலாக்கியும் அவற்றைத் தம போலச் சேர்த்திக் கூறுபடுத்து உயர்திணை முப்பாலாக்கியுங் கூறுபவென வழுவமைத்தார். இருவகை நிலைக்களத்து எட்டனை யுஞ் சேர்க்கப் பதினாறாம். அவற்றை நெஞ்சொடு சேர்க்கப் பலவா மென்றுணர்க.

''உண்ணாமையின்'' என்னும் (123) அகப்பாட்டினுள்,

---

1. இருவகை நிலைக்களமாவன நோயும் இன்பமும். எட்டென்பன நகை முதலிய எண்வகை மெய்ப்பாடுகள்.

''இறவொடு வந்து கோதையொடு பெயரும்
பெருங்கடல் ஓதல் போல
ஒன்றிற் கொள்ளாய் சென்றுதரு பொருட்கே''

என்றவழி ''அழிதக வுடைமதி வாழிய நெஞ்சே'' என்றதனான் நிலையின்றாகுதியென நெஞ்சினை உறுப்புடையது போலக் கழறி நக்குரைத்தவாறும் ஓதத்தையும் நெஞ்சையும் உயர்திணையாக்கி உவமவாயிற்படுத்தவாறுங் காண்க.

''கைகவியாச் சென்று...நெஞ்சே.'' (அகம்.9)

இஃது,உறுப்புடையதுபோல் உவந்துரைத்தது.

''அன்றவ ணொழிந்தன்று மிலையே'' என்னும்(19) அகப் பாட்டினுள்,

''வருந்தினை வாழியென் நெஞ்சே பருந்திருந்
துயாவிளி பயிற்றுமி யாவுயர் நனந்தலை
உருள்துடி மகுளியின் பொருள்தெரிந் திசைக்கும்
கடுங்குரற் குடிஞைய நெடும்பெருங் குன்றம்
எம்மோ டிறத்தலும் செல்லாய் பின்னின்று
ஒழியச் சூழ்ந்தனை யாயின் தவிராது
செல்லினிச் சிறக்கநின் னுள்ளம்''

என அறிவுடையதுபோல் அழுகைபற்றிக் கூறிற்று.

''பூவில் வறுந்தலை போலப் புல்லென்
றினைமதி வாழிய நெஞ்சே'' (குறுந்.19)

என்றது உணர்வுடையதுபோல் வெகுளிபற்றிக் கூறிற்று.

''.................
உள்ளம் பிணிக்கொண்டோள்வயி னெஞ்சஞ்
செல்லல் தீர்கஞ் செல்வா மென்னும்
செய்வினை முடியா தெவ்வஞ் செய்தல்
எய்யா மையோ டிளிவுதலைத் தருமென
உறுதி தூக்கத் தூங்கி அறிவே
சிறிதுநனி விரையல் என்னும் ஆயிடை
ஒளிறேந்து மருப்பிற் களிறுமாறு பற்றிய
தேய்புரிப் பழங்கயிறு போல

வீவது கொல்லென் வருந்திய உடம்பே.'' (நற்றிணை 284)

இஃது, உணர்வுடையதுபோல இளிவரல் பற்றிக் கூறியது.

''ஈதலுந் துய்த்தலும் இல்லோர்க்கு இல்லெனச்
செய்வினை கைம்மிக எண்ணுதி யவ் வினைக்கு
அம்மா அரிவையும் வருமோ
எம்மை யுய்த்தியோ வுரைத்திசி னெஞ்சே.'' (குறுந். 63)

இது, மறுத்துரைப்பதுபோல நெஞ்சினை இளிவரல்பற்றிக் கூறியது.

''பின்னின்று துரக்கும் நெஞ்சம் நின்வாய்
வாய்போற் பொய்ம்மொழி எவ்வமென் களைமா'' (அகம்.3)

என்பதும் அது.

''விசும்புற நிவந்த'' (அகம். 131) என்பதனுள்,

''வருகவென் னுதி யாயின்
வாரேன் நெஞ்சம் வாய்க்கநின் வினையே''

என்பது, மறுத்துரைப்பதுபோற் றறுகண்மைபற்றிய பெருமிதங் கூறிற்று. ஏனை அச்சமும் மருட்கையும் பற்றியன தலைவன் கூற்று வந்துழிக் காண்க. இவை நெஞ்சை ஆண்பாலாகக் கூறியன.

''மன்றுபா டவிந்து'' (அகம். 128) என்பதனுள் ''நெஞ்சம்...தளரடி தாங்கிய சென்ற தின்றே'' என்பது உறுப் புடையதுபோல் அழுகைபற்றிக் கூறியது.

''குறுநிலைக் குரவின்'' (நற்றிணை 56) என்பத உறுப்பும் உணர்வுமுடையதுபோல இளிவரல்பற்றிக் கூறியது.

''அறியவும் பெற்றாயோ வறியாயோ மடநெஞ்சே.''
(கலி. 123)

இஃது, உணர்வுடையதுபோல் நகைபற்றிக் கூறியது.

''கோடெழி லகலல்குற் கொடியன்னார் முலைமுழ்கிப்
பாடழி சாந்தினன் பண்பின்றி வரினெல்லா
ஊடுவேன் என்பேன்மன் அந்நிலையே அவற்காணிற்
கூடுவேன் என்னுமிக் கொள்கையில் நெஞ்சே.'' (கலி- 67)

இது மறுத்துரைப்பதுபோல் உவகைபற்றிக் கூறியது.

"அவர்நெஞ் சவர்க்காதல் கண்டு மெவனெஞ்சே
நீயெமக் காகா தது." (குறள், 1291)

இஃது, இளிவரல் பற்றி மறுத்துக் கூறியது. ஏனைய வந்துழிக் காண்க. இவை நெஞ்சினைத் தலைவி பெண்பாலாகக் கூறியன. இவை துன்பமும் இன்பமும் நிலைக்களமாகக் காமங் கண்ணிய மரபிடை தெரிய வந்தன.

"கானலுங் கழறாது ...அலவ." (அகம் 170)

இது சொல்லா மரபின சொல்லுவனவாக அழுகைபற்றிக் கூறியது. இவை உயர்திணையுமாயிற்று.

"கொங்குதேர் வாழ்க்கை............" (குறுந் 2)

என்பது உவகைபற்றிக் கூறியது.

"போர்தொலைந் திருந்தாரைப் பாடெள்ளி நகுவார்போல்
ஆரஞ ருற்றாரை யணங்கிய வந்தாயோ." (கலி. 120)

இது, செய்கையில்லாத மாலைப்பொழுதினைச் செய்யா மரபில் தொழிற்படுத்தடக்கி உவமவாயிற்படுத்தது.

"தொல்லூழி தடுமாறி" (கலி, 129) என்பதனுள்,

"பாய்திரை பாடோவாப் பரப்புநீர்ப்......
இனியசெய் தகன்றாரை யுடையையோ நீ;" (கலி. 129)

எனக் கடலும் அன்றிலுங் குழலும் உற்ற பிணியைத் தம் பிணிக்கு வருந்தினவாகச் சேர்த்தி உயர்திணையாக்கி உவமவாயிற்படுத்த வாறு காண்க.

'ஒன்றிடத்' தென்றார்; வேண்டியவாறு உவமங்கோடலாகா தென்றற்கு. பகுதியைப் 'பால்கெழு கிளவி' (தொல். பொ. 5) என மேலும் ஆளுப. 'காமங்கண்ணிய' என்றதனாற் கைக்கிளையும் பெருந்திணையுமாகிய காமத்திற்கு வருவனவுங் கொள்க.

"சென்றதுகொல் போந்ததுகொல்" (முத்தொள்.)

இது கைக்கிளைக்கண் உறுப்புடையதுபோல் அவலம்பற்றி நெஞ்சினைக் கூறியவ

''ஓங்குசெழிற் கொம்பர் நடுவீ தெனப்புல்லும்''
என்றாற்போல உயர்திணையாக உவமவாயிற்படுத்த பெருந்திணையாய் வருவனவுங் காண்க. இஃது அவலம்.

**ஆய்வுரை :** இஃது அகப்பொருளொழுகலாற்றில் ஒழுகுவோர் பால் இடம்பெறும் ஒருசார் பொருள்வகைபற்றிய கிளவிகளை வகுத்துக் கூறுகின்றது.

(இ—ள்) துன்பமும் இன்பமுமாகிய இருவகைநிலையினையும் உடைய காமத்தைக் கருதிய இயல்பு புலனாக எண்வகை மெய்ப்பாடுகளும் விளங்கப் பொருந்திய உறுப்புடையது போலவும் உணர்வுடையதுபோலவும் தனது கூற்றினை மறுத்துரைப்பது போலவும தமது நெஞ்சொடு சோததுக்கூறியும், பேசும் ஆற்றலில்லாத பறவை விலங்கு முதலியவற்றொடு பொருந்தி அவை செய்யாதனவற்றைச் செயவனவாகத் தொழிற்படுத்திக் கூறியும் பிறருற்ற பிணியைத் தம்பொருட்டு நேர்ந்ததாகத் தம்மொடு சேர்த்தும், அறிவையும் அறிதற்கு வாயிலாகிய பொறிபுலன்களையும் தமக்கு வேறுபடநிறுத்தி அஃறிணை இருபாற்பொருள்களும் உயர்திணைமுப்பாற் பொருள்களின் பண்புக்குந்தொழிலுக்கும் உரியனவாக உவமம் பொருந்துமிடத்து உவமங் கூறுதலும் தலைவன் தலைவியென்னும் காதலரிருவர்க்கும் உரிய ஒருகூற்றுச் சொல்லாம். எ—று

நோய்—துன்பம். காமம் கண்ணிய—காமவுணர்வினைக் குறித்த. இடை தெரிதல்—இடையீடுபடுதல். எட்டன்பகுதி—நகை முதலிய எண்வகைமெய்ப்பாடுகள். ஒட்டியவுறுப்பு என்றது, முதலுஞசினையுமாகப் பிரிவின்றிப் பொருந்திய வுறுப்புக்களை. நெஞ்சமாகிய அகக்கருவிக்கு வினைமுதலாந் தன்மையும் கைகால முதலியவுறுப்புக்களும், உயிரின் தூண்டுதலின்றித் தானேயுணருமஉணர்வும, தன்னைக கருவியாகச் செயற்படுததுவோர் கூறியவற்றை மறுத்துரைக்குந்திறனும் இல்லையானாலும், காமததின வயப்பட்டகாதலர்கள் தம்முடைய நெஞசததிற்குக் கைகால் முதலிய உறுப்புககளும்தானேயுணரும் உணர்வும பிறர்கூற்றுக்களை மறுத்துரைக்கும் உரைத்திறமும் உள்ளனபோலத தமக்குள் கூறிக் கொள்ளுதல் உலகியலில வழங்கும் சொற்பொருள் மரபாகும் என்பதனைப் புலப்படுததும் நிலையில் அமைந்தது. 'ஒட்டிய வுறுப்புடையதுபோல உணர்வுடையதுபோல் மறுத்துரைப்பதுபோல் நெஞ்சொடுபுணர்த்தும்' எனவரும் தொடராகும்.

மக்கள் தம்முள் உரையாடுதற்குரிய மொழியிலே வார்த்தை சொல்லாமரபினவாகிய பறவை விலங்கு முதலிய அஃறிணைப் பொருள்களை நோக்கி, அவை தமமைப்போன்று ஒருவர்பாற் சென்று உரையாடுந் திறமுடையனவாகக் கொண்டு தூதாக விடுதலும், தாம் ஏவியபணிகளைச் செய்யும் செயற்றிறமுடையன வாகக் கொண்டு அவற்றைத் தாம விரும்பிய பணிகளில் ஏவித் தொழிற்படுத்துதலும் ஆகிய இவை, பகுததுணர்வுடையார்பால இடம்பெறுதல் பொருந்தாவாயினும், காமத்திணையிலொழுகும் காதலர் கூற்றுக்களில இவை இடம் பெறுதல் இயலபு என்பது புலப்பட ''சொலலாமரபினவற்றொடு கெழிஇச் செய்யாமரபிற் றொழிற்படுத்தடக்கியும்' என்றார் ஆசிரியர். கெழுவுதல்—அன்பு கூர்ந்துநண்பாய்ப பொருந்திப்பழகுதல். தொழிற்படுதது அடககு தலாவது தாம் ஏவிய பணிகளை அவை செய்வனவாகத் தம் முள்ளத்து உறுதியாகக் கொள்ளுதல்.

தம்மாற் காணப்பட்ட உயிர்ப்பொருள் உயிரல்பொருள் களின் இயல்பினைக் குறித்துக் காதலராய தமது துன்பங்கண்டு அவைதுயரமுற்றன.ாக எண்ணி வருந்துதலுங் காமமுற்றார் இயலபு என்பது புலப்படுத்துவார், 'அவரவருறுபிணிதமபோற் சேர்த்தியும்' என்றார். அறிவு என்றது, உயிரினது மன அறிவினை. புலன் என்றது அவ்வறிவினால் ஐம்பொறிவாயிலாக அறியப்படும் பொருள்களை. வேறுபட நிறுத்தல் என்றது, உவமையும் உவமிக் கப்படும் பொருளும் தம்முள் மாறித் தோன்றுமாறு அமைத்தல். ''இருபெயர்''என்றது ஒன்றன்பால் பலவின்பால் எனப்பகுத்துரைக் கப்படும அஃறிணைப்பொருள்களை. 'மூன்று'என்றது ஆண்பால் பெண்பால் பலர்பால் எனப்பகுத்துரைக்கப்படும் உயர்திணைப் பொருள்களை பெயர்—பொருள் இருபெயர்மூன்றும் உரியவாத லாவது, அஃறிணையிருபாற்பொருள்களும் உயர்திணை முப்பாற் பொருள்களின் தன்மைக்கும் தொழிற்கும் உரியவாதல், இருபெயர் மூன்றுக்கும் உரியவாக எனக் குவ்வுருபு விரித்துப்பொருள்கொளக.

'இருவர்' என்றது, காமுற்றார் இருவரை. பாற்கிளவி என்றது, உலகியலில் உணர்வுடையார் எலலார்க்கும் உரியகூற்றா காது காமமிக்க ஒருவன் ஒருத்தியாகிய காதலர் இருவர்பால் மட்டுமே நிகழ்தற்குரிய கூற்றுவகையினை. பால்—பக்கம் கிளவி—கூற்று.

௩. கனவும் உரித்தால் அவ்விடத்தான.[1]

இளம்பூரணம் :

என்—எனின். இதுவுங் காமம் இடையீடுபட்டுழி வருவ தோர் பொருள் வேறுபாடு உணர்த்திற்று

(இ-ள்.) மேற்கூறியவாற்றால் காமம் இடையீடுபட்டுழிக் கனாக் காண்டலும் உரித்தென்றவாறு.

இது தலைமகற்குந் தலைமகட்கும் உரித்து.

"இன்னகை இனைய மாகவும் எம்வயின்
ஊடல் யாங்குவந் தன்றென யாழநின்
கோடேந்து புருவமொடு குவவு நுதல் நீவி
நறுங்கதுப் புளரிய நன்ன ரமையத்து
வறுங்கை காட்டிய வாயல் கனவின்
ஏற்றேக் கற்ற வலமரல்
போற்றா யாகலிற் புலத்தியால் எம்மே" (அகம் ௩௯)

என்றது தலைவன் கனாக் கண்டு கூறியது.

"கேட்டிசின் வாழி தோழி அல்கற்
பொய்வ லாளன் மெய்யுறல் மரீஇ
வாய்த்தரு பொய்க்கனா மருட்ட ஏற்றெழுந்து
அமளி தைவந் தனனே குவளை
வண்டுபடு மலரிற் சாஅய்த்
தமியேன் மன்ற அளியன் யானே" (குறுந்.௩0)

இது, தலைவி கனாக் கண்டு கூறியது. (௩)

நச்சினார்க்கினியம் :

இது, மேற்கூறிய நிலைமைகள் கனவின்கண்ணும் நிகழு மெனப் பகுதிக்கிளவி கூறுகின்றது.

(இ - ள்.) அவ்விடத்தான - முன்னர் வழுவமைத்த நிலைமை யின் கண்ணே வந்தன ; கனவும் உரித்தால் · கனவும் உரித்தா

1. அவ்விடத்தான கனவும் உரித்து என இயையும். அவ்விடத்தான— அவ்விடத்தின்கண். ஆனுருபு ஏழாம் வேற்றுமைப்பொருளில் வந்தது. அவ்விடம் என்றது மேலைச் சூத்திரத்துட் கூறியவாறு காதலர் இருவரும் தம்முட் கூடப் பெறாது இடையீடு பட்ட நிலைமையினை. ஆல்—அசை.

யிருந்தது முந்துநூற்கண் (எ - று.)

எனவே, யானுங் கூறுவலென்றார்.[1]

'நலந்தாங் கமையலேன் என்றானைப் பற்றியென்
நலந்தாரா யோவெனத் தொடுப்பேன் போலவும்
கலந்தாங் கேயென் கவின்பெற முயங்கிப்
புலம்பல் ஓம்பென அளிப்பான் போலவும் ;
முலையிடைத் துயிலும் மறந்தீத் தோயென
நிலையழி நெஞ்சத்தேன் அழுவேன் போலவும்
வலையுறு மயிலின் வருந்தினை பெரிதெனத்
தலையுற முன்னடிப் பணிவான் போலவும்.'' (கலி. 128)

இவற்றுள், தன்னெஞ்சினை உறுப்பும் உணர்வும் மறுத்துரைத்தலு முடையதாகக் கூறியவாறும். ஆங்கு எதிர்பெய்து கொண்ட தலைவன் உருவும் உறுப்பும் உணர்வும் மறுத்துரைத்தலு முடையதாகச் செய்யாமரபின செய்ததாகக் கூறியவாறும், அவை உயர்திணையாகக் கூறியவாறும், பிறவுமுணர்க.

"இன்னகை யினைய மாகவு ... கனவின்'' (அகம்39.)
என வருவனவுங் கொள்க (ந.)

ஆய்வுரை :

இது காமம் இடையீடுபட்ட நிலையிற் காதலர் கனாக் காண்டலும் உண்டென்கிறது(இ-ள்) காமங்கண்ணிய அந்நிலைமைக்கண் கனாக்காண்டலும் காதலர் இருவர்க்கும் உரியதாகும். எ-று.

உரித்தால் என்புழி ஆல் அசை. அவ்விடத்தான் கனவும் உரித்து என இயையும், அவ்விடத்தான்—காதலர் இருவரும் தம் முட் கூடப்பெறாது கலக்க முற்ற அந்நிலைமைக்கண் ஆனுருபு இடப்பொருளில் மயங்கினது உருபுமயக்கம். ஆன என்புழி அ-சாரியை.

ச. தாய்க்கும் உரித்தாற் போக்குடன் கிளப்பின்.

1. அவ்விடம் என்றது, மேலைச் சூத்திரத்திற்குறிக்கப்பட்ட நோயும் இன்பமும் ஆகிய நிலைமையினை. 'அவ்விடத்தான' என்பதனொடு 'முந்து நூற்கண்' என்பதனையும் கூட்டி உரை வரைந்தமையால்

"எனவே, யானுங்கூறுவல், என்றார்'' என எச்சமாகக் கொண்டுரைத்தார் நச்சினார்க்கினியர்.

உடன்போக்குக் கிளப்பின் தாய்க்கும் (கனவு) உரித்து என மொழி மாற்றிப் பொருள் வரையப்பட்டது. 'உரித்து' என்னும் பயனிலைக்கு எழுவாயாக மேலைச் சூத்திரத்திலுள்ள 'கனவு' என்பது அதிகாரத்தான் வந்தியைந்தது.

இளம்பூரணம் :

என்—எனின். நற்றாய்க் குரியதோர் மரபு உணர்த்திற்று.

(இ-ள்.) மேற்சொல்லப்பட்ட கனவு தாய்க்கும் உரித்து, உடன்போக்குக் கிளக்கப்பட்டுழி என்றவாறு.[1]

உ-ம் : 'கண்படை பெறேஎன் கனவ' (அகம். ருரு) என வரும். வேறும் வந்தவழிக் காண்க. (௪)

நச்சினார்க்கினியம் :

இது முற்கூறிய க வு களவின்கட் செவிலிக்கு முரித்தென வழூவமைக்கின்றது.

(இ-ள்.) உடன்போக்குக் கிளப்பின்—உடன்போக்கின் கட் கூறின்; தாய்க்கும் உரித்தால்—அக்கனவு செவிலிக்கும் உரித் தாயிருந்தது முந்து நூற்கண் (எ-று)

தோழி உடன்பட்டுப் போக்குதலானும் நற்றாய் "நற்பாற் பட்டனள்" என்று வருதலானுந்[2] "தாயெனப்படுவோள் செவிலியா கும் (124)" என்பதனானுஞ் செவிலியைத் தாயென்றார். தலைவி போகாமற் காத்தற்குரியளாதலானும் அவளை என்றும் பிரியாத பயிற்சியானுஞ் செவிலிக்குக் கனவு உரித்தாயிற்று.

"காய்ந்துசெலற் கனலி" (அகம். 55) என்பதனுட் "கண் படை பெறேன் கனவ" என்றவாறு காண்க.

ஆய்வுரை: இது தாய்க்குரியதோர் இயல்பு கூறுகின்றது.

(இ—ள்) தன்மகள் காதலனுடன் சென்றாள் என உடன் போக்குப் பேசப்பட்ட நிலையில் நற்றாய்க்கும் கனாக்காண்டல உரித்து. எ—று.

உடன்போக்குக் கிளப்பின் தாய்க்கும் கனவு உரித்து என்க. உரித்து என்னும் பயனிலைக்கு எழுவாயாக மேலைச் சூத்திரத் திலுள்ள கனவு என்பது அதிகாரத்தான் வந்தியைந்தது.

---

1. உடன்போக்குக் கிளப்பின் கனவு தாய்க்கும் உரித்து, என மேலைச் சூத்திரத்திலுள்ள 'கனவு' என்பதனை எழுவாயாக வருவித்துரைக்க.

2. "நற்றாய் 'நற்பாற்பட்டனள' என்று வருதலானும்" என்ற தொடரின் கருத்துப்பொருள் தெளிவாகப் புலப்படவில்லை.

௫ பால்கெழு கிளவி நால்வர்க்கும் உரித்தே
நட்பின் நடக்கை யாங்கலங் கடையே.

இளம்பூரணம் :

என்—எனின். எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறுதனுதலிற்று.

(இ-ள்.) பால்கெழு கிளவி நால்வர்க்கும் உரித்து என்பது—பான்மை கெழுமப்பட்ட கிளவி பெண்பாலா ராகிய நால்வர்க்கும் உரிந்தென்றவாறு.

நால்வராவார்—தலைவி, தோழி, நற்றாய், செவிலி.[1] அஃதேல் தலைமகளை யொழிய மூவர் என்று அமையாதோ எனின் மேல் தலைமகட்கும் உரித்தென்றார் அவரொடு கூட நால்வர் என வகையறுத்தல் என்பது.

நட்பி னடக்கை யாங்கலங் கடையே என்பது—நட்பின் வழங்கும் வழக்கல்லாதவிடத்து என்றவாறு.

அஃதாவது, தலைவியொடு தோழி யொழுகும் ஒழுக்கம் அவ்வழியல்லாத விடத்தென்றவாறு. அவண்மாட்டு நிகழ்வது தலைவன்தோழிக் குணர்த்தாது பிரிந்தவழி என்று கொள்ளப்படும். பாற் கிளவி என்பது பயிலாது வரும் ஒரு கூற்றுச்சொல் எனப்பட்டது. அதனைக் கெழுமிய சொல் பால்கெழு கிளவியாயிற்று. ஆண்டு நற்றாய் கூறியதற்குச் செய்யுள்:

''கருமணற் கிடந்த பாவைஎன்
மருமகளேயென முயங்கினள் அழுமே... (அகம். ௧௬௫)

செவிலி கூறியதற்குச் செய்யுள்:—

1. இந்நூற்பாவில் வரும் நால்வர் என்னுந்தொகைச்சொல், அடுத்து வரும் நூற்பாவில் உயிரும் நாணும் மடனும் என்னும்பெண்மைப் பண்பிற்குரியராகக் கூறப்படும் செயிர்தீர் சிறப்பின் நால்வராகிய பெண்பாலாரையே குறிக்கும் என்பார், 'நால்வராவார் தலைவிதோழிநற்றாய் செவிலி'' என விளக்கம் தந்தார் இளம்பூரணர்.

2. 'நட்பின் நடக்கை' என்றது தலைவியொடு தோழியொழுகும் ஒழுக்கம் எனவும், 'ஆங்கலங்கடை' என்பது 'அவ்வழியல்லாதவிடத்து' எனவும், என்றது, 'தலைவன் தோழிக்கு உணர்த்தாது பிரிந்தவழி' எனவும் விளக்கந்தருவர் இளம்பூரணர். எனவே தலைமகன் தோழிக்குத் தன் பிரிவினையுணர்த்தாது பிரிந்த துன்பக் காலத்து அவர்பாற் பால்கெழுகிளவி நிகழும் என்பது இளம்பூரணர் கருத்தெனக் கொள்ளவேண்டியுளது. இச் சூத்திரத்தின் இரண்டடிகளையும் இருவேறு சூத்திர மாகக் கொள்வர் நச்சினார்க்கினியர்.

"தான்தாயாக் கோங்கம் தளரா முலைகொடுப்ப
ஈன்றாய்நீ பாவை இருங்குரவே—ஈன்றாள்
மொழிகாட்டா யாயினும் முள்ளெயிற்றாள் சென்ற
வழிகாட்டாய் ஈதென்று வந்து.,, (திணைமாலைநூற் கூ௫)

தோழி கூறியதற்குச் செய்யுள் வந்தவழிக் காண்க. (௫)

நச்சினார்க்கினியம் :

பால்கெழுகிளவி நால்வர்க்கு முரித்தே.

இஃது, எய்தாத தெய்துவித்து வழுவமைக்கின்றது.

(இ-ள்) பால்கெழு கிளவி-இலக்கணத்திற் பக்கச் சொல்;[1] நால்வர்கடும் உரித்து-தோழியும் செவிலியும் நற்றாயும் பாங்கனு மென்னும் நால்வர்க்கும் உரித்தாம் (எ-று.)[2]

மேல் 'இருவர்க்கு முரிய பாற்கிளவி' (196)என்றலின் தலைவனையுந் தலைவியையும் ஆண்டே கூறலின் ஈண்டு இந் நால்வருமென்றே கொள்க.[3]

"தருமணற் கிடந்த பாவையென்
மருமக ளேயென முயங்கினள் அழுமே." (அகம். 165)

இது' நற்றாய் மணற்பாவையைப் பெண்பாலாகக்கூறித் தழீஇக்கொண்டழுதலிற் பால்கெழு கிளவியாயிற்று

---

1. 'பால்கெழுகிளவி' என்பதற்கு'இலக்கணத்திற்பக்கச்சொல்' எனப்பொருள் கொள்வர் நச்சினார்க்கினியர். இலக்கணத்திற் பக்கச்சொல்லாவது, நற்றாய் செவிலி தோழி முதலியோர் தம்மொடு அணுகிய குரவு கோங்கு முதலிய தாவரங்களையும் பிறவற்றையும் தம்மோடொத்த பெண்பால்களாகக் கொண்டு கூறும் சொல்வழக்கினை. இவ்வாறு கூறுதல் சொல்லிலக்கணத்திற்கு ஒத்ததன்றாயினும் பொருள் மரபின் இலக்கணப் பக்கத்தில் வைத்துப் பேசப்படுதலின் இலக்கணத்திற் பக்கச் சொல்லாயிற்று என உய்த்துணர வேண்டியுளது.

2. இங்கு நால்வர் என்றது, தோழி, செவிலி, நற்றாய், தலைவி என்னும் பெண் பாலார் நால்வரையும் எனக் கொள்ளுதலே ஏற்புடையதாகும்; இங்குச் சொல்லப் பட்ட செயிர்தீர்சிறப்பின் நால்வர்க்கும் நாணும் மடனும், உரிய, என அடுத்து வரும் நூற்பாவில் ஆசிரியர் கூறுதலால் இங்கு நால்வர், என்றது பெண்பாலார் நால்வரை யுமே குறித்ததாதல், நன்குதுணியப்படுமென்க.

3. 'நால்வர்' எனச் சொல்லப்பட்டவருள் தோழி, பாங்கன் என்னும் இருவரையும் 'நட்பினடக்கையாங்கலங்கடையே' என அடுத்த சூத்திரத்தில் விலக்குதல் ஆசிரியர் கருத்தாயின் அவ்விருவரையும் சேர்த்து 'நால்வர்' என இங்குத் தொகுத்துக் கூறியதனாற் பயனின்றும் என்க.

' தான்றாயாக்... வந்து'' (திணை, நூற்.65.)
என்பது செவிலி குரவை வழிகாட்டென்றலிற் பால்கெழு கிளவி யாயிற்று. ஏனையிரண்டும் மேல் விலக்குப. (௪)

நட்பின் நடக்கை ஆங்கலங் கடையே.[1]

இஃது, இறந்தது காத்தது.

(இ·ள்.) ஆங்கு - அந்நால்வரிடத்து; நட்பின் நடக்கை அலங்கடை - நட்பின்கண்ணே ஒழுகுதலல்லாத *அவ்வீரிடத்தும் பால்கெழு கிளவி உரித்து (எ·று).

எனவே, நட்புச்செய் தொழுகுந் தோழிக்கும் பாங்கனுக்கும்[2] 'பால்கெழு கிளவி' இன்றென்றார், எனக்கொள்க. (ரு)

ஆய்வுரை : இஃது எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறுகின்றது. முன் காதலரிருவர்க் குரித்தாகக் கூறப்பட்ட பாற்கிளவி அவரல்லாத தோழி முதலியோர்க்கும் உரியவென விதித்தலின்.

(இ—ள்) அன்பின் பான்மை பொருந்திய கெழுதகைமைக் கூற்று தலைவி தோழி செவிலி நற்றாய் ஆகிய பெண்பாலார் நாலவர்க்கும ஒப்பவுரியதாகும்; நட்புக் கொண்டு பழகும் உணர்வுடைய உயர்திணை மக்களலலாத அஃறிணைப்பொருள்களிடத்து. எ—று.

நட்பின் நடக்கை ஆங்கு அல்கடை பால்கெழுகிளவி நால்வர்க்கும் உரித்து என இயையும், அல்கடையெனற்பாலது

---

1. இதனைத் தனிச் சூத்திரமாகக்கொள்ளாது மேலைச் சூத்திரத்தோடு இயைத்து, 'பால்கெழுகிளவி நால்வர்க்குமுரித்தே நட்பினடக்கை யாங்கலங்கடையே என ஒரு சூத்திரமாகக் கொண்டு,

''தம்முள் அன்புரிமையுடையராய்ப்பழகும் துன்பக்காலத்து மேற்கூறியவாறு' அறிவும் புலனும் வேறுபடக்கூறும் ஒருகூற்றுச்சொல் தலைவி, தோழி, செவிலி, நற்றாய் ஆகிய பெண்பாலார் நால்வர்க்கும் உரியதாகும்'' எனப்பொருள் உரைத்தலே சூத்திரத் தொடரமைப்புக்கு ஏற்புடையதாகும்.

2. ''நட்பினடக்கை' என்பதற்கு ''நட்புச் செய்தொழுகும் தோழிக்கும் பாங்கனுக்கும்'' என நச்சினார்க்கினியர் கூறும் கூற்று முறையே தலைவியோடும் தலைவனோடும் நட்புச் செய்தொழுகுவோராய தோழியும் பாங்கனும் என்ற குறிப்பினதாதல் வேண்டும். 'அவ்விருவரும் தம்முள் நட்புச் செய்தொழுகினார் என்னுந் தவறான கருத்துக்குப் பண்டைத் தமிழிலக்கியங்களில் ஒரு சிறிதும் இடமில்லாமையும் உணர்க.

'அலங்கடை' என அம்சாரியை பெற்றது. அல்கடை—அல்லாவிடத்து, குராமுதலிய அஃறிணைப்பொருள்களைத் தம் அன்புக்குரிய உறவுமுறையுடையனவாகக்கொண்டு தம் துன்பத்தை அவ்வஃறிணைப்பொருளுக்கு எடுத்துக்கூறிச் செவிலி முதலியோர் கூறுங்கூற்றினைப் 'பால்கெழுகிளவிக்கு' எடுத்துக்காட்டாக இளம்பூரணர் காட்டியுள்ளமை இச்சூத்திரப்பொருளைத் தெளிவு படுத்துவதாகும்.

இனி, 'நட்பினடக்கயாங்கைலங்கடையே' என்பதற்கு "தம்முள் அன்புடையராய்ப்பழகும் மகிழ்ச்சிநிலையல்லாத துன்பக் காலத்து," எனகொண்டு "மேற்கூறியவாறு அறிவும் புலனும் வேறுபட நிறீஇக்கூறும் பாற்கிளவியெனப்படும் ஒருகூற்றுச் சொல் தலைவி, தோழி, செவிலி, நற்றாய் ஆகிய பெண்பாலார் நால்வர்க்கும்உரியதாகும்" என இச்சூத்திரத்திற்குப் பொருள் கூறுதற்கும் இடமுண்டு.

'நட்பினடக்கையாங்கலங்கடையே' எனவரும் இச்சூத்திரத்தின் இரண்டாமடியினைத் தனிச் சூத்திரமாகப் பிரித்து நச்சினார்க்கினியர் வரைந்துள்ள உரைப்பகுதிகள் முன்னொடுபின் முரண்படுவனவாய்த்தொல்காப்பியச் சூத்திரக் கட்டமைப்புக்குப் பொருந்தாமையின் இளம்பூரணர்கொண்ட வண்ணம் இவ்விரண்டடிகளையும் ஒருசூத்திரமாகக் கொள்ளுதலே தொல்காப்பியனார் கருத்துக்கு ஏறபுடையதாமென்க.

௬. உயிரும் நாணும் மடனும் என்றிவை
செயிர்தீர் சிறப்பின் நால்வர்க்கும் உரிய.

இளம்பூரணம் :

என்—எனின். மேற்சொல்லப்பட்ட நால்வர்க்கு முரியதோர் பொருண்மையுணர்த்திற்று.

(இ-ள்.) உயிரும்[1] நாணும் மடப்பமும் என்று சொல்லப் பட்டவை குற்றந் தீர்ந்த சிறப்பினையுடைய தலைமகட்கும் தோழிக்கும் நற்றாய்க்கும் செவிலிக்கும் உரிய என்றவாறு.

1. 'உயிர், என்றது, உயிரோரன்ன செயிர்தீர்நட்பினை. தலைவிதோழி நற்றாய் செவிலி இவர்கள் நால்வரும் ஒருவரை யொருவர் இன்றியமையாதவராய் ஓருயிர்போல்வர் என்பதாம்.

செயிர்தீர் சிறப்பின் என்றமையான் ஏனையோர் போலாது இவர் நால்வரும் ஒருநீர்மையர் என்று கொள்க. இதனாற் சொல்லியது என்னை யெனின், இந்நால்வரும் ஆக்கமுங்கேடும் ஒருவர்மாட்டு வந்துழித்தமக்குற்றதுபோல்நினைப்பராதலான் ஒருவரையொருவர் இன்றியமையாது ஒருயிர் போல்வர் எனவும், நாணமும் மடனும் நால்வர்க்கும் ஒக்கு மாகலான் அவலமாகிய வழியும் வருத்தம் ஒக்கும் எனவும் கூறியவாறு. அதற்குச் செய்யுள்:-

'இவளே நின்னல திலளே யாயுங்
குவளை உண்கண் இவளல திலளே
யானும் ஆயிடை யேனே
மாமலை நாட மறவா தீமே''

எனவரும். (௬)

நச்சினார்க்கினியம் :

இது, தலைவிக்குத் தலைவனாற் பிறப்பதோர் வேறுபாடு தோன்றியவழி அதனைப் பரிகரித்தற் குரியோர் இவரென வழு வமைக்கின்றது.

(இ-ள்) உயிரும் நாணும் மடனும் என்றிவை-உயிரும் நாணும் மடனுமென்று கூறப்பட்ட இவை மூன்றும், செயிர்தீர் சிறப்பின் நால்வர்க்கும் உரிய-குற்றந் தீர்ந்த தலைமையினை யுடைய நற்றாய்க்குஞ் செவிலிக்குந் தோழிக்குந் தலைவற்கு முரிய (எ-று.)[1]

உம்மை ஐயமாதலின்[2] தலைவனை யொழிந்த மூவர்க்கு முரிய என்றாராயிற்று. என்றது தலைவன் இவற்றைக் களவிலுங் கற்பிலுங் காத்தலும் வரைவிடைவைத்துப் பிரிந்தும் பரத்தையிற் பிரிந்துங் காவாமையுமுடைய னென்பது கூறிற்று. அவை எழு வகையால் (தொல்-பொருள் உ0எ) தோழி அவற்றைக் காத்து

---

1. இங்குச் 'செயிர்தீர் சிறப்பின் நால்வர்' என்பதற்குக் 'குற்றந்தீர்ந்த தலைமையினையுடைய நற்றாய் செவிலி தோழி தலைவன்' என்னும் நால்வரும் என நச்சினார்க்கினியர் கூறும் பொருள் பொருத்தமுடையதாகத் தோன்றவில்லை நாணும் மடனும் ஆகிய பெண்மைக்குணங்கள் தலைவனுக்குரியன வல்லாமையும் இங்குமனங்கொளத்தகுவதாகும்.

2. 'நால்வர்க்கும்' என்புழி உம்மை முற்றும்மையாதலின் அதனை எச்சவும்மையாக்கி மூவர்க்கும் எனப்பொருள் கொள்ளுதற்கும் இடமுண்டு. நால்வர்க்கும் என்புழி உம்மை ஐயுற்றுத் துணியா நிலைமைக்கண் வந்ததன்றாகலின் இதனை 'ஐயவும்மை' எனக் கூறுதல் ஏற்புடையதன்றாம்.

அறத்தொடு நிற்ப, அதனைச் செவிலி உட்கொண்டு அவற்றைக் காத்து நற்றாய்க் கறத்தொடு நிற்ப, அவளும் அவற்றை உட்கொண்டு காத்தற்கு அறத்தொடு நிற்றலும் உடன் போயது அறனென நற்றாய் கோடலுஞ் செவிலி பிறரை வரைகின்றானோ வெனத் தோழியை வினவலும் பிறவுமாம். உதாரணம் முன்னர்க் காட்டியவற்றுட் காண்க.

இனி உம்மை-ய முற்றும்மையாக்கி உயிர் முதலிய தலைவியுறுப்பினை உறுப்புடைத்தாகவும் மறுத்துரைப்பதாகவும் கூறப்பெறாதென்றார். [1]

ஆய்வுரை: இது, மேற்குறித்த பெண்பாலார் நால்வர்க்கும் உரியபொதுவியல்பினை விரித்துரைக்கின்றது.

(இ—ள்) உயிரொத்த அன்பின் ஒருமையும் உயிரினுஞ் சிறந்த நாணமும் மடனும் என்னும் இப்பண்புகள் குற்றமற்ற சிறப்பினையுடைய பெண்பாலார் நால்வர்க்கும உரியனவாகும். எ—று.

இங்கு, உயிர் என்றது தமக்குள் உயிர் ஒன்றே என அன்பின் ஒருமையாற் பழகுதற்குரிய செயிர்தீர்நட்பினை இந்நாலவரும் ஒருவரையொருவர் இன்றியமையாதவராய் ஒருயிர் போல்வர் என்பதும் இக்குணங்களுக்கு இழுக்கு நேராவண்ணம் கூற்று நிகழ்த்துவர் என்பதும் இச் சூத்திரத்தால நன்கு புலனாம்.

எ. வண்ணந் திரிந்து புலம்புங் காலை
உணர்ந்தது போல உறுப்பினைக் கிழவி
புணர்ந்த வகையாற் புணர்க்கவும் பெறுமே.[2]

---

1. 'இனி உம்மையை முற்றும்மையாக்கி, உயிர் முதலிய தலைவியுறுப்பினை உறுப்புடைத்தாகவும் மறுத்துரைப்பதாகவும் கூறப்பெறாதென்றார் எனவரும் இத் தொடர் பொருள் தொடர்பின்றியும்,'நோயும் துன்பமும்' என்னும் நூற்பாவில் தலைவிக்குரியவாகக் காட்டிய உதாரணச் செய்யுள்கட்கு முரண்பட்டும் காணப்படுகின்றது.

2. வண்ணம்—மேனியின் நிறமாகிய உடல் வனப்பு. திரிதல்—மெலிந்து வேறுபடுதல். 'புலம்புறுங்காலை' எனத்திருத்துக 'புலம்பு—தனிமை, 'உணர்ந்தன-போல' என உரையிற்காணப்படுதலால் அதுவே இளம்பூரணர் கொண்ட பாடம் எனத்தெரிகிறது. புணர்ந்தவகையாவது, உறுப்புக்கள் தனிமையையுணர்தற்குப் பொருந்தும்வகை. புணர்ந்தவகையால் எனவே பிரிதலால் தனிமையுற்று வாட்டமுறுந் தன்மையவாகிய தலைவியின் தோள்முதலிய வுறுப்புக்களுக்கே உணர்ந்தபோலப் புணர்த்துக் கூறுதல் பொருத்தமுடையதாகும் என்பது புலனாம்.

இளம்பூரணம் :

என்—எனின். தலைமகட்குரியதோர் பொருளுணர்த்திற்று.

(இ—ள்) தலைமகள் வண்ணம் வேறுபட்டுத் தனிமையுறுங் காலைத் தலைமகன் பிரிவைத் தன் உறுப்புக்கள் உணர்ந்தன போலப் பொருந்தும் வகையாற் கூறவும் பெறும் என்றவாறு.

உம்மை எதிர்மறை.

"தணந்தமை சால அறிவிப்ப போலும்
மணந்தநாள் வீங்கிய தோள்" (குறள்,கஉ௩௩)

"தண்ணந் துறைவன் தணந்தமை நம்மினும்
முன்னம் உணர்ந்த வளை" (குறள். கஉஎஎ)

எனவரும். (எ)

நச்சினார்க்கினியம் :

இது, வருத்தமிக்கவழி இவையுமா மென்கிறது.

(இ-ள்.) வண்ணம் பசந்து புலம்பு உறுகாலை-மேனி பசந்து தனிப்படருறுங் காலத்து; கிழவி உறுப்பினை உணர்ந்த போல—தலைவி தனது உறுப்பினை அறிந்தனபோல; புணர்ந்த வகையிற் புணர்க்கவும் பெறுமே—பொருந்தின கூற்றாற் சொல்லவும் பெறும் (எ-று.)

"கேளல னமக்கவன் குறுகன்மி னெனமற்றெந்
தோளொடு பகைபட்டு நினைவாடு நெஞ்சத்தேம்" (கலி 68)
"நாணில மன்றவெங் கண்ணே நாணேர்பு
..................பிரிந்திசினோர் கழலே" (குறுந். 35)
"தணந்தமை சால அறிவிப்ப போலும்
மணந்தநாள் வீங்கிய தோள்" (குறள்.1233)

என வரும்.

காதும் ஒதியும் முதலியன கூறப்பெறா; கண்ணுந் தோளும் முலையும் போல்வன புணர்க்கப்படுமென்றற்குப் 'புணர்ந்தவகை' யென்றார்.[1] இதனானே இவற்றைத தலைவன்பாற் செலவு வரவுடையனபோலக் கூறலுங்கொள்க.

---

1. புணர்ந்தவகையின் எனவே தலைவி தன்னுறுப்பினை உணர்ந்தன போலக் கூறுதற்குக் கண்ணுந்தோளும் முதலிய உறுப்புக்களே பொருத்தமுடையன எனவும் கூந்தலும் காதும் பொருத்தமில்லாதன எனவும் கொள்ளப்படும் என்பதாம்

"கண்ணுங் கொளச்சேறி நெஞ்சே யிவையென்னைத்
தின்னு மவர்க்காண லுற்று" (குறள். 1244)

எனக் கண்ணினைச் செல்வனவாகக் கூறினாள். (அ)

ஆய்வுரை: இது, தலைமகட்குரியதோர் திறம் உணர்த்துகின்றது.

(இ-ள்) தலைமகள் தனது உடல்வனப்பு வேறுபட்டுத் தனிமையுறுங்கால் தலைமகனது பிரிவினைத் தன்னுடைய தோள் முதலிய உறுப்புக்கள் முன்னமே உணர்ந்தனபோலப் பொருந்திய வகையாற் கூறவும் பெறும் எ-று.

'புணர்க்கவும்' என்னும் உம்மை அடுத்துவரும் நூற்பாவின் பொருளைத் தழுவி நிற்றலின் எதிரது தழீஇய எச்சவும்மையாகும்.

அ. உடம்பும் உயிரும் வாடியக் கண்ணும்[1]
என்னுற் றனகொல் இவையெனின் அல்லதைக்
கிழவோற் சேர்தல் கிழத்திக் கில்லை.

இளம்பூரணம் :

(இ-ள்.) இஃது உடம்பும் உயிரும் மெலிந்த இடத்தும் இவை என்னுற்றன எனக் கூறினல்லது, கிழவோன் உள்வழிப் படர்தல் கிழத்திக்கு இல்லை என்றவாறு.

(உ-ம்)

"கதுமெனத் தாநோக்கித் தாமே கலுழும்
இதுநகத் தக்க துடைத்து" (குறள் ககஎ௩)

எனவும்,

"ஓஒ இனிதே எமக்கிந்நோய் செய்தகண்
தாஅம் இதற்பட்டது" (குறள்.ககஎசு)

எனவும் வரும். (அ)

நச்சினார்க்கினியம்

இது, தலைவனொடு வேறுபட்டுழிப் பிறப்பதோர் வழுவமைதி கூறுகின்றது.

(இ-ள்) உடம்பும் உயிரும் வாடியக்காலும்- தன் உடம்பும் உயிரும் தேய்ந்து கூட்டமின்றி இருந்த காலத்தும்; இவை என்

1. வாடுதல்—மெலிதல், என்உற்றன—என்ன வருத்தம் உற்றன. கொல்—அசைநிலை. 'வாடியக்காலும்' என்பது நச்சினார்க்கினியர் உரையிற்கண்ட பாடம்.

உற்றன கொல் எனின் அல்லது—இவை என்ன வருத்த முற்றன கொலென்று தனக்கு வருத்தமில்லதுபோலக் கூறினல்லது; கிழத்திக்குக் கிழவோற் சேர்தல் இல்லை - தலைவிக்குத் தலைவனைத் தானேசென்று சேர்தல் இருவகைக் கைகோளினுமில்லை (எ - று.)

இது, காதல்கூரவுங் கணவற்சேராது வஞ்சம்போறொழுங் கலின் வழுவாயினும் அமைக்க (எ - று.)

''எற்றோ வாழி தோழி முற்றுபு
கறிவளர் அடுக்கத்து இரவின் முழங்கிய
மங்குல் மாமழை வீழ்ந்தெனப் பொங்குமயிர்க்
கலைதொட இழுக்கிய பூநாறு பலவுக்கனி
வரையிழி யருவி உண்துறைத் தரூஉங்
குன்ற நாடன் கேண்மை
மென்றோள் சாய்த்துஞ் சால்பீன் றன்றே'' (குறுந் 90)

என்பதனுட் கேண்மை தோளை மெலிவித்ததாயினும் எனக்கு அமைதியைத் தந்தது; யான் ஆற்றவுந் தாம் மெலிதல் பொருந்தாதது எத்தன்மைத்தெனத் தலைவி தோழிக்குக் கூறியவாறு காண்க. 'கலைதீண்ட வழுக்கி வீழ்ந்த பழத்தை யருவி பின்னும் பயன்படுத்து நாடன்' என்றதனானே அலரால் நஞ் சுற்றத்திற் பிரிந்தேமாயினும் அவன் நம்மை வரைந்துகொண்டு இல்லறஞ் செய்வித்துப் பயன்படுத்துவ னென்பதாம்.

''கதுமெனத் தாநோக்கி'' (குறள். 1173) இதுவும் அது.
'ஓஒ இனிதே'' ,(குறள். 1176) இதுவும் இதன்பாற்படும்.
''இனிப்புணர்ந்த எழில்நல்லார் இலங்கெயிறு உறாஅலின்
நனிச்சிவந்த வடுக்காட்டி நாணின்றி வரினெல்லா
துனிப்பேன்யான் என்பேன்மன் அந்நிலையே அவற்காணில்
தனித்தே தாழுமித் தனியி னெஞ்சே.'' (கலி. 67)

இதனுள், யான் துனித்தல்வல்லேன், என் நெஞ்சிற்குத் தன்றன்மை யென்பதொன்றில்லை, ஈதென்[1] னென்றலின் அவ்வாறு காண்க.

---

1. யான் தலைவனொடு ஊடல் மிகுதியால் பிரிந்திருக்கவல்ல உறுதியுடையேன். எனது நெஞ்சத்திற்குச் சார்ந்த பொருளின் தன்மையதாவதன்றித் தனக்கெனத் தனித்தன்மையென்பதொன்றில்லை ; இதுவென்ன அறியாமை என்றவாறு.

ஆய்வுரை: இது தலைமகளது உயிரினுஞ் சிறந்த நாணின் சிறப்புணர்த்துகின்றது.

(இ-ள்) தலைவி தலைவனை யடையப் பெறாமையால் தனது உடம்பும் உயிரும் மெலிந்தநிலையிலும் உடம்பு முதலிய அவற்றைத் தன்னின்வேறாக எண்ணி 'இவை என்ன துன்ப முற்றன' என அவற்றின் வாட்டத்திற்கு இரங்கிக் கூறுவதன்றித் தலைமகன் உள்ள இடத்துத் தானே சேர்தல் என்பது உயிரினுஞ் சிறந்த நாணினளாகிய தலைவிக்கு இலலை. எ-று

'என்னுற்றனகொல்' இவையெனின் அல்லது' என்பதற்கு 'இவை என்ன வருத்தமுற்றன என வருத்தமில்லது போலக்கூறுவதன்றி' எனப்பொருள்கொள்ளினும் அமையும். கிழவோற்சேர்தல் தலைவனைஅவன்உள்ள இடத்திற் சென்று சேர்தல்

௯. ஒருசிறை நெஞ்சோ டுசாவுங் காலை
உரிய தாகலும் உண்டென மொழிப.

**இளம்பூரணம் :**

என்—எனின். மேலதற்கோர் புறனடை உணர்த்திற்று.[1]
(இ-ள்) தனிந்து[2] நெஞ்சோடு உசாவுங்காலத்துக் கிழவோற் சேர்தல் உரியதாகலும் உண்டு என்றவாறு.
உம்மை எச்சவும்மையாகலால் தோழியோடு உசாதலுங் கொள்க.

''கோடீர் இலங்குவளை நெகிழ நாடொறும்
பாடில கலிழுங் கண்ணொடு புலம்பி
ஈங்கிவண் உறைதலும் உய்குவம் ஆங்கே
எழுவினி வாழிய நெஞ்சே.'' (குறுந் ௧௧)

என வரும்.

---

1. ''கிழவோற் சேர்தல் கிழத்திக்கு இல்லை'' என மேலைச் சூத்திரத்து விதித்த தொல்காப்பியனார், அவ்விதிக்குப் புறனாகக் 'கிழவோற் சேர்தல் வேண்டும்' என்னும் எண்ணமும் 'தலைமகள் நெஞ்சத்திலே தோன்றுதல் உண்டு' என இச்சூத்திரத்திற் கூறினமையால் 'இது, மேலதற்கோர் புறனடையுணர்த்திற்று' எனக் கருத்துரை வரைந்தார் இளம்பூரணர்.

2. தனித்து—தனிமையிலிருந்து, சிறை—பக்கம். ஒருசிறை—ஒருபக்கம்., ஒரு பக்கத்துத் தனித்திருத்தலாகிய தனிமை நிலையினைச் சுட்டி நின்றது.

''பகலே பலருங் காண நாண்விட்
டகல்வயற் படப்பை யவனூர் வினவிச்
சென்மோ வாழி தோழி''		(நற்றிணை. ௩௬௫)

என்றது தோழியொடு உசாவியது.

நச்சினார்க்கினியம் :

இதுவும் அது.

(இ - ள்) ஒருசிறை - தன் உள்ளத்து நின்ற தலைவனை யொழியப் போந்துநின்றது;[1] நெஞ்சமொடு உசாவுங் காலை[2] தானுந் தன் நெஞ்சமும் வேறாகநின்று கூட்டத்திற்கு உசாவுங் காலம்; உரியதாகலும் உண்டென மொழிப - தலைவிக்குரித்தா தலும் உண்டென்று கூறுவர் புலவர் (எ - று.)

உம்மையால் தோழியுடன் உசாவுங்காலமும் உண்டு என்று கொள்க; உம்மை எச்சவும்மை. இது தலைவனை வேறுபடுத்துத் தானும் நெஞ்சமும் ஒன்றாய் நின்று உசாவுதலின் வழுவா யமைந்தது. இது யாண்டு நிகழுமெனின் இவனொடு கூடாமையின் இவன் ஆற்றானாவனென்றானும் 'உணர்ப்புவயின் வாரா வூடற்' கட் (தொல். பொ. 150) புலக்குமென்றானும் பிறவாற்றானு மென்றானும் உசாவும்.

''மாண மறந்துள்ளா நாணிலிக் கிப்போர்
புறஞ்சாய்ந்து காண்டைப்பாய் நெஞ்சே யுறழ்ந்திவனைப்
பொய்ப்ப விடேஎ மெனநெருங்கில் தப்பினேன்
என்றடி சேர்தலு முண்டு''		(கலி 89)

எனவரும்.

''பகலே பலருங் காண''		(நற். 365)

என்றது, தோழியோடு உசாவியது.		(௧0)

---

1. 'போந்து நின்று' என்றிருத்தல் வேண்டும்.

2. காலை—காலம், கிழத்தி தனித்திருந்து நெஞ்சமொடு உசாவுங்காலம் உரியதாகலும் உண்டு. எனவே உம்மையால் தோழியொடு உசாவுங்காலம் உரியதாகலும் உண்டு எனக் கொண்டார் நச்சினார்க்கினியர்.

இதன்கண் 'காலை' என்பது, 'காலத்தில்' என இடப்பொருளில் ஆளப் பெற்றிருத்தலால் அதனை 'உரியது' என்னும் பயனிலைக்குரிய எழுவாய்ப்பெயராகக் கொள்ளாமல் 'கிழத்தி தனித்து நின்று நெஞ்சமொடு உசாவுங்காலத்துக் கிழவோற் சேர்தல் உரியதாகலும் உண்டு' என மேலைச் சூத்திரத்திலுள்ள 'கிழவோற்சேர்தல்' என்பதனை எழுவாயாக ஈண்டு வருவித்துரைத்தல் மிகவும் பொருத்தமுடையதாகும்.

ஆய்வுரை: இது, மேலதற்கோர் புறனடை.

(இ-ள்) தலைவி தன்னெஞசத்துடன் தனித்து வினவுங் காலத்தும் தலைவனையடைதல்வேண்டும் என்ற உணர்வு அவட்கு உரியதாதலும் உண்டென்று கூறுவர் ஆசிரியர். எ-று

நெஞசமோடு ஒருசிறை உசாவுங்காலை (கிழவோற் சேர்தல) உரியதாகலும் உண்டு என இயையும். உரியதாகல என்னும் பயனிலைக்கு எழுவாயாக முற்சூத்திரத்திலுள்ள 'கிழவோற் சேர்தல்' என்பது அதிகாரத்தால் வந்தியைந்தது. நெஞசமோடு ஒருசிறையுசாவுதலாவது, ஒரு பக்கத்துத் தனித்திருந்து தனது நெஞ்சத்தினை முன்னிலைப்படுத்து வினவி ஆராய்தல. 'உரியதாகலும்' என்புழி உம்மை இழிவுசிறப்பாதலின் உரியதாகாமையே உயிரினுஞ் சிறந்த நாணுடைமைக்கு அழகாம் என்பது கருத்து.

௰. தன்வயிற் கரத்தலும் அவள்வயின் வேட்டலும்[1]
அன்ன இடங்கள் அல்வழி யெல்லாம்
மடனொடு நிற்றல் கடனென மொழிப

இளம்பூரணம் :

என்—எனின். தலைமகட் கின்றியமையாத மடன் அழியும். இடம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) தலைமகன் தனதொழுக்கந் தலைமகள்மாட்டுக் கரந்து உணர்த்தும் வழியும் தலைமகள்மாட்டுப் புணர்ச்சி வேட்கை தோற்றியவழியு மாகிய அத்தன்மைப்பட்ட விடங்களல்லாத வழியெல்லாம் தலைமகள் மடனொடு நிற்றல் கடன் என்று சொல்லுவர் என்றவாறு.

தன்வயிற் கரந்தவழி மடனழிப நின்றதற்குச் செய்யுள்:—

''முத்தேர் முறுவலாய் நம்வலைப் பட்டதோர்
புத்தியானை வந்தது; காணபாண் யான் றங்கினேன்''.

என்றவழி, அதற்கிடம் படாது.

---

1. இந்நூற்பா, தலைமகளைப் பற்றிய இயல்புரைப்பதாதலின் இதன்கண் 'தன்வயின்' என்புழித் 'தன்' என்றது தலைமகளையெனவும், எனவே இதனையடுத்துவருந்தொடர், 'அவன்வயின், என்றிருத்தலே பொருத்தம் எனவுங்கொள்ளுதலே இந்நூற்பாவமைதிக்கு ஒத்ததாகும். நச்சினார்க்கினியர் உரையில் 'அவன்வயின் வேட்டலும்' என்ற பாடமே காணப்படுதலின் 'அவன்வயின் வேட்டலும்' என்பதே உண்மையான பாடமாகும்.

"அவ்வியானை வனப்புடைத் தாகலுங் கேட்டேன்,,
(கலித். ௬௭)

என்றவழி, பொய்கூறினான் என்னுங் கருத்தினளாகிக் கூறுதலின் மடனழிதலாயிற்று.

"கவவுக்கை நெகிழ்ந்தமை போற்றி மதவுநடைச்
செவிலி கையென் புதல்வனை நோக்கி
நல்லோர்க் கொத்தனிர் நீயிர் இஃதோ
செல்வர்க் கொத்தனம் யாமென மெல்லவென்
மகன்வயிற் பெயர்ந் தேனே,, (அகம் .உ௬)

என்றவழி வேட்கை தணிதலாகாதாள் அது தணியுந்துணையு முயங்காது, கவவுக்கை நெழ்ந்ததெனப் பெயர்தல் மடனழிதலாயிற்று[1]

நச்சினார்க்கினியம் :

இது, பெண்டிர்க்கியல்பாகிய மடமை யழிவதோர் வழுவமைக்கின்றது.

(இ-ள்.) தன்வயின் கரத்தலும்-தலைவன் தலைவியிடத்தே புறத்தொழுக்க மின்றென்று பொய்கூறலும்; அவன் வயின் வேட்டலும்—அங்ஙனங் கரந்துகூறிய தலைவன்கட் டலைவி விரும்புதலும்; அன்ன இடங்கள் அல்வழி எல்லாம்—ஆகிய அவை போலும் இடங்களல்லாத இடத்தெல்லாம்; மடனொடு நிற்றல் கடன் என மொழிப-தலைவி மடமையுளளாகி நிற்றல் கடப்பாடென்று கூறுவர் புலவர் (எ-று.)

எனவே, இவ்விரிடத்தும் மடனழிதலுடையளென வழுவமைத்தார். அது "குதிரை வழங்கிவருவல்,, (கலி.96) என்று

1. தலைவனைக் கூடுதல் வேண்டும் எனத் தான் அவன்பாற் கொண்ட வேட்கை தணியாத நிலையினளாகிய தலைவி, தன்மனத்தெழும் வேட்கையினைத் தன் அறிவின்திறத்தால் வெளிப்படாது அடக்கிக்கொண்டு அவ்வேட்கை தணியுமளவும் தலைவனைக் கூடி முயங்காமல், அவன் தானே வந்து தன்னைக் கூடிய நிலையிலும் விருப்பமில்லாதாள் போன்றிருந்து தன்னை இறுகத்தழுவிக் கொண்ட அவன் கை சிறிது நெகிழ்ந்த அளவில், அவன் தன்பால் அன்பிலன் என்பதற்கு அந்நெகிழ்ச்சியே காரணமென்று சொல்லிச் சிறிது இடம் பெயர்ந்தாள் என்பது இங்கு எடுத்துக் காட்டிய அகநானூறு உசா—ஆம் பாடலிற் குறிக்கப்பெற்ற நிகழ்ச்சியாகும். இவ்வாறு தலைமகள் அறிவின் திறம் புலப்பட நிகழ்ந்த இந்நிகழ்ச்சிக்கு அவட்கியல்பாகிய மடன் என்னும் பண்பின் அழிவே காரணமாதலின் இது மடனழிதலாயிற்று.

அவன் கரந்தவழி, அதனை மெய்யெனக் கோடலன்றே மடமை. அங்ஙனங்கொள்ளாது அறிந்தேன் குதிரைதானெனப்பரத்தையர்கட் டங்கினாயெனக் கூறுதலின் இது மடனழிந்த வழுவமைதி யாயிற்று.[1]

' கவவுக்கை......பெயர்தந்தேனே'' (அகம்-26)

என்றவழி, மனத்து நிகழ்ந்த வேட்கையை மறைத்து வன்கண்மை செய்து மாறினமையின் அதுவும் மடனழிந்து வழுவாகி யமைந்தது. அன்ன இடமென்றதனால்,

''யாரினுங் காதல மென்றேனா ஊடினாள்
யாரினும் யாரினும் என்று'' (குறள். 1314)

என்றாற்போல மடனழிய வருவனவுங் கொள்க. (கக)

ஆய்வுரை: இது, தலைவிக்கு இன்றியமையாத பண்புகளுள் ஒன்றாகிய மடன் அழிவதோர் இடமுணர்த்துகின்றது.

(இ-ள்) தலைவன் தனது புறத்தொழுக்கத்தைத் தன்பால் மறைத்த இடத்தும் தான் அவன்பால் வேட்கையுற்றவிடத்தும ஆகிய அத்தன்மையவாகிய இடங்களலலாத் எல்லாவிடங்களி லும் தனக்குரிய மடனெனனும் குணம் நீங்காது நிற்றல தலைவி யின கடனாம் எ-று

பெண்களுக்கு இன்றியமையாத நாணத்தின் சிறப்பினை மேல இரண்டு நூற்பாக்களிற புலப்படுத்திய தொலகாப்பியனார் இந்நூற்பாவில தலைவிககுரிய மடன் என்னும் பண்பினை வற் புறுத்துகின்றார 'கரததல, எனறது தலைவன் செயலாதல போல,'வேட்டல' என்றது தலைவியின் செயலாயிற்று. கரததலும் வேட்டலும ஆகிய தொழில சென்று முடியுமிடம் முறையே தானும (தலைவியும்), அவனும் (தலைவனும்) ஆதலபற்றித் 'தன்வயிற கரத்தலும அவனவயின் வேட்டலும்' எனச் சூத்திரஞ்செய்தார

1. கரத்தல் தலைவனது தொழில். வேட்டல் தலைவியது தொழில்.

தலைவன் தனது புறதொழுக்கத்தைமறைத்துக் 'குதிரையைச் செலுத்தி வருவேன்' எனக் கூறியபொழுது, தலைவி தன்மடமை காரணமாக அவன் கூறிய தனை அவ்வாறே உண்மையாக ஏற்றுக் கொள்ளுதல்முறை. இங்கு அவன் கூறிய தனைத் தலைவி ஏற்றுக்கொள்ளாமல் 'நீ கூறிய குதிரை இன்னதென்றறிந்தேன். பரத்தையராகிய குதிரைக்கண் தங்கி வருகின்றாய்' எனத் தலைவன் மறைத்த செய்தியை உய்த்துணர்ந்துரைத்தலால் தலைவி இவ்விடத்துத் தனக்குரிய மடன் அழிந்து கூறினாளாதலின்' 'இது மடனழிந்த வழுவமைதியாயிற்று' என்றார்.

ஆசிரியர். மடனொடு நிற்றற் குரியவளாகத் 'தான' என்று இங்குக் கூறப்படுவாள் தலைவியேயாதலின் 'தன்' என்றது அவளையே குறிக்கும். வயின்—இடம். கரத்தல்-தலைவன் தான் செய்த தவற்றினை மறைத்தல். வேட்டல்—தலைவனை முயங்கு தல் வேண்டும் என்னும் வேட்கையுடையளாதல். அன்ன இடங்கள் அல்வழியெல்லாம்-மேற்குறித்த அத்தன்மையவாய இடங்களல்லாத ஏனைய எல்லா இடங்களிலும். வழி இடம். மடன் ஆவது, நிகழ்ந்தவற்றைத் தான் தெளிவாக அறிந்திருந்தும் அறியாதாள் போன்று தனது அறிவினைப் புலப்படுத்திக்கொள்ளாதிருக்கும் பண்பு. மடன் அழிதலாவது, தலைமகள் தான் அறிந்தவற்றை மனத்தின்கண் அடக்கிக்கொள்ளாது அவற்றைக் கூற்றினாலும் குறிப்பினாலும் வெளிப்படுத்தல்.

கக. அறத்தொடு நிற்குங் காலத் தன்றி
அறத்தியல் மரபிலள் தோழி என்ப.

இளம்பூரணம்

இது, அறத்தொடு நிற்கு நிலைமரபு உணர்த்திற்று.

(இ-ள்) தலைவி அறத்தொடு நிற்குங் காலத்தன்றித் தோழி தானே அறத்தொடு நிற்கும் மரபு இலள் என்றவாறு.[1]

தலைவி அறத்தொடு நிற்குமாறு:—

"வீழ்ந்த மாரிப் பெருந்தண் சாரற்
கூதிர்க் கூதளத் தலரி நாறும்
மாதர் வண்டின் நயவருந் தீங்குரல்
மணநாறு சிலம்பின் அசுணம் ஓர்க்கும்

---

1. அறத்தொடு நிற்றலாவது, தலைமகள், அன்பிற் சிறந்தானொருவனைத் தனக்குரிய தலைவனாக் மனத்திற்கொண்ட ஒருமையுணர்வினைத் தான் ஆருயிர்த் தோழிக்கு அறிவித்தலும், தோழி செவிலித்தாய்க்குத் தகுதியுடைய மொழிகளால் அறிவித்தலும் ஆகும். 'அறத்தொடு நிற்றல் என்னும் இத்தொடர்க்கு "அறம் என்பது தக்கது. தக்கதனைச் சொல்லி நிற்றல்" எனவும் "அறம் என்பது கற்பு. கற்பின் தலைநிற்றல்" எனவும் பொருள் விளக்கும் தருவர் இறையனார் களவியல் உரையாசிரியர்.

இங்கு, அறத்தொடு நிற்குங்காலம் என்பது, தலைவி தோழிக்கு அறத்தொடு நிற்குங்காலத்தின்  என்பதும் 'அறத்தியல்மரபு இலள்' என்றது, 'தலைவியின் இசைவின்றித் தோழிதானே அறத்தொடு நிற்கும் முறைமையிலள்' என்பதும் இளம்பூரணர் உரையாற் புலனாகும்.

உயர்மலை நாடற் குரைத்தல் ஒன்றோ
துயர்மருங் கறியா அன்னைக் கிந்நோய்
தணியுமா றிதுவென உரைத்தல் ஒன்றோ
செய்யா யாதலிற் கொடியை தோழி
மணிகெழு நெடுவரை அணிபெற நிவந்த
செயலை யந்தளிர் அன்னவென்
மதனின் மாமைப் பசலையுங் கண்டே'' (நற்றிணை.உசச)

என வரும். தோழி யறத்தொடு நிற்றல் வருகின்ற சூத்திரத்தாற் கூறுப. (கக)

நச்சினார்க்கினியம் :

இது, தலைவியால் தோழிக்கு வருவதோர் வழுவமைக்கின்றது.

(இ - ள்) அறத்தோடு நிற்கும்[1] காலத்தன்றி - தலைவி இக்களவினைத் தமர்க்கறிவுறுத்தல் வேண்டுமென்னுங் கருத்தினளாகிய காலத்தன்றி; தோழி அறத்தியன் மரபிலளென்ப—தோழி அறத்தினியல்பாகத் தமர்க்குக் கூறும் முறைமையிலளென்று கூறுவர் புலவர் (எ - று.)

காலமாவன நொதுமலர்வரைவும் வெறியாட்டெடுத்தலும் முதலியன. தலைவி களவின்கண்ணே கற்புக்கடம் பூண்டு ஒழுகுகின்றாளை நொதுமலர் வரைவைக் கருதினார் என்பதூஉம், இற்பிறந்தார்க்கேலாத வெறியாட்டுத் தம்மனைக்கண் நிகழ்ந்ததூஉந் தலைவிக்கிறந்துபாடு பிறக்குமென்று உடகொண்டு அவை பிறவாமற் போற்றுதல் தோழிக்குக் கடனாதலின் இவை நிகழ்வதற்கு முன்னே தமர்க்கறிவித்தல் வேண்டும்; அங்ஙனம் அறிவியாதிருத்தலின் வழுவாயமைந்தது.

''இன்றியாண் டையனோ தோழி குன்றத்துப்
பழங்குழி யகழ்ந்த கானவன் கிழங்கின்
கண்ணகன் தூமணி பெறூஉ நாடன்

1. அறத்தொடு நிற்குங்காலம் ஆவது தலைவியை அயலார் மணம்பேச எண்ணிவருதலும் தலைவியின் மெலிவறிந்த செவிலி அம்மெலிவு நீங்க வேலனைக் கொண்டு வெறியாட்டு நிகழ்த்துதலும் முதலியன நிகழும் நிலையில் உயிரினுஞ் சிறந்த தலைவனொடு தனக்குளதாகிய நட்பினைப் பெற்றோர்க்குப் புலப்படுத்தல் வேண்டும என்னும் எண்ணம் தலைவியின் உள்ளத்தே தோன்றி அதனைத் தோழிக்குப் புலப்படுத்துங்காலம். அக்காலத்தி லன்றித் தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்றலை மேற்கொள்ளுதல் இலள் எனவே தலைவியின் குறிப்புணர்ந்த பின்னரே தோழி அறத்தொடு நிற்றற்குரியள் என்றவாறாம்.

அறிவுசாழ்க் கொள்ளு மனைவைச் சிறுதொடி
யெயமில் வருகுலை நீயெனப்
பொய்ம லோதி நீவி யோனே.'' (குறுந். 379)

இது, நொதுமலர் வரைவுகூறிஉசாவி அறத்தொடு நின்றது.

''கடவுட் கற்சுனை யடையிறந் தவிழ்ந்த '' (நற்றிணை 34)

இது வெறியாட்டெடுத்தவழி அறத்தொடு நின்றது.

''அகவன் மகளே அகவன் மகளே.'' (குறுந். 23)

இது கட்டுக்காணிய[1] நின்றவிடத்து அறத்தொடு நின்றது.

அதுவும்[2] வெறியாட்டின்கண் அடங்கும். தலைவிக்குக் குறிப்பினுமிடத்தினுமல்லது வேட்கை நெறிப்பட வாராமையிற் சின்னாள் கழித்தும் அறத்தொடு நிற்பா ளாகலானுஞ் செவிலியும் நற்றாயுங் கேட்ட பொழுதே அறத்தொடுநிற்ப ராகலானும் ஆண்டு வழுவின்று[3] (கஉ)

ஆய்வுரை :

இது, களவொழுக்கம் நிகழுங்கால தோழிக்குரியதோர் இடல் புணர்த்துகின்றது

(இ—ள்) தலைவி தலைவனொடு தனக்குண்டாகிய தொடர்பினைத் தம்பெற்றோருக்கு அறிவித்தல் வேண்டும் என்னுங்கருத்தினளாகிய காலத்தன்றித் தோழி தானே அறத்தொடு நிற்கும் முறைமையிலள். எ—று

அறத்தியல் மரபாவது, தலைவி அன்பிற் சிறந்தான் ஒருவனைத் தனக்குரிய தலைவனாகத் தன்னுள்ளத்திற்கொண்டுளளாள் அவளை அவளால் விரும்பப்பெற்ற தலைவனுக்கே மணஞ்செய்து கொடுத்தல் வேண்டும் எனக் காதலர் இருவரது அன்பின்

1. காணிய—காண; செய்யிய வென்னும்வாய் பாட்டு வினையெச்சம். கட்டுக்காணுதலாவது, நெல் முதலிய தானியங்களை முறத்திலிட்டுப்பகுத்து அவற்றை இரண்டிரண்டாக வைத்து ஒற்றை இரட்டை பார்த்துக் குறிசொல்லுதல்.

2. அதுவும்—கட்டுக்காணுதலாகிய அதுவும்,

3. செவிலியும் நற்றாயும் கேட்ட அப்பொழுதே அறத்தொடு நிற்பார் ஆதலின் அவ்விடத்தில் அவர்பால் வழுவின்று-தோழிதலைவனொடு தலைவிக்குளதாகிய தொடர்பினைத்தலைவி கூறுதற்குமுன்னேயுணர்ந்தாளாயினும் தலைவியின் குறிப்பறிந்த பின்னரே அறத்தொடு நிற்கவேண்டுதலின் அங்ஙனம் காலந்தாழ்த்தல் வழுவாய் அமைத்துக்கொள்ளப் படுவதாயிற்று என்பதாம்.

வழிப்பட்ட மனைவாழ்க்கையறத்தின் முறைமையாகும் எனக்கூறுதல் இங்ஙனம் காதலர் இருவரிடையே மறைவில நிகழ்ந்த அன்புரிமைத தொடர்பினை அறத்தின்வழிநின்று வெளிப்படுததுதல அறததொடு நிறறல என்பபடும். அறத்தொடு நிற்றல், எனனும் இததொடர்க்கு ''அறம் என்பது தக்கது; தக்கதனைச் சொலலி நிற்றல'' எனவும். ''அறம் என்பது கற்பு; கறபின் தலை நிற்றல'' எனவும் பொருள் கொள்வர் இறையனார் களவியலுரையாசிரியர்

தலைவன் தலைவி என்னும் இருவரும் இயற்கைப்புணர்ச்சி யாகிய முதற்காட்சியில் ஒருவரையொருவர் கண்டு கூடிய முறைமை தூய அன்பொடுபொருந்திய அறத்தின்வழிப்பட்ட நற்செயலே யென்பதனைத் தோழி செவிலிக்கு எடுத்துரைத்தல களவுவெளிப் படுததலின் கருத்தாகும். இங்ஙனம் வெளிப்படுத்தும் முறையினை அறத்தொடு நிற்றல என வழங்குதல் தொல்காப்பியனார் காலத் திற்கு முற்பட்ட மரபாகும் எனபது, 'அறத்தொடு நிற்கும் காலத் தன்றி' எனவரும் இச்சூத்திரத்தொடரால் நன்கு தெளியப்படும்.

௪௨. எளித்தல் ஏத்தல் வேட்கை யுரைத்தல்
கூறுதல் உசாஅதல் ஏதீடு தலைப்பாடு
உண்மை செப்புங் கிளவியொடு தொகைஇய
ஏழு வகைய[1] என்மனார் புலவர்.

**இளம்பூரணம் :**

என்—எனின். இது தோழி அறத்தொடு நிற்குமாறு உணர்த். திற்று.

இதற்குப் பொருள் களவியலுள் தோழிகூற்றுப். உரைக் கின்றுழி உரைக்கப்பட்டது[2] (௪௨)

---

1. 'தொகைஇ யவ்வெழுவகைய' என்பது நச்சினார்க்கினியர் கொண்டபாடம்.

2. 'தோழிக்குரிய கிளவியெல்லாந் தொகுத்துணர்த்தும் களவியல் உ௬— ஆம் சூத்திரத்தில், 'முன்னிலையறனெனப்படுதலென்றிருவகைப் புரை தீர்கிளவி தாயிடைப் புகுப்பினும்' என வருந்தொடருக்குரிய உரைப்பகுதியிலே இப்பொருளி யற் சூத்திரத்தினைத் தாம் எடுத்துக்காட்டிப் பின்வருமாறு இதற்கு உரைவிளக்கம் தந்தமையின் 'இதற்குப் பொருள் களவியலுள் தோழி கூற்று உரைக்கின்றுழி உரைக்கப்பட்டது'. என்றார் இளம்பூரணர்.

எளித்தல் என்பது, தலைவன் நம்மாட்டு எளியனென்று கூறுதல். அதனது பயம். மகளுடைத்தாயர் தம்வழி ஒழுகுவார்க்கு மகட்கொடை வேண்டுவராதலான் எளியன் என்பதுகூறி அறத்தொடு நிற்கப்பெறும்.' எ—று

நச்சினார்க்கினியம் :

இதுவும் அவ்வாறத்தொடு நிலை இனைத்தென்கின்றது.

(இ - ள்.) எளித்தல்—தலைவனை எளியனாகக் கூறுதல்; ஏத்தல்—அவனை உயர்த்துக் கூறல்; வேட்கை உரைத்தல்-அவ

---

"அன்னையறியினும் அறிக" (அகநானூறு—எய) எனவரும். 'அன்னை' என்றது நற்றாயை.

ஏத்தல் என்பது, தலைவனை உயர்த்திக்கூறுதல். அது மகளுடைத்தாயா தலைவன் 'உயர்ந்தான்' என்றவழி மனமகிழ்வர்ஆகலின், அவ்வாறு கூறப்பட்டது. உயர்த்துக்கூறி அறத்தொடு நிற்கப்பெறும். எ—று

"அன்னாய் வாழி வேண்டன்னை...

இதனளவுண்டுகோள்மதிவல்லோர்க்கே" (அகம்—சஅ)

இதனுள் கழுநீர் மாலையன், வெட்சிக்கண்ணியன் எனக் கூறின, மையால் அவன் நாட்டிற்கும் மலைக்குந்தலைவன் என்பதுபடவும், ஒருகணை தெரிந்து கொண்டு புலியாது? என்ற அவனது வீரியமுங்கூறி உயர்த்தவாறுங் காண்க.

வேட்கையுரைத்தலாவது, தலைவன் மாட்டுத் தலைவி வேட்கையும் தலைவி மாட்டுத் தலைவன் வேட்கையும் கூறுதல். வேட்கைகூறி அறத்தொடு நிற்கும் எ—று

'நின்மகள் உண்கண் பன்மாண்நோக்கிச் சென்றோன்' (அகம் —சஅ) என்பது தலைவன் வேட்கை கூறியவாறாம்

"அன்னாய் வாழிவேண் டன்னையென் றோழி
நனி நாணுடைய ளெனினு மஞ்சு
மொலிவெள்ளருவி யோங்குமலை நாடன்
மலர்ந்த மார்பிற் பாயல்
தவநனி வெய்யள் நோகோ யானே" (ஐங்குறு—உளரு)

இது தலைவி வேட்கை கூறியது.

கூறுதலாவது, தலைவியைத் தலைவற்குக் கொடுக்கவேண்டும் என்பது படக்கூறுதல்.

உ-ம். 'வாடாத சான்றோர்' (திணைமாலை. யரு) எனவும்

'கறிவளர் சிலம்பிற்' (ஐங்குறு—உசகூ) எனவும் வரும்.

உசாவுதல் என்பது, வெறியாட்டுங் கழங்கும் இட்டுரைத்துழி வேலனோடா தல் பிறரோடாதல் தோழி உசாவுதல்,

"முருகயர்ந்து வந்த முதுவாய் வேல...

சிலம்பன் தண்டாரகல்மும் உண்ணுமோபலியே" (குறுந்—௩௬உ.)

இது வேலனொடு உசாவுதல்.

'இன்றியாண்டையனோ தோழி.
எம்மில் வருகுவை நீயெனப் ...
பொம்மலோதி நீவியோனே' (குறுந், ௩எ௬.)

இது செவிலி கேட்பத் தலைவியொடு தோழி உசாவியது. பிறவுமன்ன,

னது வேட்கை மிகுத்துரைத்துக் கூறல்; கூறுதல் உசாதல்[1] தலைவியுந் தோழியும் வெறியாட்டிடத்தும் பிரிவிடத்துஞ் சில கூறுதற் கண்ணே தாமும் பிறருடனேயும் உசாவுதல்; ஏதீடு[2] ஒருவன் களிறும் புலியும் நாயும் போல்வன காத்து எம்மைக் கைக்கொண்டா னெனவும் பூத்தந்தான் தழை தந்தானெனவும் இவைமுதலிய காரண மிட்டுணர்த்தல்; தலைப்பாடு[3] இருவருந் தாமே எதிர்ப்பட்டார் யான் அறிந்திலேனெனக் கூறுதல்; உண்மை செப்புங் கிளவியொடு தொகைஇ - என்று அவ்வாறனையும் படைத்துமொழியாது

---

ஏதீடு தலைப்பாடு என்பது, யாதானுமோர் ஏதுவை இட்டுக்கொண்டு தலைப்பட்டமைகூறுதல்.

உ-ம். 'காமர் கடும்புனல் கலந்தெம்மொடாடுவாள்...

அருமழை தரல்வேண்டிற் றருகிற்கும் பெருமையனே'' (கலித். ௩௯)

இது புனலிடை உதவினானெனத் தலைப்பாடு கூறியது.

''சுள்ளிசுனைநீலம் ...சார்ங்கடாயானை
உதணாற்கடிந்தானுளன்'' (திணைமாலை—உ)

இது களிற்றிடை உதவினானெனத் தலைப்பாடு கூறியது.

''அன்னாய் வாழிவேண்டன்னை யென்னை
தானும் மலைந்தான் எமக்குந் தழையாயின'' (ஐங்குறு—உ0௧)

இது தழையுங் கண்ணியுந் தந்தான் என்பதுபடக் கூறியது.

உண்மை செப்புங்கிளவியாவது, பட்டாங்கு கூறுதல். (பட்டாங்கு கூறுதலாவது நிகழ்ந்தது நிகழ்ந்தபடியே கூறுதல்)

''அல்கல்மழை பொழிந்த வகன்கணருவி
யாடுகழை யடுக்கத் திழிதரு நாடன்
பெருவரை யன்ன திருவிறல் வியன்மார்பு
முயங்காது கழிந்த நாளிவள்
மயங்கிதழ் மழைக்கண் கலிழு மன்னாய்.'' (ஐங்குறு-௨ உ0)

இவ்வகையெல்லாம் தத்தங் குடிமைக்கேற்ற வழிக்கொள்க'' என்பது இச்சூத்திரத்துக்கு இளம்பூரணர் தந்த உரையும் விளக்கமுமாகும்.

1. கூறுதல் உசாதல் — கூறுதற்கண் உசாவுதல்., அஃதாவது தலைவியும் தோழியும் வெறியாட்டு நிகழுங்காலத்தும் தலைமகள்பால் பிரிவின் துயர் மிக்க நிலையில் தம்மிருவர்க்குள்ளே நிகழும் கூற்றிலும் வேலன் கட்டுவிச்சி முதலியோருடன் நிகழும் கூற்றிலும் தோழி வினாவுதல்.

2. ஏதீடு — தலைவன் தலைவியை எதிர்ப்பட்டமைக்குக் காரணம் இட்டுரைத்தல்.

3. தலைப்பாடு—இயல்பாகவே எதிர்ப்பட்டனர் என்றல். கூறுதல் உசாதல் என்பதனைக் கூறுதல் எனவும் உசாதல் எனவும் இரண்டாகவும் 'ஏதீடு தலைப்பாடு' என்பதனை ஒன்றாகவும் கொண்டு எண்ணுவர் இளம்பூரணர்.

பட்டாங்கு கூறுதலென்னுங் கிளவியோடே கூட்டி; அவ் எழுவகைய என்மனார் புலவர் - அத்தன்மைத்தாகிய ஏழு கூற்றையுடைய அறத்தொடு நிற்றலென்று கூறுவர் புலவர் (எ—று.)

'அவ்வெழுவகைய' என்றதனால் உண்மை செப்புங்கால் ஏனை ஆறுபொருளினுட் சில உடன்கூறி உண்மை செப்பலும், ஏனைய கூறுங்காலுந் தனித்தனி கூறாது இரண்டு மூன்றும் உடனே கூறுதலுங் கொள்க.

உ—ம்: ''எல்லும் எல்லின் றசைவுபெரி துடையேன்
மெல்லிலைப் பரப்பின் விருந்துண்டு யானுமிக்
கல்லென் சிறுகுடித் தங்கின்மற் றெவனோ
எனமொழிந் தனனே யொருவன்'' (அகம். 110)

என்பது எளித்தல்.

''பகன்மா யந்திப் படுசுடரமையத்
தவன்மறை தேஎ நோக்கி மற்றிவன்
மகனே தோழி என்றனள்'' (அகம். 48)

என்பது ஏத்தல்.

''பூணாக முறத்தழீஇப் போதந்தான்'' (கலி. 39)
என்பது வேட்கையுரைத்தல்.

''முருகயர்ந்து வந்த முதுவாய் வேல
சினவ லோய்புமதி வினவுத லுடையேன்
பல்வே றுருவிற் சில்லவிழ் மடையொடு
சிறுமறி கொல்'றிவள் நறுநுதல் நீவி
வணங்கினை கொடுத்தி யாயின் அணங்கிய
விண்டோய் மாமலைச் சிலம்பன்
ஒண்தார் அகலமும் உண்ணுமோ பலியே.'' (குறுந். 362)

இது வேலனொடு கூறுதலுசாதல். கூறுதற்கண் உசாதலென விரிக்க.

''வாடாத சான்றோர் வரவெதிர் கொண்டிராய்க்
கோடாது நீர்கொடுப்ப தல்லது—கோடா
எழிலும் முலையும் இரண்டிற்கும் முந்நீர்ப்
பொழிலும் விலையாமோ போந்து'' (திணை, நூற். 15)

இதுவும் உசாதலாய் அடங்கும்.

''உரவுச் சினஞ்செருக்கித் துன்னுதொறும் வெகுளும்
முள்ளைவாள் எயிற்று வள்ளுகிர் ஞமலி
கிளையாக் கண்ணே வளைகுபு நெரிதர
நடுங்குவன மெழுந்து நல்லடி தளர்ந்தியாம்
இடும்பைகூர் மனத்தே மருண்டு புலம்படர
மாறுபொரு தோட்டிய புகல்வின் வேறுபுலத்
தாகாண் விடையின் அணிபெற வந்தெம்
அலமர லாயிடை வெரூஉதல் அஞ்சி
மெல்லிய இனிய மேவரக் கிளந்தெம்
ஐம்பால் ஆய்கவின் ஏத்தி யொண்டொடி
அசைமென் சாயல் அவ்வாங் குந்தி
மடமதர் மழைக்கண் இளையீர் இறந்த
கெடுதியும் உடையேன் என்றனன்''

(குறிஞ்சிப்பாட்டு, 130 142)

என நாய் காத்தவாறும்,

''கண்ணவிடு பண்டூக் கானங் கல்லென
மடிவிடு வீளையர் வெடிபடுத் தெதிரக்
கார்ப்பெயல் உருமிற் பிளிறிச் சீர்த்தக
இரும்பிணர்த் தடக்கை இருநிலஞ் சேர்த்திச்
சினந்திகழ் கடாஅஞ் செருக்கிமரங் கொல்பு
மையல் வேழம் மடங்கலின் எதிர்தர
உய்விடம் அறியே மாகி யொய்யெனத்
திருந்துகோல் எல்வளை தெளிர்ப்ப நாணுமறந்து
விதுப்புறு மனத்தேம் விரைந்தவற் பொருந்திச்
சூருறு மஞ்ஞையி னடுங்க வார்கோல்
உடுவுறு பகழி வாங்கிக் கடுவிசை
அண்ணல் யானை அணிமுகத் தழுத்தலிற்
புண்ணுமிழ் குருதி முகம்பாய்ந் திழிதரப்
புள்ளி வரிநுதல் சிதைய நில்லா
தயர்ந்துபுறங் கொடுத்த பின்னர் நெடுவேள்
அணங்குறு மகளி ராடுகளங் கடுப்பத்
திண்ணிலைக் கடம்பின் திரளரை வளைஇய
துணையறை மாலையிற் கைபிணி விடேஎம்

நுரையுடைக் கலுழி பாய்தலின் உரவுத்திரை
அருங்கரை வாழையின் நடுங்கப் பெருந்தகை
அஞ்சில் ஓதி யசையல் எனையதூஉம்
அஞ்சல் ஓம்புநின் அணிநலங் காக்கென
மாசறு சுடர்நுதல் நீவி நீடுநினைந்
தென்முக நோக்கி நக்கனன்...... ...''

(குறிஞ்சிப் பாட்டு, 160—183)

எனக் களிறு காத்தவாறும், புனலுள் எடுத்தவாறுங் காண்க.

''புலிபுலி யென்னும் பூசல்தோன்ற
.........நிற்றந் தோனே.'' (அகம்.48)

இது, புலிகாத்தற்கு வந்தானென இட்டுரைத்தது.

''அன்னாய் வாழிவேண் டன்னை என்னை
தானு மலைந்தான் எமக்குத் தழையாயின
பொன்வீ மணியரும் பினவே
யென்ன மரங்கொலவர் சார லவ்வே.'' (ஐங்குறு. 201)

இது, தோழி தழைதந்தானென அறத்தொடு நின்றது.

''சுள்ளி சுனைநீலஞ் சோபா லிகைசெயலை
அள்ளி அளகத்தின் மேலாய்ந்து'' (திணை, நூற். 2)

இதனுள் அளகத்தின் மேலாய்ந்தெனவே பூத்தந்தமை கூறினாள்.

''பிறிதொன் றின்மை யறியக் கூறிக்
கொடுஞ்சுழிப் புகாஅர்த் தெய்வ நோக்கிக்
கடுஞ்சூள் தருகுவ னினக்கே.'' (அகம். 110)

இது தலைப்பாடு.

''நேரிறை முன்கை பற்றி நுமர்தர
நாடறி நன்மணம் அயர்கஞ் சின்னாள்
கலங்கல் ஓம்புமின் இலங்கிழை யீரென
ஈர நன்மொழி தீரக் கூறித்
துணைபுணர் ஏற்றின் எம்மொடு வந்து

துஞ்சா முழவின் மூதூர் வாயில்
உண்டுறை நிறுத்துப் பெயர்ந்தனன் அதற்கொண்
டன்றை அன்ன விருப்போ டென்றும்
இரவரன் மாலைய னேவரு தோறுங்
காவலர் கடுகினுங் கதநாய் குரைப்பினும்
நீதுயில் எழினும் நிலவுவெளிப் படினும்
வேய்புரை மென்தோள் இன்றுயில் என்றும்
பெறாஅன் பெயரினும் முனிய லுறாஅன்
இளமையின் இகந்தன் றும் இலனே
வளமையில் தன்நிலை திரிந்தன்றும் இலனே''
(குறிஞ்சிப் பாட்டு, 231—245)

''கன்மழை பொழிந்த அகன்கண் அருவி
ஆடுகழை அடுக்கத் திழிதரு நாடன்
பெருவரை யன்ன திருவிறல் வியன்மார்பு
முயங்காது கழிந்த நாளிவண்
மயங்கிதழ் மழைக்கண் கலுழும் அன்னாய்'' (ஐங்குறு. 220)

என வருவன உண்மைசெப்பல்.

''காமர் கடும்புனல்'' (கலி. 39) என்பதனுள் இரண்டு வந்தன பிறவுமன்ன. (சங)

**ஆய்வுரை :**

இது, தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்குமாறு உணர்த்துகின்றது.

(இ—ள்) எளித்தல், ஏத்தல், வேட்கையுரைதல், கூறுதல் உசாதல், ஏதீடு, தலைப்பாடு, உண்மைசெப்புங்கிளவியொடு சேர்த்து அறத்தொடு நிற்றற் பகுதி எழுவகைப்படும். எ—று.

செவிலிக்குத் தோழி அறத்தொடுநிற்குங்கால், தன்னிகரற்ற தலைவன் இளையோராகிய எங்களிடத்து மிகவும் எளியனாக நடந்துகொண்டான் எனக் கூறுதலும், இத்தகைய அருளும் சிறப்பும் உடையான் அத்தோன்றல் எனத் தலைவனை உயர்த்துப் புகழ்தலும், தலைவன் தலைவியிருவரும் ஒருவரொருவர்பால் அன்பினால் நிரம்பிய வேட்கையுடையார் எனக்கூறுதலும், அத்

தகைய தலைவனுக்கே நம் தலைவியை மணஞ்செய்து கொடுத்தல் வேண்டும் என்னும் குறிப்புத் தோன்றக் கூறுதலும், தலைவியின் நோயினைத் தணித்தல வேண்டி வேலன் முதலியோரைக் கொண்டு வெறியாட்டு முதலிய நிகழ்த்தியபொழுது அவை தலைவியின் வருத்தத்தைத தணித்தற்குரியன அல்ல எனக்கூறித தடுத்தல்வேண்டி அவர்களபால சிலவற்றை வினாவுதலும், தலைவன் யாதேனும் ஒரு காரணததை முன்னிட்டு வருங்கால் தன்கருத்தின்றி இயல் பாகவே தலைமகளை எதிர்ப்பட்டான் எனக்கூறுதலும், தலை மகனும் தலைமகளும் ஒருவரையொருவர் எதிர்ப்பட்டபொழுது நிகழ்ந்த நிகழ்ச்சியினை நிகழ்ந்தமுறையே மெய்ம்மையாக எடுத் துக் கூறுதலும என இவ்வேழு வகையால் அறததொடு நிற்றல் நிகழும் என்பதனைத தொலகாப்பியனார் இச்சூத்திரத்தால் விளங்க அறிவுறுததியுள்ளமை காணலாம்.

இங்ஙனம் தோழி அறததொடு நிற்குங்கால், தலைவியின் குடிப்பிறப்பிற்கும் செவிலியின் அறிவிற்கும் தலைவியின் நாணம் கற்பு முதலிய பெருமைக்கும் தனது காவலுக்கும் தலைவனுக் குரிய அறிவு நிறை, ஓர்ப்பு, கடைப்பிடியென்னும் பெருந்தன்மைக் கும் தவறு நேராதபடி இக்களவொழுக்கம் நிகழ்ந்த முறைமையினை முரண்பாடில்லாத மொழிகளால் செவிலிக்கு எடுத்துரைத்தல் மரபாகும என்பர் இறையனார் களவியலுரையாசிரியர்.

கந. உற்றுழி யல்லது சொல்லல் லின்மையின்
அப்பொருள் வேட்கைக் கிழவியி னுணர்ப.

**இளம்பூரணம் :**

என்—எனின். இது செவிலிக்குரியதோர் மரபுணர்த்திற்று.

(இ-ள்) காமம் மிக்கவழி யல்லது சொல்நிகழ்ச்சி யின்மை யின் தலைமகள் தான் கருதிய பொருண்மேல் வேட்கையைத் தலைமகள் தன்னானே யறிவர் என்றவாறு.[1]

---

1. உற்றுழியல்லது—காமம் மிக்கவழியல்லது.
சொல்லல் இன்மையின் — தலைமகள்பால் சொல்நிகழ்ச்சியில்லாமையால். 'அப் பொருள் வேட்கை' என்றது, தலைமகள் தான் கருதிய பொருளாகிய தலைமகன் மேற்கொண்டுள்ள வேட்கையினை. கிழவியின உணர்தலாவது, தலைமகளிடத்துன வாகிய உடல் மெலிவு முதலிய குறிப்புக்களால் உணர்ந்து கொள்வல்.

பன்மையிற் கூறினமையால் அவ்வுணர்ச்சி செவிலிக்கும், நற்றாய்க்கும் ஒக்கும் என்றவாறு.[1]

இதனாற் சொல்லியது, அறத்தொடு நிற்பதன் முன்னம் செவிலி குறிப்பினான் உணரும் எனக் கொள்க.[2]

"அன்னாய் வாழிவேண் டன்னை நின்மகள்
பாலும் உண்ணாள் பழங்கண் கொண்டு
நனிபசந் தனளென வினவுதி" (அகம். சஅ)

என்றவழிச் செவிலி குறிப்பினான் உணர்ந்தவாறு காணக. வேட்கை தோற்றத் தலைமகனில்லாதவழித் தோழிகூற்று நிகழும் அது "காமர் கடும்புனல்" (கலித். ௩௯) என்னும் பாட்டினுள் காண்க. (௩௫)

நச்சினார்க்கினியம் :

இது, மேலதற்கோர் புறனடை.[3]

(இ-ள்) உற்றுழி[4] அல்லது சொல்லல் இன்மையின்—தலைவியர்க்கு ஏதமுற்ற இடத்தன்றித் தோழி அவ்வாறு மறை புலப்படுத்துக் கூறாளாதலின்; அப்பொருள் வேட்கை கிழவியின் உணர்ப — அம் மறை புலப்படுத்துதல் விருப்பத்தைத் தலைவியர் காரணத்தால் தோழியர் உணர்வர் (எ—று.)

'உணர்வ'ரென்று உயர்திணைப் பன்மையாற் கூறவே தலைவியருந் தோழியரும் பலரென்றார். 'கிழவி'[4] யென்றாரேனும் "ஒருபாற் கிளவி" (தொல் பொ. 222) யென்பதனாற் பன்மையாகக் கொள்க. உயிரினுஞ் சிறந்த நாணுடையாள் (113) இது புலப்படுத்தற்கு உடம்படுதலின் வழுவாயமைந்தது.

---

1. 'உணர்ப' எனப் பன்மையாற் கூறினமையால் இவ்வாறுணர்வோர் செவிலியும் நற்றாயும் என்பது புலனாம்.

2. தோழி தன்பால் அறத்தொடு நிற்பதற்கு முன்னமேயே செவிலி குறிப்பினால் உணரும் என்பது இச்சூத்திரத்தாற் கூறப்பட்டது என்பது இளம்பூரணர் கருத்தாகும்.

3. தலைவியின் வேட்கைக் குறிப்புணர்ந்து அறத்தொடு நிற்றற்குரியளாக மேலே கூறப்பட்ட தோழிக்குரியதோர் இயல்புணர்த்துவதாக இச்சூத்திரத்தினை நச்சினார்க்கினியர் பொருள் கொண்டமையால் 'இது மேலதற்கோர் புறனடை' எனக் கருத்துரைவரைந்தார்.

4. உற்றுழி-துன்பமுற்றகாலத்து., 'உற்றுழியுதவியும்' (புறம்) என இச்சொல் இப் பொருளில் வழங்கின்றுள்ளமை காண்க. ஏதம்-துன்பம்.

இன்னுயிர் கழிவ தாயினும் நின்மகள்
ஆய்மலர் உண்கண் பசலை
காமநோயெனச் செப்பா தீமே." (அகம் 52)

என்றாற்போல்வனவே இலக்கணமென்பது மேலைச்சூத்திரத்தாற் கூறுப[1] (கச)

**ஆய்வுரை:** இது, செவிலிக்கும் நற்றாய்க்கும் உரியதோர் திறம் உணர்த்துகின்றது. (இ—ள்) காமவுணர்வு மிக்குத் தோன்றிய வழியல்லது சொல்நிகழ்ச்சியிலலாமையால் அத்தகைய காதற் பொருள்பற்றிய தலைமகளது வேட்கையினை அவளது தோற்ற முதலியனபற்றிச் செவிலி முதலியோர் குறிப்பினால் உணர்வர் எ—று.

'உணர்ப, எனப் பன்மையாற் கூறினமையால் இங்ஙனம் தலைமகளது மெய்வேறுபாடுகண்டு அவளது உள்ளத்தின் வேட்கையினைச் செவிலியும் நற்றாயும் தோழி அறத்தொடு நிற்கு முன்னரே குறிப்பினால அறிநதுகொள்வர் என்பதாம். உற்றுழியல்லது—காமம் மிக்குத்தோன்றியவழியல்லது. உறுதல்—மிகுதல். சொல்லல் இன்மையின்—அதனைக்குறித்துச் சொல்நிகழ்ச்சி தலைமகள்பால தோன்றுதல் இல்லையாதலின., அப்பொருள் வேட்கை -தலைமகள் தான்கருதிய பொருள்மேற்கொண்ட வேட்கையினை., கிழவியின் உணர்ப—தலைவியின் குணஞசெயல் மாற்றங்களும் உடல்மெலிவும் முதலிய குறிப்புக்களால் செவிலியும நற்றாயும் முன்னரே உணரப்பெறுவர்.

தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்பதன் முன்னமேயே செவிலி தலைமகளது களவொழுக்கத்தைக் குறிப்பினால் கூர்ந்துணர்ந்து. 'தலைமகள்பால தோன்றும் இவ்வேறுபாடு எதனாலாயிற்று' எனத் தோழியை நோக்கி வினவியறிவாள் என்பது இச்சூத்திரத்தால உணர்த்தப்பெறுஞ செய்தியாகும்.

1. இச்சூத்திரத்திற்கு நச்சினார்க்கினியர் கொண்ட இப்பொருள் இவ்வியலில் 'அறத்தொடு நிற்கும் காலத்தன்றி அறத்தியல் மரபிலள் தோழியென்ப' (யஉ) என முன்னுள்ள சூத்திரத்திலேயே அமைந்து கிடத்தலானும் 'அறத்தியல் மரபிலள்' என்றாங்கு இந்நூற்பாவில் கிழவியின் உணர்வாள் என ஒருமைப்பாலாற் கூறாது 'கிழவியின் உணர்ப' எனப்பலர்பாலாற் கூறுதலானும் இந்நூற்பா இளம்பூரணர் கருதுமாறுபோன்று செவிலிக்கும் நற்றாய்க்கும் உரியதோர் மரபுணர்த்துகின்றதாகக் கொள்ளுதலே ஏற்புடையதாகும்.

மேலைச்சூத்திரமாவது 'செறிவும் நிறைவும்' என அடுத்து வரும் நூற்பாவாகும்.

உ0௬. செறிவும் நிறைவும் [1] செம்மையுஞ் செப்பும்
அறிவும் அருமையும் பெண்பா லான.

**இளம்பூரணர் :**

என்—எனின். இது பெண்டிர்க் குரியதோர் இயல்புணர்த்திற்று.

(இ - ள்.) செறிவு என்பது—அடக்கம்.

நிறைவு என்பது—அமைதி.

செம்மை என்பது—மனங்கோடாமை

செப்பு என்பது—சொல்லுதல்

அறிவு என்பது—நன்மை பயப்பனவுந் தீமை பயப்பனவும் அறிதல்.

அருமை என்பது—உள்ளக் கருத்தறிதலருமை. இவை எல்லாம் பெண்பக்கத்தன என்றவாறு.

இதனாற் சொல்லியது மேற்சொல்லிய அறத்தொடுநிலை வகையும் இனிக் கூறுகின்ற வரைவுகடாதற்குப் பகுதியும்[2] உண்மை வகையானும் புனைந்துரைவகையானும் கூறுங்கால் இவை பேதையராகிய பெண்டிர்க்கு இயையுமோ என ஐயுற்றார்க்குக் கூறப் பட்டது.[3] (கசு)

**நச்சினார்க்கினியம் :**

இது, மறைபுலப்படாமல் ஒழுகுதல் இலக்கணமென்றற்கும் மறைபுலப்படுத்துதல் வழுவென்றற்குங் கூறுகின்றது.

..................

1. 'நிறையும்' என்பது நச்சினார்க்கினியர் கொண்ட பாடம். 'நிறைவும்' எனப் பாடங்கொண்டு 'நிறைவு என்பது அமைதி' எனப் பொருள்கொண்டார் இளம்பூரணர்.

2. "மேற்சொல்லிய அறத்தொடு நிலைவகையும் இனிக்கூறுகின்ற வரைவு கடாதற் பகுதியும்" என்றிருத்தல் வேண்டும்.

3. மேற்கூறியவாறு எளித்தல் முதலாக எழுவகைப்பட அமைந்த உரைத் திறங்களால் அறத்தொடு நிற்றலும் வரைதல் வேட்கை வரைவு கடாதற் பகுதி களாற் குறிப்பினாலும் தம் உள்ளத்துணர்வுகளைத் தலைவனுக்கு வெளியிட் டுரைத்தலும் என உண்மைவகையாலும் படைத்து மொழிதலாகிய புனைந்துரை வகையாலும் நிகழ்த்தும் இவ்வுரையாடல் பேதையராகிய பெண்டிர்க்குப் பொருந் துவதோ என ஐயுற்ற மாணவரை நோக்கி ஐயம் அகற்றுவதாக அமைந்தது இச் சூத்திரம் என்பது இளம்பூரணர் கருத்தாகும்.

(இ - ள்.) செறிவும் - அடக்கமும்; நிறைவும் - மறைபுலப் படாமல் நிறுத்தும் உள்ளமும்[1]; செம்மையும் - மனக்கோட்ட மின்மையும்; செப்பும் - களவின்கட் செய்யத் தகுவன கூறலும்; அறிவும் - நன்மைபயப்பனவுந் தீமை பயப்பனவும் அறிவித் தலும்; அருமையும் - உள்ளக்கருத்தறிதலருமையும்; பெண் பாலான - இவையெல்லாம் பெண்பாற்குக் காரணங்கள் (எ - று.)

இவையுடையளெனவே மறைபுலப்படுத்தற்கு உரியளல்ல ளென்பதூஉம் அதனைப் புலப்படுத்தலின் முற்கூறியன வழு வமைத்தனவுமாயிற்று. இவை வருஞ்சூத்திரத்திற்கும் ஒத்த லிற் சிங்கநோக்கு.[2] (கரு)

**ஆய்வுரை:** இது, செயிர்தீர் சிறப்பின் நால்வர் என மேற்குறிக்கப் பெற்ற பெண்டிர்க்குரிய சிறந்த பண்புகளை விரித்துக் கூறுகின்றது.

(இ—ள்) அடக்கம், அமைதி, நேர்மை, உண்மையினை வற்புறுத்தும் சொல்வன்மை, தீதொரீஇ நன்றின்பாலுய்க்கும் நல்லறிவு, பிறர்பாற் காணுதற்கரிய அருமை என்பன பெண்டிர்க் குரிய சிறப்பியல்புகளாகும் எ—று.

ஆகவே மேற்சொல்லிய அறத்தொடு நிலைவகையும் இனிக் கூறும வரைவு கடாதற்பகுதியும் ஆகியவற்றை உண்மைவகை யானும் புனைந்துரைவகையானும் கூறும் ஆற்றல் தோழி முதலிய பெண்பாலார்க்குண்மை இனிது புலனாம். செறிவு—அடக்கம். நிறைவு—அமைதி, சால்பு. 'நிறையும்' என்பது நச்சினார்க்கினி யர் கொண்ட பாடம். 'நிறையெனப்படுவது மறை பிறரறியாமை' (கலி—கங) என்பது இங்கு நினைக்கத்தக்கது.

உ0எ. பொழுதும் ஆறுங் காப்புமென் றிவற்றின்
வழிவி னாகிய குற்றங் காட்டலும்

1.' மறைபுலப்படாமல் நிறுத்தும் உள்ளமும்' எனவரும் உரைப்பகுதிகொண்டு இச்சூத்திரத்தில் 'நிறை' யென்பதே நச்சினார்க்கினியர் கொண்டபாடம் என்பது நன்கு தெளியப்படும். 'நிறையெனப்படுவது மறைபிறரறியாமை'' (கலி—கஙங) எனவரும் கலித்தொகைத் தொடரும் இங்குக் கருதத்தகுவதாகும். இளம்பூரணர் 'நிறைவு' எனப்பாடங்கொண்டு 'அமைதி' எனப் பொருள்வரைந்துள்ளமையும் இங்கு எண்ணத் தகுவதாகும்.

2. இந்நூற்பா செவிலி தோழி முதலியோர் இயல்புரைப்பனவாக இதன் முன்னும் பின்னும் உள்ள சூத்திரங்களை நோக்கி நிற்றலின் சிங்கநோக்கு எனப் பட்டது.

தன்னை யழிதலும் அவணூ றஞ்சலும்
இரவினும் பகலினும் நீவா என்றலும்
கிழவோன் தன்னை வாரல் என்றலும்
நன்மையுந் தீமையும் பிறிதினைக் கூறலும்
புரைபட வந்த அன்னவை பிறவும்
வரைதல் வேட்கைப் பொருள என்ப.

இளம்பூரணம் ;

என்—எனின். இது தோழி கூற்றிற் கூறப்பட்ட சில கிளவிக்குப் பயன் உணர்த்திற்று.

(இ—ள்.) தலைமகன் வருகின்ற பொழுதும் நெறியும் ஊரின்கட் காவலும் என்று சொல்லப்பட்டவற்றின்கண் வரும் தப்பினால் உளதாகுங் குற்றங் காட்டலும், தான் மனனழிந்து கூறலும், தலைமகட்கு வரும் இடையூறு கூறலும், தலைமகனைப் பகற்குறி விலக்கி இரவுக்குறி நீவா என்றலும், இரவுக்குறி விலக்கிப் பகற்குறி நீ வா என்றலும்,[1] தலைமகனை வாராதொழியெனக் கூறலும், நன்மையாகவுந் தீமையாகவும் பிறபொருளை எடுத்துக் கூறலும், இத் தன்மையவாகிக் குற்றம் பயப்ப வந்த அத்தன்மைய பிறவும் புணர்ச்சி விருப்பமின்மையாற் கூறப்பட்டனவல்ல ; வரைதல்வேண்டும் என்னும் பொருளையுடைய என்றவாறு.

இவையெல்லாந் தோழி கூற்றினுள் கூறப்பட்டன. ஆயின் ஈண்டோதிய தென்னை எனின், அவை வழுப்போலத் தோற்றும் என்பதனைக் கடைபிடித்து அன்பிற்கு மாறாகாது ஒருபயன் பட வந்த தெனஉணர்த்துதலே ஈண்டு ஓதப்பட்ட தென்ப. நன்மையுந் தீமையும் பிறிதினைக் கூறலும் என்பது நாடும் ஊரும் இல்லுங் குடியும் என ஆண்டோதப்பட்டது. இவை வரைதல் வேட்கைப் பொருளவாமாறும் ஆண்டுக் காட்டப்பட்ட உதாரணத்தான் உணர்க. (கரு)

நச்சினார்க்கினியம் :

இதுவும் தோழிக்குந் தலைவிக்கும் உரியனவாகிய வழுவமைக்கின்றது.

---

1. "தலைமகற்குவருமிடையூறு கூறலும் தலைமகனைப் பகற்குறிவிலக்கி இரவுக்குறி நீவாவென்றலும்" என இவ்வுரைத் தொடரைத் திருத்திக்கொள்க.

(இ - ள்.) பொழுதும் ஆறும் காப்பும் என்றிவற்றின் வழுவின்ஆகிய குற்றங் காட்டலும் - இராப்பொழுதும் அக்காலத்து வழியுங் கண்ணுறும் இடத்துள்ள காவலுமென்று கூறப்பட்டவை மூன்றினது பழையமுறையிற் பிறழுதலால் தலைவற்குளதாகிய குற்றத்தையுணர்த்தலும் :

இவை தலைவற்கு அச்சம் உளவாகக் கருதுதலும் அவனால் நிகழும் இன்பத்தைத் துன்பமாகக் கருதுதலும் உடையனவாயிற் றேனும் அன்புபற்றிக் கூறலின் அமைந்தது. அப்பொழுதிற் றலைவனது செலவுவரவு நிகழ்ந்துழியே இக்குற்றங் காட்டுவ தென்று கொள்க.

"மன்றுபா டவிந்து..............."                                    (அகம் 128)

என்பது பொழுது வழுவுதலிற் குற்றங்காட்டியது.

"ஈர்ந்த ணாடையை எல்லி மாலையை
சோர்ந்துவீழ் கதுப்பினாள் செய்குறி நீவரின்
ஒளிதிகழ் ஞெகிழியர் கவணையர் வில்லர்
களிறென ஆர்ப்பவர் ஏனல்கா வலரே."                                    (கலி. 52)

இது, காப்பினான் வழுவுணர்த்தியது.

தன்னை அழிதலும் - அவன் அக்காலத்து அவ்வழியில் தனியே வருதற்கு யான் ஏதுவாயினேன் எனத் தன்னை அழிவு படுத்துரைத்தலும் :

"நீதவ றுடையையும் அல்லை நின்வயின்
ஆனா அரும்படர் செய்த
யானே தோழி தவறுடை யேனே."                                    (அகம். 72)

அவன் வரவினை உவவாது துன்பங்கூர்தல் வழுவாயினும், அதுவும் அவன்கண் அன்பாதலின் அமைத்தார்.

அவன் ஊறு அஞ்சலும் - அவ்வழியிடத்துத் தலைவற்குவரும் ஏதமஞ்சுதலும்:

"அஞ்சுவல் வாழி யைய ஆரிருள்
கொங்கியர் ஈன்ற மைந்தின்
வெஞ்சின உழுவை திரிதருங் காடே"
இஃது, அவனைப் புலிநலியுமென்று அஞ்சியது.

''ஒருநாள் விழுமம் உறினும் வழிநாள்
வாழ்குவள் அல்லளென் றோழி'' (அகம். 18)
என்பதும் அது.

ஆறின்னாமையாவது, விலங்குமுதலியவற்றான் வரவிற்கு இடையீடு நிகழுமென் றஞ்சுதல். ஏத்தல், எளித்தலின் வேறாயிற்று. இது நன்குமதியாமையின் வழுவாயினும் அன்பு மிகுதியான் அமைத்தார்.

இரவினும் பகலினும் நீ வரல் என்றலும்[1] - இராப்பொழுதின்கண்ணும் பகற்பொழுதின்கண்ணுந் தலைவனைக் குறியிடத்து வருகவெனத் தோழி கூறலும் :

வல்வில் இளையரொ டெல்லிச் செல்லாது
சேந்தனை செலினே சிதைகுவ துண்டோ
பெண்ணை யோங்கிய வெண்மணற்படப்பை
அன்றில் அகவும் ஆங்கண்
சிறுகுரல் நெய்தலெம் பெருங்கழி நாட்டே'' (அகம். 120)

எனவும்,

''பூவேய் புன்னையந் தண்பொழில்
வாவே தெய்ய மணந்தனை செலற்கே'' (அகம் 240)

எனவும் வரும்.

களவு அறிவுறுமென்று அஞ்சாது வருகவென்றலின் வழுவேனுந் தலைவி வருத்தம் பற்றிக் கூறலின் அமைத்தார்.[2]

கிழவோன்றன்னை வாரல் என்றலும்-தோழியுந் தலைவியுந் தலைமை செய்துகொண்டு தலைவனை வாரற்க எனறு கூறுதலும் :

தலைமை வழுவேனும் அன்பான் அமைத்தார்.

---

1. 'நீவாவென்றலும்' என்றிருத்தல்வேண்டும்

2. உரியபொழுது, வழி, காவல் இவற்றின் மாறுபட்டு இராப்பொழுதில் தலைவனது போக்கு வரவு நிகழ்ந்த நிலையிலேதான் இத்தகைய குற்றங்களைத் தோழி எடுத்துக்காட்டுவாள் என்பதாம். இங்ஙனந் தலைவன் அடிக்கடி வருவானாயின் இக்களவொழுக்கம் பலராலும் அறியப்படுமே என்று அஞ்சாது அவனை இரவினும் பகலினும் வா எனக்கூறுதல் குற்றமாயினும் அவன் வருவானாயின் தலைவியின் வருத்தம் தணியும் என்னும் கருத்தினாற் கூறுதலின் குற்றமாகாது என அமைத்தார்.

"இரவு வாரல் ஐய விரவுவீ
அகலறை வரிக்குஞ் சாரல்
பகலும் பெறுதியிவள் தடமென் றோளே." (கலி. 49)

இஃது, இரவுவாரலென்றது.

"பகல்வரிற் கவ்வை யஞ்சுதும்" (அகம் 118)

என்றது பகல்வாரலென்றது.

"நல்வரை நாட நீவரின்
மெல்லிய லோருந் தான்வாழலளே." (அகம். 12)

இஃது, இரவும் பகலும் வாரலென்றது.

நன்மையும் தீமையும் பிறிதினைக் கூறலும்-பிறிதோர் பொருண்மேல் வைத்து நன்மையுந் தீமையுந் தலைவற்கேற்பக் கூறலும்:

"கழிபெருங் காதலர் ஆயினுஞ் சான்றோர்
பழியொடு வரூஉம் இன்பம் வெஃகார்" (அகம். 112)

எனப் பிறர்மேல் வைத்துத் தலைவனை அறிவுகொளுத்தினமை யின் வழுவாயமைந்தது. "பழியொடு வரூஉ மின்பம் வெஃகார்" எனவே புகழொடு வரூஉம் இன்பம் வெஃகுவரெனக் கொள்ள வைத்தலின் நன்மையுந் தீமையும் பிறிதின்மேல் வைத்துக் கூறிற் றாம்.

புரைபட வந்த[2] அன்னவை பிறவும்-வழுப்படவந்த இவை போல்வன பிறவும்.

அவை ஊடற்கணின்றியுந் தலைவனைக் கொடியனென்ற லும் நொதுமலர் வரைகின்றாரென்றலும் அன்னை வெறியெடுக் கின்றாளென்றலும் பிறவுமாம்.

"பகையில்நோய் செய்தான்" (கலி.40

என்பது ஊடற்கணின்றிக் கொடியனென்றது.

"தினையுண் கேழ லிரிய" என்னும் (119) நற்றிணையுள்,

2. புரை — குற்றம்.

''யாவது முயங்கல் பெறுகுவனல்லன்
புலவி கொளீஇயர்தன் மலையினும் பெரிதே.''

இது நொதுமலர் வரைவு சிறைப்புறமாகக் கூறியது.

''கடம்புங் களிறும் பாடித் தொடங்குபு
தோடுந் தொடலையுங் கைக்கொண் டல்கலும்
ஆடிப் பாடினாளாக நன்றே'' (அகம்.137)

என்பது தலைவர்க்கு வெறியாட்டுணர்த்தியது.

வரைதல் வேட்கைப் பொருள என்ப—தலைவன் வரைந்து கோடற்கண் நிகழும் விருப்பத்தைத் தமக்குப் பொருளாகவுடைய என்றவாறு.

என்றது, வழுப்படக் கூறினும் வரைவுகாரணத்தாற் கூறலின் அமைக்க வென்றவாறாம். (கசு)

ஆய்வுரை: இது, மேற்களவியலில் தோழிகூற்றுக்களைத் தொகுததுணர்த்தும் உச—ஆம் சூத்திரத்து,'ஆற்றது தீமை யறிவுறு கலக்கம்' முதல், 'அனைநிலை வகையால் வரைதல் வேண்டி னும்' என்பதீறாகக் கூறப்பட்ட சில கிளவிகளுக்குப் பயன் உணர்த்துகின்றது.

(இ—ள்) களவொழுக்கத்துத் தலைமகன் வரும் காலமும் வழியும் ஊரிடையுளதாங்காவலும் ஆகியவற்றைத் தப்பியொழுக லால் உளதாகுந் தீமைகளை எடுத்துக்காட்டலும், தான் நெஞ சழிந்து கூறுதலும் தலைமகனுக்கு உண்டாகும் இடையூற்றினைக் கூறுதலும், தலைவனைப் பகற்குறிவிலக்கி இரவில் வருக என்ற லும், இரவும் பகலும் இங்குவாராதொழிக எனக்கூறுதலும், நன் மையாகவும் தீமையாகவும் பிறபொருளையெடுத்துக்காட்டலும, பிறவுமாக இங்ஙனம் தலைவனது உயர்ச்சிகெடத் தோழிகூறுஞ் சொற்கள் யாவும் தலைமகட்குத் தலைமகன்பால் விருப்பமின்மை யாற் கூறப்பட்டன அல்ல., தலைமகளை அவன் விரைவில் மணந்துகொள்ளுதல் வேண்டும் என்னும் வேட்கையினைப் பொரு ளாகவுடைய சொற்களாம். எ—று.

புரை-உயர்ச்சி. படுதல்-கெடுதல். புரைபடவருதலாவது, தலைமகனது உயர்ச்சிகெடும்படி 'இன்னவாறு செய்க இன்னவாறு செய்யற்க' எனவிதித்தும் விலக்கியும் தலைவனைப் பணிகொள்ளு

தல் போன்று தோழியின் கூற்று அமைதல். புரை என்பதற்குக் குற்றம் எனப்பொருள் கொண்டு 'புரைபடவந்த' என்பதற்குக் 'குற்றம் பொருந்தவந்த கூற்றுக்கள்' எனக் கூறுதலும் சூத்திரக் கருத்திற்கு ஏற்புடையதாகும். இங்ஙனம் கூறுங்கால் 'பட' என்பதற்குப் 'பொருந்த' என்பது பொருள்.

உ0அ. வேட்கை மறுத்துக் கிளந்தாங் குரைத்தல்
மரீஇய மருங்கின் உரித்தென மொழிப.

இளம்பூரணம்:

என்—எனின். இதுவும் தலைமகட்குந் தோழிக்கும் உரிய தோர் இயல்புணர்த்திற்று.

(இ-ள்) வரைதல் வேட்கைப் பொருளாற் கூறுதலை மறுத்துப் பட்டாங்கு கூறிச்சொல்லுதல்[1] மருவிய பக்கத்தின்[2] உரித்தென்றவாறு. மருவிய பக்கமாவது களவொழுக்கம் நீட்டித்த இடம். அவ்வழிப் பட்டாங்கு கூறுதலும் ஆம் என்றவாறு. எனவே, மேற்கூறியவாறு கூறுதல் மருவாதவழி என்றவாறாம்.

''கொடிச்சி யின்குரல் கிளைசெத் தடுக்கத்துப்
பைங்குரல் ஏனற் படர்தருங் கிளியெனக்
காவலுங் கடியுநர் போல்வர்
மாமலை நாட வரைந்தனை கொண்மே.'' (ஐங்குறு. உஅக)

எனவரும்.	(கக)

நச்சினார்க்கினியம் :

இது, நடுவணைந்திணையல்லாத கைக்கிளை பெருந்திணைக் கட் படுவதோர் வழுவமைக்கின்றது.

---

1. 'கிளந்தாங்குரைத்தல்' என்பதற்குப் 'பட்டாங்குகூறிச் சொல்லுதல்' எனப்பொருள்வரைந்தார் இளம்பூரணர். பட்டாங்கு கூறிச் சொல்லுதலாவது தலைவியும் தோழியும் தமது உள்ளக்கருத்தினை மறைத்தலின்றி உள்ளவாறே வெளிப்படக் கூறுதல்.

2, மரீஇயமருங்கு — மருவியபக்கம்., என்றது, களவொழுக்கம் நீட்டித்து நிகழ்ந்த நிலையினை.

மேற்கூறியவாறு கூறுதல் என்றது, மேல் யகு—ஆம் சூத்திரத்திற் கூறியவாறு மறைத்துக்கூறுதலை.

(இ-ள்) வேட்கை மறுத்து - தம் மனத்து வேட்கையை மாற்றி; ஆங்குக் கிளந்து உரைத்தல் - இருவரும் எதிர்ப்பட்ட விடத்துத் தாம் ஆற்றின தன்மையைப் புலப்படக் கூறி ஒருவர் ஒருவர்க்கு அறிவித்தல்; மரீஇய மருங்கின் உரித்தென மொழிப - புலனெறி வழக்கஞ்செய்து மருவிப்போந்த கைக்கிளை பெருந் திணைக்கண் உரித்தென்று கூறுவர் ஆசிரியர் (எ-று.)[1]

'கைக்கிளை முதலாப் பெருந்திணை யிறுவாய்' (தொல் அகத்.1) என அவை இருமருங்கும் நிற்றலின் ஈண்டு மருங்கென்றார்.

''தமக்கினி தென்று வலிதிற் பிறர்க்கின்னா
செய்வது நன்றாமோ மற்று.'' (கலி. 62)

இஃது அடியோர் தலைவராயவழித் தலைவி வேட்கை மறுத்துணர்த்தியது.

''எறித்த படைபோன் முடங்கி மடங்கி
நெறித்துவிட் டன்ன நிறையேரால் என்னைப்
பொறுக்கல்லா நோய்செய்தாய் பொறீஇ நிறுக்கல்லேன்
நீ நல்கின் உண்டென் னுயிர்'' (கலி. 94)

''உழுந்தினுந் துவ்வாக் குறுவட்டா நின்னின்
இழிந்ததோ கூனின்பிறப்பு '' (கலி. 94)

இவை, அடியோர் தலைவராக வேட்கைமறுத்துணர்த்தியது. பெருந்திணை.

ஏனை வினைவலபாங்கினோர்க்கு வந்துழிக் காண்க. இவை கைகோளிரண்டன்கண்ணும் வழங்குதல் சிறுபான்மையுரித்தென்று அகத்திணைக்கட் கூறலின் வழுவமைத்தார். 'ஒன்றென முடித்த' லான் மரீஇயவாறு ஏனையவற்றிற்குங் கொள்க [2]

---

1. அடியோரும் வினைவலரும் அகத்திணைத் தலைவராய்க் களவு கற்பு என்னும் இருவகைக்கை கோளிலும் சிறுபான்மை இடம் பெறுதல் உண்டென்பது.

'அடியோர்பாங்கிலும் வினைவலபாங்கினும்
கடிவரையிலபுறத்தென்மனார் புலவர்' (தொல். அகத். 23) என அகத் திணையியலிற்கூறுதலால் வேட்கை மறுத்து ஆங்குங்கிளந்துரைத்தல் மரீஇயமருங் கின் உரித்து' என வழுவமைத்தார்.

2. கைக்கிளை பெருந்திணையல்லாத ஏனை அகத்திணைகட்கும் இவ்வாறு வேட்கை மறுத்துக்கிளந்துரைத்தல் ஒன்றென முடித்தல் என்னும் உத்தியாற்கொள்க என்பார் 'ஒன்றென முடித்தலான் மரீஇயவாறு ஏனையவற்றிற்குங் கொள்க' என்றார்

""புள்ளிக் கள்வன் புனல்சேர், பொதுக்கம்போல்
வள்ளுகிர் போழ்ந்தனவும் வாளெயி றுற்றனவும்
ஒள்ளிதழ் சோர்ந்தநின் கண்ணியும் நல்லார்
சிரறுபு சீறச் சிவந்தநின் மார்புந்
தவறாதல் சாலாவோ கூறு'' (கலி, 88)

எனவும்,

""குதிரையோ வீறியது'' (கலி. 96)

எனவும் வருவனவும் பிறவும் 'இழிந்தோர் கூற்றை உயர்ந்தோர் கூறுவன; அவையும் அமைத்துக்கொள்க.[1] (கஎ)

**ஆய்வுரை:** இதுவும் தோழிக்கும் தலைவிக்கும் உரியதோர் திறம் உணர்த்துகின்றது.

(இ—ள) தலைவன் களவொழுக்கத்து நீட்டித்து ஒழுகிய நிலையில் மேற் குறித்த வண்ணம் வரைதல் வேட்கைப் பொருள் படக் குறிப்பாகச் சொல்லாது களவொழுக்கத்திலொழுகும் தலைவனது வேட்கையை மறுததுத் தலைவியை மணநது கொளளுதல் வேண்டும் என்னும் தம் உள்ளக்கருத்தினை அவ்விடத்து உள்ள வாறு எடுத்துரைத்தலும் தோழிக் குரியதோர் இயல்பாகும் எனக் கூறுவர் அறிஞர். எ-று

இங்கு வேட்கை என்றது, களவொழுக்கத்தை மேற்கொண்டு ஒழுகுதலில் தலைவனுக்கு உளள விருப்பத்தினை. மறுத்தலாவது, வழியருமை, காவல், அலர் முதலிய இடையூறுகளைக் கூறி இனி இக்களவொழுக்கினைத் தவிர்தல் வேண்டும் என்றல். ஆங்குக் கிளந்துரைத்தல் என மாற்றிப் பொருள் உரைக்கப் பட்டது. கிளந்துரைத்தலாவது களவொழுக்கத்தை விடுத்துத் தலைவியை விரைவில் மணந்துகொளளுதல் வேண்டுமென்னும் தமது உள்ளக்கருததினை வெளிப்படக்கூறுதல். இனி, கிளந் தாங்கு, என்பதனைப் 'பட்டாங்கு' என்றாற்போல ஒருசொல் லாகக்கொண்டு, 'கிளந்தாங்குரைததல்—மனத்திற் கருதியதனை' மறையாது மனத்திற்பட்டவாறே வெளிப்படையாகக் கூறுதல் எனப்பொருளுரைத்தலும் பொருத்தமுடையதே.

---

1. இங்கு எடுத்துக்காட்டிய கலித்தொகை 88, 96—ஆம் பாடல்களில் காதலர் இருவருடைய உரையாடல்கள் அமைந்த பகுதிகள் 'இழிந்தோர் கூற்றை உயர்ந்தோர் கூறுவன' ஆகக் கொண்டு கூறிய கூற்றுக்களாதலின் அவற்றை யும் வழுவமைதியாக இப்பொருளியலில் அமைத்துக்கொள்க என்பது கருத்து.

'மரீஇயமருங்கு' என வரும் இச்சூத்திரத தொடர்க்குக் 'களவொழுக்கம் நீட்டித்தபக்கம்' எனப்பொருள்கொண்டு, இளம் பூரணர் கூறியவுரையே முன்னும் பின்னுமுள்ள சூத்திரங்களோடு தொடர்புடையதாக அமைந்துள்ளது. இனி, 'மரீஇயமருங்கு' என பதற்குப் ''புலனெறி வழக்கஞ்செய்து மருவிப்போந்த கைக்கிளை பெருந்திணைக்கண்'' எனப்பொருள்கொண்டார் நச்சினாக் கினியர். 'அன்பினைந்திணைக்களவொழுக்கம் பற்றிய விதிகளுக் கிடையே கைக்கிளை பெருந்திணைபற்றிய கூற்றுக்களைப் பற்றிய விதி இடம்பெறுதற்கியைபின்மையின இச்சூத்திரத்திற்கு இளம் பூரணர் உரையே பொருத்தமுடையதெனக் கொள்ளற்பாலதாகும்.

உ0க. தேரும் யானையுங் குதிரையும் பிறவும்
ஊர்ந்தனர் இயங்கலும் உரியர் என்ப.

**இளம்பூரணம்:**

என்—எனின் இது தலைமகற்குரியதோர் மரபுணர்த்திற்று.

(இ-ள்.) களவுகாலத்துத் தேரும் யானையும் குதிரையும் பிறவும் ஊர்ந்து சேறலும் உரியர் என்றவாறு. களவின்கண் என்பது அதிகாரத்தான் வந்தது.[1]

''நெடுந்தேர் கடாஅய்த் தமியராய் வந்தோர்
கடுங்களிறு காணீரோ என்றீர்—கொடுங்குழையார்
யானை அதருள்ளி நிற்பரோ தம்புனத்து
ஏனல் கிளிகடிகு வார்.''

பிறவு மன்ன.

'ஊர்ந்தன ரியங்கலு முரியர்' என்றமையால் தனி வருதல் பெரும்பான்மை. இதனை எச்சவும்மையாக்கி வையமூர்தலும் இளையரோடு வருதலுங் கொள்க.

---

1. இவ்வியல் யக—ஆம் நூற்பா முதல் களவொழுக்கம் பற்றிய விதிகளே தொடர்ந்து கூறப்பட்டு வருதலால், 'தேரும் யானையும் குதிரையும் ஊர்ந்தனர் இயங்கல் 'களவின்கண் என்பது அதிகாரத்தான் வந்தது' என்றார். கற்பின்கண் இத்தகைய ஊர்திகளை ஊர்ந்து செல்லுதற்குத் தடையின்மையின் என்க.

'ஊர்ந்தனர் இயங்கலும் உரியர்' என்புழி உம்மை எதிர்மறையாதலின் ஊர்திகளில் ஒரோவழிச் செல்லுதலன்றிப் பலமுறை செல்லுதல் கூடாதென்பதும் பலமுறை தொடர்ந்து ஊர்திகளிற்செல்லின் களவொழுக்கம் புறத்தார்க்குப் புலனாய் வெளிப்படும் என்பதும் புலப்படுத்தியவாறு.

''வல்வே லிளையரொ டெல்லிச் செல்லாது'' (அகம். ௧௨0)
என வரும்.

பிறவுமன்ன. இதனாற் சொல்லியது பெரியார் இவ்வாறு செய்வார் எனவுங் கூறியவாறாம். (௬௭)

நச்சினார்க்கினியம்:

இது, களவொழுக்கத்துக்கு மறுதலையாயதோர் வழு வமைக்கின்றது.[1]

(இ - ள்) தேர் முதலியவற்றையும் பிற ஊர்திகளையும் ஏறிச்சென்று கூடுதலையும் உரியர் தலைவரென்று கூறுவர் புலவர் (எ - று)

'பிறவாவன' கோவேறுகழுதையுஞ் சிவிகையும் முதலியனவாம். இது செல்வக் குறைபாடின்மை கூறுதலான் அமைந்தது.

''குறியின்றிப் பன்னாள்நின் கடுந்திண்டேர் வருபதங்கண்
டெறிதிரை யிமிழ்கானல் எதிர்கொண்டா ளென்பதோ
அறிவஞ ருழந்தேங்கி யாய்நலம் வறிதாகச்
செறிவளை தோளூர இவளை நீ துறந்ததை'' (கலி. 127)

''நிலவுமணற் கொட்குமோர் தேருண் டெனவே'' (அகம். 20)

எனவும்,

''கடுமான் பரிய கதழ்பரி கடைஇ
நடுநாள் வரூஉம்'' (நற். 149)

எனவும்,

''கழிச்சுறா வெறிந்த புட்டாள் அத்திரி
நெடுநீர் இருங்கழிப் பரிமெலிந் தசைஇ'' (அகம். 120)

எனவும் வரும்.

---

1. களவொழுக்கமொழுகுந்தலைவன் தேர் யானை குதிரை முதலிய ஊர்திகளில் ஏறிச் சென்று தலைவியொடு கூடினான் என்றல் அவன் மேற்கொண்ட களவொழுக்கத்துக்கு முரண்பட்ட வழுவாயினும் அவனது செல்வக் குறைபாடின்மையைப் புலப்படுத்தலால் குற்றமன்றென அமைத்துக்கொள்ளப்படுவதாயிற்று.

ஏனைய வந்துழிக் காண்க.

உம்மையான், இளையரோடு வந்து தனித்துக் கூடுதலுங் கொள்க.

"வல்வில் இளையரோ டெல்லிச் செல்லாது
சேந்தனை செலினே சிதைகுவ துண்டோ" (அகம். 120)

என்றாற்போல்வன கொள்க.

இதனானே உடன்போக்கிலும்,

"கடுங்கட் காளையொடு நெடுந்தே ரேறிக்
கோள்வல் வேங்கை மலைபிறக் கொழிய
வேறுபல் லருஞ்சுர மிறந்தன ளவளெனக்
கூறுமின் வாழியோ ஆறுசென் மாக்கள்
நற்றோள் நயந்துபா ராட்டி
எற்கெடுத் திருந்த அறனில் யாய்க்கே" (ஐங்குறு.385)

எனத்தேர் முதலிய ஏறிப்போதலுங் கொள்க. (சஅ)

ஆய்வுரை: இது, களவொழுக்கம் ஒழுகும் தலைமகற்குரியதோர் இயல்புணர்த்துகின்றது.

(இ—ள்) களவொழுக்கத்தில் ஒழுகும் தலைவர்கள் தாம் தனியே வருதலின்றித் தமக்குரியதேரும் யானையும் குதிரையும் பிறவுமாகிய ஊர்திகளில் இயங்குதற்கும் உரியர். எ—று

களவொழுக்கம் ஒழுகுந் தலைவர் ஊர்தி முதலியன இன்றித் தனித்துச் செல்லுதலே களவுவெளிப்படாமைக்கு ஏதுவாம். ஆயினும் தேர் முதலிய ஊர்திகளிலேயே செல்லும் பழக்கமுடைய தலைவர்கள் ஊர்திமுதலியன இன்றித் தனித்துச் செல்வாராயின் அச்செயல் 'ஊர்தியிற்செல்லும் இவர் ஊர்தியின்றித தனித்துச் செல்வது ஏன்' என்றதோர் ஐயம் ஊர்மக்களிடையே தோன்றிக் களவு வெளிப்படுதற்கும் ஏதுவாமாகலின் 'தேரும் யானையும் குதிரையும் பிறவும் ஊர்ந்தனர் இயங்கலும் உரியர்' என்றார் ஆசிரியர். 'ஊர்ந்தனரியங்கலும்' என்புழி உம்மை 'தாம் தனித்துச் செல்லுதலேயன்றி இவ்வாறு ஊர்தியிற் செல்லுதலும் உரியர்' என்னும் பொருள்படவந்தமையின் இறந்ததுதழீஇய எச்ச உம்மையாகும்.

௨௧௦. உண்டற் குரிய அல்லாப் பொருளை
உண்டன போலக் கூறலும் மரபே.

இளம்பூரணம் :

என்—எனின். இஃது ஒருசார் வழுவமைத்தலை நுதலிற்று.

(இ - ள்) உண்டற்றொழிலுக் குரியவல்லாத பொருளை உண்டனவாகக் கூறலும் மரபென்றவாறு.[1]

'பசலையால் உணப்பட்டுப் பண்டை நீரொழிந்தக்கால்'
(கலித். ௧௫)

எனவும்,

'நீலமுண்ட துகில்'

எனவும்,

''கண்ணுங் கொளச்சேறி நெஞ்சே இவையென்னைத்
தின்னு மவர்க்காண லுற்று.'' (குறள். ௧௨௪௪)

எனவும் வரும்.

இது சொல்லின்கட் கிடந்ததோ ரொழிபு. (௧௮)

நச்சினார்க்கினியம் :

இது, சொல்வேறுபட்டுப் பொருளுணர்த்தும் வழுவமைக்கின்றது.

(இ - ள்.) உண்டற்கு உரிய அல்லாப் பொருளை - உண்டற்றொழிலை நிகழ்த்துதற்குரிய வல்லாத பொருளை; உண்டன போலக் கூறலும் மரபே - அத் தொழிலை நிகழ்த்தினவாகப் புலனெறிவழக்கஞ் செய்தலும் மரபு (எ - று.)

அது,

''பசலையா லுணப்பட்டுப் பண்டை நீர் ஒழிந்தக்கால்''
(கலி. 15)

என வரும்.

---

1. உண்டற் றொழிலுக்கு உரியவல்லாத பொருள் என்றது, உண்ணுதலாகிய தொழிலை நிகழ்த்துதற்குரிய வினைமுதலல்லாத பசலைநிறம், கண் முதலிய உணர்வற்ற பொருள்களை.

இதன்கட் சொல்வழுவன்றிச் செய்யா மரபிற் றொழிற் படுத்து அடக்கலும் அமைத்தார்.[1] இன்னும் உய்த்துக்கொண் டுணர்த (666) லென்பதனான்[2] உண்ணப்படுதற்குரிய அல்லாத பொருளதனைப் பிறர் உண்ணப்பட்டதுபோலக் கூறலும்[3] மரபா மென்பது பொருளாகக் கொள்க. அவை,

""தோள்நல முண்டு துறக்கப் பட்டோர்
வேள்நீர் உண்ட குடையோ ரன்னர்;
நல்குநர் புரிந்து நலனுணப் பட்டோர்
அல்குநர் போகிய வூரோ ரன்னர்;
கூடினர் புரிந்து குணனுணப் பட்டோர்
சூடின ரிட்ட பூவோ ரன்னர்"" (கலி. 23)

என வரும். பிறவுங் கொள்க.

---

1. உண்ணுதற்றொழில் நிகழ்த்துதற்கு உரியவல்லாத பொருளை உண்ணுதற்றொழிலை நிகழ்த்துதற்குரிய வினைமுதலாகக் கூறுதலும் மரபு எனக்கூறும் இந்நூற்பாவில் உண்ணுதற்றொழிலல்லாதவற்றை 'உண்ணுதல்' என்ற சொல்லாற் குறிப்பிடும் சொல்வழுவும், செய்தற்றொழில் நிகழ்த்தாத பொருளை அத்தொழில் நிகழ்த்தினவாகக் கூறும் பொருள் வழுவும் ஒருங்கு அமைக்கப்பட்டன என்பதாம்.

2. உய்த்துக்கொண்டுணர்தலாவது, ஒருதொடர்க்கு ஒருபொருள் சொல்லியக்கால் அதன்கண்ணே மற்றொரு பொருளையும் உய்த்துணர்ந்து கொண்டு அறியுமாறு தோன்றச் செய்தலாகும். இந்நூற்பாவில், 'உண்டற்குரிய அல்லாப் பொருள்' என்றது 'உண்ணுதற்றொழிலை நிகழ்த்துதற்கு உரியவல்லாத பொருளை' எனவும், 'உண்டனபோலக்கூறல்' என்றது 'உண்ணுதற்றொழிலை நிகழ்த்தின போலக் கூறுதலை' எனவும் வினைமுதற்பொருளுக்குரியதாகப் பொருள் கூறி, ''உண்ணப்படுதற்குரியவல்லாத பொருளைப் பிறரால் உண்ணப்பட்டது போலக் கூறலும் மரபாம்'' எனச் செயப்படுபொருளுக்குரியதாக மற்றொரு பொருளும் உய்த்துணர்ந்து கூறும்நிலையில் இந்நூற்பா அமைந்திருத்தலால் இஃது உய்த்துக்கொண்டுணர்தல் என்னும் உத்தியாயிற்று.

'பசலையால் உணப்பட்டு' என்புழி உண்ணுதற்றொழிலைச் செய்யாத பசலை என்னும் நிறம், தலைவியின் நலத்தையுண்ணுதற்றொழிலை நிகழ்த்திய வினை முதலாகக் கூறப்பட்டுள்ளமையும்,

'தோள்நலம் உண்டு' என்புழித் தலைவனால் உண்ணப்படுதற்குரிய செயப்படு பொருளல்லாத தலைவியது தோளின் நலம் தலைவனால் உண்ணப்பட்ட செயப்படு பொருளாகக் கூறப்பட்டுள்ளமையும் காண்க.

3. 'உண்டனபோலக் கூறலும்' என்ற உம்மையால் உண்ணுதற்றொழிலே யன்றிச் செல்லுதல் முதலிய பிற தொழில்களை நிகழ்த்தினவாகக் கூறுதலும் மரபாதல் கொள்க என்பதாம்.

உம்மையாற் பிற தொழில்பற்றி வருவனவுங் கொள்க.

"கண்ணுங் கொளச்சேறி நெஞ்சே யிவையென்னைத்
தின்னும் அவர்க்காண லுற்று"        (குறள். 1244)

"புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தேன் அவ்வளவில்
அள்ளிக்கொள் வற்றே பசப்பு"        (குறள். 1187)

"வருத்தின் வான்றோய் வற்றே காமம்"        (குறுந். 102)

என்றாற்போல்வனவுங் கொள்க.        (கக)

ஆய்வுரை : இஃது அகத்திணைமக்கள் கூற்றுக்களில் இடம் பெறும் ஒருசார் சொற்பொருள் வழுவமைக்கின்றது.

(இ-ள்) உண்ணுதற்றொழிலை நிகழ்த்துதற்குரியன அல்லாத உணர்வற்ற பொருள்களை உண்ணுதற்றொழிலை நிகழ்த்தினவாக ஏறிட்டுக்கூறுதலும் இவ்வகத் திணைக்கண் வழங்கும் மரபாகும். எ—று.

உண்ணுதற்றொழிலுக்கு உரியவல்லாதபொருள் என்றது, உண்ணுதற்றொழிலை நிகழ்த்தும் அறிவும் செயலும் வாய்க்கப் பெறாத அறிவில் பொருள்களை உண்டனபோலக் கூறுதலாவது, அவை அத்தொழிலை நிகழ்த்தினவாக அத்தொழிற்கு வினை முதலாந்தன்மையை அவற்றின் மேல் ஏறிட்டுக் கூறுதல்.

'பசலையால் உணப்பட்டுப் பண்டைநீ ரொழிந்தக்கால்' (கலித். ௰௫) என்புழிப் பசலை என்பது உணர்வில்லாத பொருள். அது தலைவியின் எழில் நலத்தை உண்ணுதலாகிய தொழிலை நிகழ்த்தியதாகக் கூறினமை காண்க. தின்னுதல் முதலியவற்றிற் கும் இஃது ஒக்கும். இனி, இந்நூற்பாவுக்கு "உண்ணப்படுதற் குரியவல்லாதபொருளை உண்ணப்பட்டதுபோலக் கூறலும் மரபாம்" என வேறும் ஒருபொருள் வரைந்து, 'தோள்நலம் உண்டு துறக்கப்பட்டோர்' (கலித். உ௩) என எடுத்துக்காட்டுத்தந்து நச்சினார்க்கினியர் விளக்கியுள்ளமையும் ஏற்புடையதேயாகும்.

உகக. பொருளென மொழிதலும் வரைநிலை யின்றே
காப்புக்கைம் மிகுதல் உண்மை யான[1]

---

1. 'பொருளென மொழிதலும் வரைநிலையின்றே
காப்புக்கைம் மிகுதல் உண்மையான'
என்ற அளவிலேயே இவ்வியலின் ௰க - ஆம் சூத்திரம் நிறைவுகின்றது.

(உகஉ) அன்பே யறனே யின்ப நாணொடு
துறந்த ஒழுக்கம் பழித்தன் றாகலின்
ஒன்றும் வேண்டா காப்பி னுள்ளே.

இளம்பூரணம் :

என்—எனின். இது களவுக் காலத்துத் தலைமகற் குரியதோர் இயல்புணர்த்திற்று.

(இ - ள்.) பொருள்வயிற் பிரிதல்வேண்டும் எனக்கூறுதலும் கடியப்படாது. தலைமகளைத் தமர் காக்குங்காவல் மிகுதியுள்ள வழி இவை நீங்கப்பெறும் என்றவாறு.[1]

இதனாற் சொல்லியது அன்பையும் அறத்தையும் இன்பத்தை யும் நினைத்து வருந்தப்பெறான் எனவும், நாணத்தைக் கைவிட்டுத் தமர் கொடுக்குமாறு முயலவேண்டு மென்பதூஉம் கூறியவாறாம். இவை ஒருவழித் தணத்தற்கண் நிகழ்வன.[2] ககு)

---

1. "பொருள்வயிற்பிரிதல் வேண்டும் எனக் கூறுதலும் கடியப்படாது, தலைமகளைத் தமர்காக்குங்காவல் மிகுதியுள்ள வழி"

என்ற அளவில் இந்நூற்பாவிற்கு இளம்பூரணர் எழுதிய உரையும் நிறைவு பெற்றுள்ளமை காணலாம்.

இச்சூத்திரத்தினையொட்டிப் பகர அடைப்பில், "அன்பேயறனே ... காப்பி னுள்ளே" எனவரும் பகுதி இவ்வியலின் உய—ஆம் நூற்பாவாகும். இங்கு, ௰௬—ஆம் சூத்திரத்தின் பொழிப்புரையின் பின்

2. "இதனாற் சொல்லியது......ஒருவழித்தணத்தற்கண் நிகழ்வன" எனவரும் உரைப்பகுதி பின்வரும் உய—ஆம் சூத்திரத்திற்குரியதாகும் என்பது இளம் பூர ணருரையினையும் நச்சினார்க்கினியர் உரையினையும் ஒப்பிட்டு நோக்குங்கால் இனிது புலனாகும்.

உம் அன்பே யறனே யின்ப நாணொடு
துறந்த வொழுக்கம் பழித்தன் றாகலின்
ஒன்றும் வேண்டா காப்பி னுள்ளே.

இளம்பூரணருரையாகக் கிடைத்துள்ள ஏட்டுப்படியில் இச்சூத்திரமும் இதன் கருத் துரையும் ஏடெழுதுவோரால் எழுதாமல் விடப்பட்டனவாயினும் இதன் உரையின் எஞ்சிய பகுதி இடம்பெற்றிருத்தலால் இதனை நச்சினார்க்கினியர் உரையில் உள்ள வாறே தனிச் சூத்திரமாகக் கொண்டு இப்பகுதியில் வெளியிடுதல் இன்றியமையாத தாயிற்று.

௨௧௪. பொருளென மொழிதலும் வரைநிலை யின்றே
காப்புக் கைம்மிகுத லுண்மை யான.

நச்சினார்க்கினியம் :

இது களவின்கண் தோழிக் குரியதோர் வழுவமைக்கின்றது.[1]

(இ-ள்.) பொருள் என மொழிதலும் வரைநிலை இன்றே- எமர் வரைவு நேராமைக்குக் காரணம் பொருள் வேண்டியெனத் தோழி கூறலும் நீக்குநிலைமையின்று ; காப்புக் கைம்மிகுதல் உண்மையான - காவன் மிகுதியால் தலைவிக்கு வருத்தம் கைகடத் தலுண்டாகையால் (எ - று.)

உம்மையாற் பொருளேயன்றி ஊருங் காடும் மலையும் முதலியன வேண்டுவரென்றலுங் கொள்க.

''சான்றோர் வருந்திய வருத்தமும் நுமது
வான்றோய் வன்ன குடிமையும் நோக்கித்
திருமணி வரன்றுங் குன்றங் கொண்டிவள்
வருமுலை யாகம் வழங்கின் நன்றே
யஃதான்று[2]
அடைபொருள் கருதுவிர் ஆயிற் குடையொடு
கழுமலந் தந்த நற்றேர்ச் செம்பியன்

---

1. 'பொருளென மொழிதலும்' என்றதொடர் மொழிதற்குரியோர் இன்னா ரென்பதின்றிப் பொதுப்பட அமைந்திருத்தலால் இந்நூற்பாவைத் தலைவனுக்குரிய விதியாகக் கொண்டு 'பொருள்வயிற்பிரிதல் வேண்டும் எனக் கூறலும்' என இளம் பூரணரும், தோழிகூற்றுக்குரியதோர் வழுவமைதியாகக் கொண்டு 'எமர் வரைவு நேராமைக்குக் காரணம் பொருள் வேண்டி எனத்தோழி கூறலும்' என நச்சினார்க் கினியரும் உரைவரைந்துள்ளனர். இதன்முன் உள்ள 'உண்டற்குரியவல்லாப் பொருளையுண்டன போலக் கூறலும் மரபே' என்னும் நூற்பாவிற் குறித்தசொற் பொருள்மரபு தோழிகூற்றொடு தொடர்புடையதாக அமைந்திருத்தலானும் இதன் பின் 'அன்பேயறனே இன்பம் நாணொடு துறந்தவொழுக்கம் பழித்தன்றாகலின்' என வரும் நூற்... கனுடைய பெண்பாலார் கூற்றிலமைதற்குரிய பொருள் பற்றியதா தலானும் 'எமர் வரைவு நேராமைக்குக்காரணம் பொருள் வேண்டியே' எனத் தோழிகூறும் கூற்றுக்கள் சங்கத் தொகை நூல்களிற் காணப்படுதலானும் நச்சி னார்க்கினியர் கூறுமாறு இதனைத் தோழிக்குரிய கூற்றாகக் கொள்ளுதலே பொருத் தமுடையதாகும்.

2. அடைபொருள் — தலைவி தலைவனை மணந்து கொள்ளுதற்குக் காரண மாகிய பரிசப்பொருள்.

பங்குனி விழவின் வஞ்சியோ
டுள்ளி விழவின் உறந்தையுஞ் சிறிதே ''

இதனுட் பொருள் விரும்பியவாறுங் குன்றம் விரும்பிய வாறுங் காண்க. அடைபொருள், இவள் நும்பால் அடைதற்குக் காரணமாகிய பொருளென்க. (௨௰)

**ஆய்வுரை :** இது, களவுக் காலத்துத் தோழிக்குரியதோர் இயல்புணர்த்துகின்றது.

(இ-ள்) தலைமகளைப் புறத்தே செல்லவிடாது பெற்றோர் இற்செறித்துக்காக்கும் காவல் மிகுதிப்பட உள்ள நிலைமைக்கண் 'எங்கள்சுற்றத்தார் தலைமகளைக்கொடுக்க இசையாமைக்குக் காரணம் பரிசப்பொருளை வேண்டியே' எனத் தோழி தலைமகனை நோக்கிக் கூறுதலும் விலக்கத்தக்கதன்று (எ-று.)

காப்புக் கைம்மிகுதல் உண்மையான 'பொருள்' என மொழிதலும் வரைநிலையின்று என இயையும் காப்பு—காவல். கைம்மிகுதல்—அளவுக்கு மேல் மிகுதல் அஃதாவது தலைமகளைப் புறத்தே செல்லவொட்டாது சிறைபோன்று மனைக்கண் செறித்துக் காத்தல். வரைநிலை—விலக்கும் நிலை

இனி, களவுக்காலத்துத் தலைவனுக்குரியதோர் இயல் புணர்த்துவது இச்சூத்திரமெனக் கொண்டு, 'தலைமகளைத் தமர் காக்குங்காவல் மிகுதியுள்ள வழி பொருள் வயிற்பிரிதல் வேண்டும் எனத் தலைவன் கூறுதலும் கடியப்படாது' என இளம்பூரணர் கூறும் பொருளும் ஏற்புடையதேயாகும்.

௨௧௫. அன்பே அறனே இன்பம் நாணொடு
துறந்த ஒழுக்கம் பழித்தன் றாகலின்
ஒன்றும் வேண்டா காப்பி னுள்ளே.

**நச்சினார்க்கினியம் :**

இது, தோழி பொருளென மொழிதற்குத் தலைவியும் உடன் பட்டு நிற்றற்குரிய ளென்றலின் மேலதற்கோர் புறனடை.[1]

---

1. இது காதலர்பால் இன்றியமையாது நிலைபெறுதற்குரிய அன்பு, அறம், இன்பம், நாண் என்னும் பண்பினை யெண்ணாது மேற்குறித்தபடி தோழி பொருளென மொழிதலேயன்றிக்காவல் மிகுதியால் துன்புறும் தலைமகள் தோழிகூறுங் கூற்றிற்கு உடம்படுதலும் குற்றமன்றாம் என வழுவமைக்கின்றது.

(இ-ள்) காப்பினுள் — காவன் மிகுதியால் தலைவிக்கு வருத்தம் நிகழ்ந்தவிடத்து: அன்பே அறனே இன்பம் நாணொடு துறந்த ஒழுக்கம்-தலைவன்கண் நிகழும் அன்புங் குடிப்பிறந்தோர் ஒழுகும் அறனுந் தமக்கின்றியமையா இன்பமும் நாணும் அகன்ற ஒழுகலாறு; பழித்தன்று ஆகலின் ஒன்றும்-பழியுடைத்தன்று ஆகையினாலே புலனெறிவழக்குப் பொருந்தும்;[1] வேண்டா-அவற்றை வழுவாமென்று களையல் வேண்டா (எ-று)

எனவே, பொருளென மொழிதல் தலைவிக்கும் உடன்பாடென்று அமைத்தாராயிற்று. (உக)

ஆய்வுரை : இது களவொழுக்கத்தின்கண் தலைவிக்கு உரியதோர் இயல்புணர்த்துகின்றது.

(இ—ள்) இற்செறித்துக காக்குங் காவல் மிகுதியான நிலைமைக்கண் தலைவன்பால் தான் கொண்டுள்ள அன்பும் அன்பின் வழிப்பட்ட மனையறமும், மனையறத்தின்கண் ஒழுகி நுகர்தற்குரிய இன்பமும் பெண்ணியல்பாகிய நாணமும் ஆகிய இவற்றிற் கருத்தின்றி அடங்கியொழுகும் ஒழுக்கம் தலைவிக்குப்

---

1. ஒன்றும் என்பதனைச் செய்யும் என்னும் முற்றாகக்கொண்டு காப்பினுள் அன்பேயறனேயின்ப நாணொடு துறந்த ஒழுக்கம், ஒன்றும் —(புலனெறி வழக்கிற்குப்) பொருந்தும் எனப்பொருள் வரைந்தார் நச்சினார்க்கினியர். ஒன்றுதல்—பொருந்துதல். 'வேண்டா—' என்பதற்கு 'அவற்றை வழுவாமென்று களையல் வேண்டா' எனவரும் நச்சினார்க்கினியருரையில் 'அவற்றை' யென்றது, அன்பே ......நாணொடு துறந்த வொழுக்கத்தினை. இங்ஙனம் இச்சூத்திரத்தினை இரு தொடராக்கி ஒன்றும் என்பதனைச் செய்யுமென்னும் முற்றாக்காது, காப்பினுள் அன்பே......நாணொடு துறந்தவொழுக்கம் பழித்தன்றாகலின் காப்பினுள் அன்பே அறனே இன்பம் நாணொடு இவை ஒன்றும் வேண்டா என ஒருதொடராகக் கொண்டு பொருள் கூறலும் பொருத்தமுடையதேயாகும். இளம்பூரணருரையில் இச்சூத்திரமும் இதன் பொழிப்புரையும் சிதைந்துபோனாலும்,

"இதனாற்சொல்லியது, அன்பையும் அறத்தையும் இன்பத்தையும் நினைத்து வருந்தப்பெறான் எனவும் நாணத்தைத் கைவிட்டுத் தமர் கொடுக்குமாறு முயல வேண்டும் என்பதூஉம். கூறியவாறாம். இவை ஒருவழித்தணத்தற்கண் நிகழ்வன" என்னும் கருத்துரைப்பகுதி காணப்படுதலின் இந்நூற்பாவும் களவுக்காலத்துத் தலைமகனுக்குரியதோர் இயல்புணர்த்துவதாக இளம்பூரணர் கொண்டுள்ளார் என்பது நன்குதெளியப்படும்.

ஒருவழித்தணத்தலாவது, களவொழுக்கம் ஒழுகுந் தலைமகன் அலர்தோன்றத் தலைவி இற்செறிக்கப்பட்டுப் புறத்துப்போகாது காக்கப்பட்ட நிலையில் முன்போல் தலைவியைக்கண்டு அளவளாவுதற்கியலாது தன்பதியின்கண் ஓரிடத்தில் பரிந்துறைதலாகும்.

பழியுடையதன்று ஆதலின் இற்செறிக்கப்பட்ட காலத்தில் இவை வேண்டப்படுதல் இல்லை (எ—று.)

'கற்பினுள் அன்பே அறனே.........துறந்த ஒழுக்கம் பழித்தன்று ஆதலின் காப்பினுள் இவை ஒன்றும் வேண்டா' என இயையும். பழித்தன்று—பழியுடையதன்று.

உகஉ. சுரமென மொழிதலும் வரைநிலை யின்றே.

**இளம்பூரணம் :**

என்—எனின். இதுவும் தலைமகற்குரியதோர் திறன் உணர்த்திற்று.

(இ-ள்.) தலைமகன் பொருள்வயிற் பிரியும்வழி[1] உடன் போக்குக் கருதிய தலைமகட்கு யான் போகின்ற நெறி கல்லுங் கரடுமாகிய சுரம் எனக்கூறுதலும்[2] நீக்கப்படாது என்றவாறு. இதனாற் சொல்லியது காப்புமிகுதிக்கண் வருத்தமுறுந் தலைமகளை உடன்கொண்டு போதல் தக்கது என்பார்க்கு நெறியருமை கூறி விலக்கவும் பெறும் என்றவாறு. (உக)

**நச்சினார்க்கினியம் :**

இது, தோழிக்குந் தலைவிக்கு முரியதோர் வழுவமைக்கின்றது.

(இ-ள்.) தலைவன் பிரியக் கருதியவழித் தோழியுந் தலைவியும் நீ போகின்றவிடம் எல்லாவாற்றானும் போதற்கரிய நிலமெனக் கூறி விலக்குதலும் நீக்குநிலைமையின்று (எ—று.)

———

1. ஈண்டுப் 'பொருள்வயிற்பிரிவு' என்றது, தலைவன் வரைவைத்துத் திருமணத்தின் பொருட்டுப் பொருள்தேடப்பிரிதலை.

2. சுரம் என மொழிதலாவது, தான் பிரிந்து செல்லக் கருதிய வழி, நடத்தற்கியலாத வெம்மைமிகுந்த பாலை எனத் தலைமகட்கு வழியின் அருமை கூறித் தன்னொடு உடன்வருதலை விலக்குதல். வரைநிலையின்று—நீக்கும்நிலையில்லை. வரைதல்—நீக்குதல். 'மொழிதலும்' என்புழி உம்மை எதிர் மறையாதலின் சுற்றத்தாரால் இற்செறிக்கப்பட்டுக் காவல் மிக்க நிலைமைக்கண் வருத்த முறுந் தலைமகளை இங்ஙனம் விலக்காமல் தன்னுடன் அழைத்துச் செல்லுதலே தக்கது என்பதனையும் புலப்படுத்துவதுடன், தலைவன் தான் செல்லக்கருதிய நெறி தலைமகளது மென்மைக்கு இயையாத கடுஞ்சுரமாதலின் நெறியின் அருமையினைக் கூறித் தலைமகள் தன்னுடன் வருதலாகிய உடன்போக்கினை விலக்கவும் பெறும் என்பதனையும் புலப்படுத்துவதாகும்.

உ-ம் : ''இடுமுள் நெடுவேலி போலக் கொலைவர்
கொடுமரந் தேய்த்தார் பதுக்கை நிரைத்த
கடுநவை ஆராற் றறுசுனை முற்றி
உடங்குநீர் வேட்ட உடம்புயங் கியானை
கடுந்தாம் பதிபாங்குக் கைதெறப் பட்டு
வெறிநிரை வேறாகச் சாரச் சாரலோடி
நெறிமயக் குற்ற நிரம்பாநீ டத்தஞ்
சிறுநனி நீதுஞ்சி யேற்பினும் அஞ்சும்
நறுநுதல் நீத்துப் பொருள்வயிற் செல்வோய்
உரனுடை யுள்ளத்தை (கலி. 12)

எனச் சுரமெனக் கூறினாள்.

தலைவியுந் தோழியாற் கூற்றுநிகழ்த்தும். சூத்திரம் பொதுப் படக் கிடத்தலின் தலைவி உடன்போகக் கருதியவழித் தலைவனுஞ் சுரமெனக் கூறுதல் கொள்க.[1]

''எல்வளை யெம்மொடு நீவரின் யாழநின்
மெல்லியல் மேவந்த சீறடித் தாமரை
அல்லிசேர் ஆயித ழரக்குத்தோய்ந் தவைபோலக்
கல்லுறின் அவ்வடி கறுக்குந வல்லவோ'' (கலி. 13)

என வரும். (உஉ)

ஆய்வுரை : இது, களவொழுக்கத்தில் தலைமகனுக்குரிய-தோர் திறம் கூறுகின்றது.

(இ-ள்) தலைவன் தான்பிரிந்து செல்லுங்கால் தன்னொடு உடன் வரக் கருதிய தலைமகட்கு, 'யான்செல்லக்கருதிய நெறி வெம்மைமிகக பாலை நிலமாம்' எனக்கூறிவிலக்குதலும் குற்ற மாகாது. எ—று.

---

1. சுரம் எனமொழிதலாவது, பிரிந்து செல்லுதற்குரியவழி நடத்தற்கு இயலாத வெம்மையுடையது எனக்கூறும் முகமாக அவ்வழியிற்போதலை விலக்குதல். இங்ஙனம் மொழிவோர் இவர் எனக்கூறாது 'சுரம் எனமொழிதல்' என இந் நூற்பா பொதுப்பட அமைந்திருத்தலால், ''தலைவன் பிரியக் கருதிய வழி 'நீ போகின்றவிடம் எல்லாவற்றானும் போதற்கரிய நிலம்' எனத் தலைவியும் தோழியும் கூறிவிலக்குதலும் 'தலைவி தன்னுடன் போகக் கருதியவழித்தான் போகின்ற நெறி வெம்மையுடைய சுரமாம்' எனத் தலைவன் கூறுதலும் என இருதிறமும் கொள்ளப்படும் என்பதாம்.

சுரம்—நடத்தற்கியலாத வெம்மையுடைய வழி.

மொழிதல் என்றது, மொழிந்து விலக்குதல் என்ற கருத்தில் இங்கு ஆளப்பெற்றது.

௨௧௬. உயர்ந்தோர் கிளவி வழக்கொடு புணர்தலின்
வழக்குவழிப் படுதல் செய்யுட்குக் கடனே.

**இளம்பூரணம்:**

என்—எனின். இதுவுமோர் மரபு உணர்த்திற்று.

(இ-ள்) உயந்தோர் கூற்று வழக்குவழிப்படுதலின் வழக்குப் படுதல் செய்யுட்குக் கடன் என்றவாறு.

எனவே, வழக்கழியவருவன செய்யுட்கண் வரப்பெறா என்றவாறு. இதனானே மேலதிகாரத்தில் கூறிய சொல்லும் இவ் வதிகாரத்திற் கூறுதற்கியன்ற பொருளும் வழக்கொடு புணர்ந்தனவே செய்யுட்கண் வருவன; புணராதன செய்யுட்கண் வரப்பெறா என்றவாறாம்.[1] இன்னும் இந் நூலகத்து அகப்பொருளாகவும் புறப்பொருளாகவும் எடுத்தோதப் பட்டதன்றி உயர்ந்தோர் வழக்கொடு பொருந்தி வருவன வெல்லாஞ் செய்யுட்குப் பொருளாகப் புணர்க்க என வெஞ்சியதுணர்த்தியவாறுமாம்.[2] உயர்ந்தோர் வழக்கென்றமையானும், பொருளுமின்பமும் கெடாமல் மூன்றினுளொன்று பயப்பக் கூறுதல் கொள்க.[3] (௨௨)

**நச்சினார்க்கினியம்:**

இது, முன்னர் உலகியல் வழக்கென்றது செய்யுட்காமென்று அமைக்கின்றது.

---

1. ''வழக்கெனப்படுவதுயர்ந்தோர் மேற்றே
நிகழ்ச்சியவர்கட்டாகலான' (மரபியல். 92)

எனவரும் மரபியற் சூத்திரம், 'வழக்கென்று சொல்லப்பட்டது உயர்ந்தோர் வழக்கினை எனவும் இழிந்தோர் வழக்கு வழக்கெனப்படாது எனவும் கூறியது. இச் சூத்திரம் வழக்கழிய வருவன செய்யுட்கண் வரப்பெறா என்பது உணர்த்தியது' என இவ்விருநூற்பாக்களுக்கிடையே யமைந்த பொருள் அமைப்பினைப் பகுத்துணர்தல் இன்றியமையாததாகும்.

2. 'இந்நூலகத்து......எஞ்சியதுணர்த்தியவாறுமாம்' என்பது, இச்சூத்திரத்திற்கு இளம்பூரணர் வரைந்த இரண்டாவது உரையாகும்.

3. ''உயர்ந்தோர் வழக்கென்றமையான் பொருளுமின்பமும் அறமுங்கெடாமல் மூன்றினுள் ஒன்று பயப்பக்கூறுதல் கொள்க'' என இவ்வுரைப்பகுதியினைத் திருத்திப்பொருள் கொள்ளுதல் பொருத்தமுடையதாகும்.

(இ-ள்.) உயர்ந்தோர் கிளவியும் வழக்கொடு புணர்தலின்[1] - உயர்ந்த மக்கள் கூறுங்கூற்றும் வேதநெறியோடு கூடுதலின்;[2] வழக்கு வழிப்படுத்தல் செய்யுட்குக் கடனே—அவ் வழக்கினது நெறியிலே நடத்தல் செய்யுட்கு முறைமை (எ—று.)

'வழக்கெனப் படுவது' (தொல். பொ. 648) என்னும் மரபியற் சூத்திரத்தான் வழக்கு உயர்ந்தோர் கண்ணதாயிற்று. அவர் அகத்தியன் முதலியோரென்பது பாயிரத்துட் கூறினாம். அவை சான்றோர் செய்யுளுட் காண்க. இதனை மேலைச் சூத்திரத் திற்கும் எய்துவிக்க.

(உக)

ஆய்வுரை : இஃது பொருளதிகாரத்திற்கூறப்படும் அகமும் புறமு மாகிய ஒழுகலாறு பற்றிய செய்யுட்கு இன்றியமையாததோர் இயல்புணர்த்துகின்றது.

(இ—ள்) உயர்ந்தோர்கூறும் பொருளுரைகள் உலகியல் வழக்கொடு பொருந்தி நிகழ்தலால் அவ்வழக்கின் நெறியிலே பொருந்தி நடத்தல் செய்யுட்குரியதோர் முறைமையாகும். எ—று.

எனவே உலகியல வழக்கிற்கு மாறானபொருள்கள் செய்யுட்களில் இடம்பெறா என்பதாம். இனி, ''முன்னைய நூல் களில் அகப்பொருளாகவும் புறப்பொருளாகவும் எடுத்தோதப் பட்டனவன்றித் தம்காலத்து வாழும் சான்றோர்கள் தமது வாழ்க் கைப்பயிற்சியால் தெளிந்து கூறுவனவும் உயர்ந்தோர் வழக்கென ஏற்றுக்கொள்ளத் தக்கனவாதலின் உயர்ந்தோர்வழககொடு பொருந்திவருவனவெல்லாம் செய்யுட்குப் பொருளாகப் புணர்க்கப் படும்'' என இச்சூத்திரத்திற்குப் பொருள் கொள்ளுதலும் ஏற்புடையதேயாம் என்பது இளம்பூரணவடிகள் கருத்தாகும்.

---

1. 'உயர்ந்தோர்கிளவி வழக்கொடு புணர்தலின்' என்பதே இளம்பூரணர் கொண்ட பாடம். 'உயர்ந்தோர் கிளவியும்' எனப் பாடங்கொள்ளுங்கால் தாழ்ந் தோர் கிளவியேயன்றி உயர்ந்தோர் கிளவியும் வழக்கொடு புணர்ந்து வருதலால் எனப்பொருள்கொண்டு வழக்கு என்றது உலகில் உயர்ந்தோர் தாழ்ந்தோர் வழங் கும் இருவகை மொழிவழக்குகளையும் குறித்ததாகக் கொள்ளுதல் வேண்டும். அங் ஙனம் கொள்ளின் 'வழக்கெனப்படுவதுயர்ந்தோர் மேற்றே' எனப் பின்வரும் மரபி யற் சூத்திரத்தொடு மாறுகொள்ளும் என்க.

2. இங்கு வழக்கென்றது வழக்குஞ் செய்யுளும் ஆகிய இருவகையுள் உலகியலில் இடம்பெற்றுள்ள தமிழின் மொழி வழக்கினையே குறிப்பதன்றி வேத நெறியினைக் குறிப்பதன்றாம். எனவே 'வழக்கு' என்பதற்கு 'வேதநெறி'யென நச்சினார்க்கினியர் கூறும் பொருள் பொருந்தாதென்க.

உகசு. அறக்கழி வுடையன பொருட்பயன் வரினே*
வழக்கென வழங்கலும் பழித்த தென்ப.†

**இளம்பூரணம் :**

என்-எனின். மேலதற் கோர் புறனடை.

(இ-ள்.) அறத்திற் கழிவுடையன[1] பொருட்குப் பயன்பட வரின் அதனை வழக்கென்று வழங்குதலும் பழித்ததென்றவாறு.

பொருளாவது அகப்பொருளும் புறப்பொருளும், அறத்திற் கழிவு வரும் அகப்பொருளாவது பிறன்மனைக் கூட்டம்.

பொருட்பயன் வருதலாவது அவராலே பொருள் பெறுதல் அவ்விடத்து இன்பமும் பொருளும் பயப்பினும் அதனை வழங்குதலும் பழிக்கப்பட்ட தென்றவாறு. உம்மை முற்றும்மையாகலான்[2] வழக்கென் றுரையற்க என்றவாறு.

"எனைத்துணைய ராயினும் என்னாந் தினைத்துணையுந்
தேரான் பிறனில் புகல்." (குறள். கசச)

என வரும்.

---

*'பொருட் பயம்பட வரின்' பா.வே † 'பழித்தன்றென்ப' பா.வே.

1. அறக்கு அழிவுடையன-அறத்திற்கு அழிவுடையன. அறத்திற்கு மாறுபட்ட செயல்கள் என்பர் இளம்பூரணர். அறம் என்னும் மகரவீற்றுப் பெயர் முன் குவ்வுருபு புணருமிடத்து இடையே வருதற்குரிய அத்தும் இன்னுமாகிய சாரியைகளின்றி 'அறக்கு' எனப்புணர்ந்தது செய்யுள் விகாரம்.

"அறத்திற்குமாறான செயல்கள் பொருளாகிய பயனைக் குறித்து வந்தால் அதனை உலகியலில் வழங்கும் வழக்கு என்ற வகையில் எடுத்துரைத்தலும் சான்றோராற் பழிக்கப்பட்ட குற்றமாகும்" என்பது இச்சூத்திரத்துக்கு இளம்பூரணர் கொண்ட பொருளாகும். இங்ஙனம் பொருள்கொள்ளும் முறையில் இச்சூத்திரத்திற்கு அவர்கொண்ட பாடம் "வழக்கென வழங்கலும் பழித்ததென்ப" என்பதாகும்

'பழித்தன்றென்ப' எனப்பாடங்கொண்டு இச்சூத்திரத்திற்குப்பொருள் கூறுவர் நச்சினார்க்கினியர்.

2. "உம்மை முற்றும்மையாகலான் வழக்கென்றுரையற்க" எனக்காணப்படும் இவ்வுரைத்தொடர் "உம்மை இழிவு சிறப்பாதலான் வழக்கென்றுரையற்க" என்றிருத்தல் பொருத்தமாகும். 'வழக்கென வழங்கலும் பழித்ததென்ப' எனவரும் இத்தொல்காப்பியத் தொடர்க்கு 'உள்ளத்தால் உள்ளலுந்தீதே' (திருக்குறள்—உ அஉ) என்புழிப்போல இளம்பூரணர் உரைகொண்டுள்ள திறம் இங்கு கருதத் தகுவதாகும்.

புறப்பொருட்கண் அறக்கழிவுடையன பகைவர் தேஎத்து நிரைகோடலும் அழித்தலும் போலப் பொருட்பயன் காரணத் தான் நட்டோர் தேஎத்துஞ் செயல். இவையும் பொருள் பயப்பி னும் வழக்கென வழங்குதலாகா என்றவாறு. இதுவும் ஓர் முகத்-தான் நீதி கூறியவாறு.

> ''பழிமலைந் தெய்திய ஆக்கத்திற் சான்றோர்
> கழிநல் குரவே தலை.'' (குறள். சுருள)

என வரும். (உங)

நச்சினார்க்கினியம்:

இஃது, உலகியல் வழக்கன்றிப் பொருள் கூறினும் அமைக வென்றது.

(இ-ள்.) அறக்கழிவு உடையன[1] — உலகவழக்கத்திற்குப் பொருத்தமில்லாத கூற்றுக்கள்; பொருட்பயம் படவரின்• அகப் பொருட்குப் பயமுடைத்தாக வருமாயின்; வழக்கென வழங்கலும் அவற்றை வழக்கென்ற புலனெறி வழக்கஞ் செய்தலும்; பழித் தன்று என்ப—பழியுடைத்தன்றென்று கூறுவாராசிரியர் (எ—று.)

தலைவன் குறையுற்று நிற்கின்றவாற்றைத் தோழி தலை விக்குக் கூறுங்கால் தன்னை அவன் நயந்தான்போலத் தலைவிக்குக் கூறுவனவும், 'பொய்யாக வீழ்ந்தே னவன் மார்பின்'' (கலி.37) எனப் படைத்து மொழிவனவுந், தலைவி 'காமக் கிழவனுள்வழிப் படுதலும்' 'தாவி னன்மொழி கிழவி கிளத்தலும்' (தொல். பொ. 115) போல்வன பிறவும் அறக்கழிவுடையனவாம். தலைவி தனக்கு மறை புலப்படுத்தாது வருந்துகின்ற காலத்து அதனைத் தனக்குப் புலப்படுவித்துக்கொண்டே அவளை ஆற்றுவித்தற் பொருட்டு அறக்கழிவுடையன கூறலின் அவை பொருட்குப் பயன் றந்தனவாம்.

---

1. 'அறக்கழிவுடையன' என்பதற்கு 'அறத்திற்கு அழிவுடையன': அஃதாவது அறத்திற்கு அழிவினைத்தரும் அறமல்லாத பிறன்மனைக் கூட்டம் முதலிய பொருந் தாச் செயல்கள் எனப்பொருள் கொண்டு இளம்பூரணர் அவை உலகவழக்கில் இடம் பெற்றிருத்தல்பற்றி அந்தச் செயல்களை வழக்கெனக் கொண்டு வழங்குதல் சான்றோராற் பழிக்கப்பட்டது எனவிலக்குதல் வேண்டிப் 'பழித்தென்ப' எனப் பாடங்கொண்டார்.

"நெருநெ லெல்லை யேனற் றோன்றி" (அகம். 32) என்பதனுட்

"சிறுபுறங் கவையின னாக வதற்கொண்
டிகுபெயன் மண்ணின் ஞெகிழ்பஞ ருற்றவென்
உள்ளவ னறித லஞ்சி யுள்ளில்
கடிய கூறிக் கைபிணி விடாஅ"

எனத் தனலவன் தன்னை நயந்தானென இவன் கொண்டான் கொல்லெனத் தலைவி கருதுமாற்றால் தோழி கூறவே தலைவி மறை புலப்படுத்துவளென்பது பயனாயிற்று.

"கயமலருண்கண்ணாய் அங்க ணுடையனவன்" (கலி.37) என்பதனுள் "மெய்யறியா தேன்போற் கிடந்தேன்" என்புழி முன்னர் மெய்யறி வழிநிலை பிழையாமனின்று பின்னர்ப் பொய்யாக வழிநிலை பிழைத்துக் கூறியது வழுவேனும் இவளுந் தலைவனும் இவ்வாறே செறிந்தமை யுணர்த்தலின் மறைபுலப்படுத்துங் கருத்தினளாந் தலைவியென்பது பயனாம்.

"மள்ளர் குழீஇய விழவி னானும்" (குறுந்.31) "அருங்கடியன்னை" (நற்றிணை,365) "பாம்பு மதனழியும் பானாட் கங்குலும், அரிய வல்லமன் இகுளை"(அகம்.8) என்பனவற்றுள் தலைவி தேடிச்சென்றதூஉஞ் செல்வாமென்றதூஉஞ் சிறைப்புறமாக வரைவு கடாயது. பொருட் பயன் றருதலின் அறக்கழிவுடைய வேனும் அமைந்தன.

இது, 'பல்வேறு கவர்பொரு ணாட்டத்தான்' (தொல். பொ. 114) அறக்கழிவுடையனவுங்[1] கூறப்பெறுமென்றமைப்பது பெரும்பான்மை.[2] இஃது அதிகாரத்தாற் றோழிக்குந் தலைவிக்குங் கொள்க.

---

1. 'அறக்கழிவுடையன' என்ற தொடர்க்கு அறவே கழித்தற்குரியனவாய்க் கூறுவோர்க்கும் அவராற் கூறப்படும் கூற்றுக்கும் பொருத்தமில்லாத உரையாடல்கள் கூறக்கருதிய அகப்பொருளுககுப் பயன்படவருமாயின் அவற்றையும் வழக்கென்றே கொண்டு செய்யுள் செய்தலும் பழியுடையதன்று எனக்கொண்டு நச்சினார்க்கினியர் பயனுடையனவருமாயின் காட்டிய எடுத்துக்காட்டுப்பகுதிகள் பொருத்தமாகவே காணப்படுகின்றன. வழங்கலும் என்புழிஉம்மை இழிவு சிறப்பின்கண் வந்தது.

2. இச்சூத்திரம், "பல்வேறு கவர்பொருள் ஆராய்ச்சியால் கூறுவோர் நிலைக்கு ஒவ்வாதனவாகத் தோன்றும் உரையாடல்களும்" வழக்கென்று அமைத்துக்கொள்ளப்படும் என வழுவமைத்தது என்பதாம்.

**ஆய்வுரை :**

இது, மேலதற்கோர் புறனடை கூறுகின்றது.

மேல், உலகவழக்கில் உள்ளவற்றைத் தன்பாற்கொண்டு அமைதல் செய்யுட்குரிய முறைமையென்றார். அங்ஙனம் கொள்ளுங்கால் அறத்திற்கு மாறானவற்றை விலக்குக என்றலின்.

(இ—ள்) அறத்திற்கு அழிவினைத் தருவனவாகிய ஒழுகலாறுகள் பொருளும் இன்பமுமாகிய பயனுள்ளனவாக வருமாயின் அவை உலகியலிற் காணப்படுதல் கொண்டு அவற்றையும் உலக வழக்கென வழங்குதலும் சான்றோர்களாற் பழிக்கப்பட்டது என்பர் அறிஞர். எ—று.

எனவே அறத்திற்கு அழிவினைச் செய்யும் நிலையில் புலனின்பமொன்றே கருதி நிகழும் பிறன்மனைவிழைவு முதலாயினவும் அறத்திற்கு மாறாய்ப் பொருளொன்றே கருதிய போர்ச் செயல்கள் முதலியனவும் உலகியலில் ஆங்காங்கே சிற்றினத்தாராகிய கொடியோர்களால் நிகழ்த்தப்படுதல் கொண்டு, அவ்விழிந்தனவற்றையும் வழக்கு என்ற வகையிற்சேர்ந்துரைத்தல் பழிதரும் குற்றமாம் என அறிவுறுத்தல் இச்சூத்திரத்தின் நோக்கமாதல் புலனாம்.

இனி, 'அறக்கழிவுடையன பொருட்பயன்படவரின், வழக்கெனவழங்கலும் பழித்தன்றென்ப' எனப் பாடங்கொண்டு, ''உலக வழக்கிற்குப் பொருத்தமில்லாத கூற்றுக்கள் அகப்பொருளொழுகலாற்றிற்குப் பயனுடையனவாக வருமாயின் அவற்றை உலகவழக்கெனவேகொண்டு புலனெறிவழக்கஞ் செய்தலும் பழியுடையதன்றாம்' என நச்சினார்க்கினியர் இச்சூத்திரத்திற்குக் கூறும் பொருளும் விளக்கமும் எடுத்துக்காட்டும் நாடகவழக்கினும் உலகியல் வழக்கினும் பாடல்சான்ற புலனெறிவழக்கிற்கு ஒத்தனவாகவே அமைந்துள்ளமையும் இங்குச் சிறப்பாகக் குறிப்பிடத் தகுவதாகும்.

உகரு. மிக்க பொருளினுட் பொருள்வகை புணர்க்க
நாணுத்தலைப் பிரியா நல்வழிப் படுத்தே.

**இளம்பூரணம்:**

**என்—எனின், இதுவுமது.**

(இ-ள்.) மிக்க பொருளாவது மேற்கூறப்பட்ட அகப் பொருள்.[1] அப்பொருட் கண்ணும் நாண் நீங்காத நல்வழிக்கட் படுத்துப் பொருள்வகை புணர்க்க என்றவாறு. எனவே, அற முதலாயின வழுவின் றாயினும் நாணழிய வரும் பொருண்மை புணர்த்தற்க என்றவாறு.

"பிறர்நாணத் தக்கது தான் நாணா னாயின்
அறன்நாணத் தக்க துடைத்து." (குறள். ௲௧அ)

என வரும். (உ௩)

நச்சினார்க்கினியம்:

இது, மேல் அறக்கழிவுடைத்தாயினும் அது பொருட்பயம் படு மென்றார், அப் பொருளினை இதுவென்றலின் மேலதற் கோர் புறனடை.

(இ-ள்.) மிக்க பொருளினுள்—முன்னர் அகப்பொருட்குப் பயம்பட வரினென்று வழுவமைத்த பொருளின் கண்ணே; நாணுத் தலைப் பிரியா நல்வழிப் படுத்துப் பொருள்வகை புணர்க்க— தலைவியது நாண் அவளிடத்து நின்று நீங்காமைக்குக் காரண மாகிய நன்னெறியாகிய பொருட்கூறுபாடுகளை உள்ளடக்கிப் படுத்துக்கூறுக (எ. று.)[2]

---

1. 'மிக்க பொருளாவது மேற்கூறப்பட்ட அறமுதற்பொருள்' என இவ் வுரைத்தொடர் அமைந்திருத்தல் வேண்டும் என்பது, "எனவே அறமுதலாயின வழுவின்றாயினும்" எனப் பின்வரும் உரைத்தொடர்கொண்டு உய்த்துணரப்படும். புணர்த்தற்க — புணர்க்காது தவிர்க்க.

2. மிக்க பொருளினுள் நாணுத்தலைப்பிரியா நல்வழிப்பொருள்வகைபகுத்துப் புணர்க்க என இயையும்.

மிக்கபொருள் என்றது, மேல் அறக் கழிவுடையன எனவழுவாகக்கொண்டு அமைதிகூறிய வரம்பிறந்த உரையாடலாகிய கூற்றினை. ஈ'மிகுதி' என்றது 'மிகுதியான் மிக்கவை செய்தாரை திருக்குறள் (158) என்புழிப் போன்று குற்ற முடையவற்றை உணர்த்துகின்றது. நல்வழிப்பொருள் என்றது, தலைவியின் நாண மாகிய உயிர்க் குணம் அவளை விட்டு நீங்காதிருத்தற்குக் காரணமாகிய நன்னெறி யாகிய பொருட்பகுதி பகுத்தல்-அக்கூற்றினுள் உள்ளடக்கிக் கூறுதல். நாண் என்னும் ணகர வீறு உகரச்சாரியை பெற்று நாணு என நின்றது. தலைப்பிரிதல்—நீங்குதல். அறக்கழிவான பொருள் புலப்பட்டுத் தோன்றுமாறும் தான் கூறக்கருதிய பொருள் குறிப்பாக உள்ளடங்கவும் கூறாக்கால் தலைவியது மறைபுலப்பட அவளது உயிரி னுஞ்சிறந்த நாண் நீங்குமிலை யுளதாமாதலின் நாணுத்தலைப்பிரிய நல்வழிப்படுத் துப் பொருள்வகை புணர்க்க என்றார்.

"நெருந வெல்லை" (அகம். 32)என்பதனுள், நெருநல் யான் காக்கின்ற புனத்துவந்து ஒரு தலைவன் தன் பெருமைக்கேலாச் சிறுசொற் சொல்லித் தன்னை யான் வருத்தினேனாகக் கூறி என்னை முயங்கினான்; யான் அதற்கு முன் னெகிழ்ந்தே மனநெகிழ்ச்சி அவனறியாமன் மறைத்து வன்சொற்சொல்லி நீங்கினேன்; அவ்வழி என் வன்கண்மையாற் பிறிதொன்று கூறவல்லனாயிற்றிலன்; அவ்வாறு போனவன் இன்று நமக்குத் தோலாத் தன்மையின்மை யினின்றும் இளிவந்தொழுகுவன்; தனக்கே நந்தோள் உரியவாகலும் அறியானாய் என்னைப் புறநிலைமுயலுங் கண்ணோட்டமு முடைய வனை நின் ஆயமும்யானும் நீயுங் கண்டு நகுவோமாக; நீ அவன் வருமிடத்தே செல்வாயாக எனக் கூறியவழி, எம் பெருமானை இவள் புறத்தாற்றிற் கொண்டாள் கொல்லோவெனவும், அவன் தனக்கு இனிய செய்தனவெல்லாம் என் பொருட்டென்று கொள்-ளாது பிறழக்கொண்டாள் கொல்லோவெனவுந் தலைவி கருது மாற்றானே கூறினாளெனினும் அதனுள்ளே இவளெனக்குச் சிறந்தாளென்பதுணர்தலின் என் வருத்தந் தீர்க்கின்றில்லை யென் றான் எனவும், அதற்கு முகமனாக இவளைத் தழீஇக்கொண்ட தன்றி இவள் பிறழக்கொண்ட தன்மை அவன்க ணுளதாயின் இவளைக் குறிப்பறியாது புல்லானெனவும், இவ்வொழுகலாறு சிறிதுணர்தலில் இக்குறை முடித்தற்கு மனனெகிழ்ந்தாளெனவும், அவனை என்னோடு கூட்டுதற்கு என்னை வேறு நிறுத்தித் தானும் ஆயமும் வேறுநின்று நகுவேமெனக் கூறினாளெனவுந், தலைவி நாண் நீங்காமைக்குக் காரணமாகிய பொருளை உள்ளடக்கிப் புணர்த்துக் கூறியவாறு காண்க. இதனுள் அறக்கழிவான பொருள் புலப்படவும், ஏனைப்பொருள் புலப்படாமலுங் கூறாக்காமல் தலை வியது மறையை வெளிப்படுத்தினாளாமாதலின் அதனை 'மிக்க பொரு' ளென்றார். ஏனையவற்றிற்கும் உட்பொருள் புணர்த்தவா றுணர்ந்து பொருளுரைத்துக்கொள்க. (உரு)

**ஆய்வுரை :**

இதுவும் செயயுட்குரியதோர் பொருள் மரபு உணர்த்து கின்றது.

(இ—ள்) வாழ்க்கைக்குச் சிறந்தனவாக உயர்த்துககூறப் பட்ட அறம் பொருள் இன்பம் ஆகிய பொருள்களை எடுத் துரைக்குங்காலும் மக்களது உயிர்ப்பண்பாகிய நாணம்,நீங்காமைக குரிய நல்வழிக்கண் அமைத்து அகமும் புறமுமாகிய பொருள் வகைகளைப் புணர்த்துக் கூறுக. (எ—று.)

மிக்கபொருளாவது மக்களது நல்வாழ்க்கைக்கு உரியவாகச் சான்றோர்களால் உயர்த்துக்கூறப்பட்ட அறமுதலாகிய முதற்பொருள்கள். பொருள் வகை என்றது அறமும் புறமுமாகிய கூறுபாட்டினை. நாண்—நாணமாகிய மக்கட்பண்பு. நாண் என்பது உகரச்சாரியை பெற்று நாணு என நின்றது. தலைப்பிரிதல்—நீங்குதல். மிக்க பொருளினுள் நாணுத் தலைப்பிரியா நல்வழிப்படுத்துப் பொருள்வகை புணர்க்க என இயையும.

இனி, 'உலகவழக்கினைக் கடந்து வருவனவாகிய பொருட்பகுதிகளைச் செய்யுளில் அமைத்துக் கூறுங்கால் தலைவி முதலியோர்க்கு உயிரினுஞ் சிறந்த நாணம் நீங்காமைக்குக் காரணமாகிய நன்னெறியில் அமைத்துக் கூறுதல் வேண்டும்' எனச் சூத்திரத்திற்குப் பொருள் கூறுதலும் பொருத்தமுடையதேயகும்.

உகங. முறைப்பெயர் மருங்கினற் கெழுதகைப் பொதுச்சொல்
நிலைக்குரி மரபின் இருவீற்றும் உரித்தே.

இளம்பூரணம் :

என்—எனின். இதுவும் வழுவமைத்தலை நுதலிற்று.

(இ—ள்.) முறைப்பெயராவது—இயற்பெயர் முதலிய பெயரானன்றி முறைமை பற்றி வருவது ; அது தந்தைமகனைக் கூறும் பொழுது தம்முன், தம்பி, என்பனவும் கிழவன், தோழன் என்பனவும் போல வருவன.

அப்பெயரகத்துவரும் நன்றாகிய கெழுதகைப் பொதுச்சொல்லாவது—பயிற்சியாற் கூறும் 'எல்லா' என்பது.

நிலைக்குரி மரபி னிருவீற்று முரித்தே என்பது—நிற்றற்குரிய மரபினானே யிருபாற்கு முரித்தென்றவாறு. நிற்றற்குரிய மரபின் என்பது இவ்வாறு தோற்றாமையான் என்றவாறு.[1]

---

1. 'எல்லா' என்னும் இச்சொல் தான் நிற்றற்குரிய முறைமைக்கண் இன்னபால் என்று தோற்றாமையால் ஆண்பெண் என்னும் இருபாற்கும் பொதுவாய் வழங்கப்பெறும் என்பதும் இச்சொல் பாலுணர்த்தும் விகுதியினைப் பெறாது அன்பின் கேண்மையாகிய நட்புமுறைமை பற்றியே வருதலின் சொல்லதிகாரத்திற் கூறப்படாது இங்குப் பொருளதிகாரத்திற் கூறப்பட்டது என்பதும் இத்தொடராற் புலனாம்.

''எல்லா, இஃதொத்த னென்பெறான் கேட்டைக்காண்''
(கலி.௬௧)

என்றவழிப் பெண்பால்மேல் வந்தது.

''எல்லா, தமக்கினி தென்று வலிதிற் பிறர்க்கின்னா
செய்வது நன்றாமோ மற்று'' (கலி.௬௨)

என்றவழித் தலைமகன்மேல் வந்தது.

இதுவும் ஒரு சொல்வழு அமைத்தவாறு. இச் சொற் காமப் பொருளாகத் தோற்றுதலாற் சொல்லதிகாரத்து ஓதாது ஈண்டு ஓதப்பட்டது. (உ௫)

**நச்சினார்க்கினியம் :**

இது, கிழவன் கிழத்தி பாங்கன் பாங்கியென்னும் முறைப் பெயராகிய சொற்பற்றிப் பிறந்ததோர் வழுவமைக்கின்றது;

(இ - ள்.) முறைப்பெயர் மருங்கிற் கெழுதகைப் பொதுச் சொல் [1] - முறைப்பெயரிடத்து இருபாற்கும் பொருந்தின தகுதியை யுடைய எல்லா வென்னுஞ் சொல்; நிலைக்கு உரிமரபின் இருவீற்றும் உரித்தே - புலனெறிவழக்கிற்குரிய முறைமையினானே வழுவாகாது ஆண்பாற்கும் பெண்பாற்கும் ஒப்ப உரியதாய் வழங்கும் (எ - று.)

'கெழுதகை' யென்றதனானே தலைவியுந் தோழியுந் தலைவனைக் கூறியதே பெரும்பான்மையென்றுந் தலைவன் தலைவியையும் பாங்கனையுங் கூறுதல் சிறுபான்மை வழுவமைதியென்றுங் கொள்க.

உ—ம்: ''அதிர்வில் படிறெருக்கி வந்தென் மகன்மேல்
முதிர்பூண் முலைபொருத ஏதிலாள் முச்சி
உதிர்துகள் உக்கநின் ஆடையொலிப்ப
எதிர்வளி நின்றாய் நீ செல்;
இனி யெல்லா'' (கலி. 81)

---

1. கெழுதகைமையாவது நண்பாகப்பழகிய உரிமைத் தன்மை. இத்தகைய நட்புரிமை புலப்படும்படி நட்டாரை அழைக்கும் சொல் கெழுதகைச் சொல்லாகும். ஆண்பெண் இருபாலார்க்கும் உரிய நிலையிற் பொதுவாய் வழங்கப் பெறுதலின் கெழுதகைப் பொதுச்சொல் எனப்பட்டது. இங்ஙனம் இருபாலார்க்கும் பொதுவாக வழங்கும் கெழுதகைப்பொதுச்சொல் 'எல்லா' என்னுஞ் சொல்லாம் என்பது சங்க இலக்கிய ஆட்சியால் நன்கு புலனாகும்.

எனத் தலைவியைத் தலைவன் விளித்துக்கூறலின் வழுவாயமைந் தது.

"எல்லாநீ,
முன்னத்தான் ஒன்று குறித்தாய்போற் காட்டினை
நின்னின் விடாஅ நிழல்போல் திரிதருவாய்
என்நீ பெறாத தீதென்" (கலி. 61)

எனத்தோழி தலைவனை விளித்துக் கூறலின் வழுவாயமைந்தது.

"எல்லா விஃதொத்தன்" (கலி. 61) என்பது பெண்பால் மேல் வந்தது. ஏனைய வந்துழிக் காண்க. பொதுச்சொல் லென்ற தனானே எல்லா எலா எல்ல எலுவ எனவுங் கொள்க.

"எலுவ சிறாஅர்" (குறுந். 129) என வந்தது. "யாரை யெலுவ யாமே" (நற்றிணை, 395) எனத் தலைவனைத் தோழி கூறினாள்.

எலுவியென்பது பாலுணர்த்தலின் ஆராயப்படா. (உசு)

ஆய்வுரை :

இஃது அகத்திணையொழுகலாற்றில் இடம்பெற்று வழங்கும் முறைப்பெயரொன்றின் இயல்புணர்த்துகின்றது.

(இ - ள்.) முறைப்பெயரிடத்து இருபாலுக்கும் பொருந்தின தகுதியுடைய 'எல்லா' என்னும் பொதுச்சொல் ஆண்பால் பெண் பால் ஆகிய அவ்விருபால்களுக்கும் ஒப்பவுரியதாகும். எ - று.

ஆடவர் மகளிர் என்னும் வேற்றுமையின்றி இருபாலாரும் ஒருவரையொருவர் அழைத்தற்குரிய அன்பின்கேண்மை முறைமை குறித்துவரும் பெயர் என்பது புலப்படுத்துவார் 'முறைப்பெயர் மருங்கின் கெழுதகைப்பொதுச்சொல்' என்றார். அச்சொல் அகத் திணையொழுகலாற்றில் பயின்றுவரும் 'எல்லா' என்னும் சொல் என்பது தம்காலத்து வழங்கும் புலனெறி வழக்கினால் எல்லார்க் கும் நன்கு புலனாமாதலின் அதனைக்கிளந்தெடுத்தோதாது அதன் பொருளமைதியினைமட்டும் விரித்துரைத்தார் ஆசிரியர். தொல் காப்பியத்திற் சுட்டப்பெற்ற இச்சொல்வழக்கு, தொல்காப்பியத் திற்குப் பின்தோன்றிய சங்கச் செய்யுட்களிலும் இடம்பெற்றுள் ளமை இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் எடுத்துக்காட்டிய மேற்கோட் செய்யுட்களால் இனிது புலனாம்.

உகள. தாயத்தின் அடையா ஈயச் செல்லா
வினைவயின் தங்கா வீற்றுக் கொளப்படா
எம்மென வரூஉங் கிழமைத் தோற்றம்
அல்ல வாயினும் புல்லுவ உளவே.

**இளம்பூரணம் :**

என்—எனின். இதுவும் ஒருசார் மரபு வழுவமைத்தலை நுதலிற்று.

(இ - ள்.) தாயத்தான் எய்துதலாவது தந்தைபொருள் மகற்குறுதல். ஈயச் சேறலாவது ஒருவன் கொடுப்ப ஒருவன் கோடல். வினைவயிற் றங்கலாவது உழவுமுதலியன வற்றான் வருதல். வீற்றுக்கொளப் படுதலாவது வேறுபடுத்திக் கோடல். அஃதாவது பகையினால் வந்தது கோடல். இந்நான்கினும் வரும் பொருளினது உரிமைத்தோற்ற மல்லவாயினும் பொருந்துவ உள என்றவாறு.

செய்யா என்னும் வினையெச்சம் வரூஉம் என்னும் பெயரெச்சத்தொடு முடிந்தது.[1] அன்றியும் செய்யா என்பதனைப் பெயரெச்ச எதிர்மறையாக்கி இந்நான்கிலும் வருந்தகவு இல்லாத பொருள் பொருளலவாயினும் எமதெனவரும் உரிமைத்தோற்றம் பொருந்துவ என்றவாறு.[2]

1. அடையா, செல்லா, தங்கா, கொளப்படா என்பனவற்றைச் செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சமாகக் கொண்டு அவ்வெச்சத்தை 'எம்மென வரூஉம் கிழமைத்தோற்றம்' என்ற தொடரில் உள்ள 'வரூஉம்' என்னும் பெயரெச்சத்தின் பகுதியாகிய வருதற்றொழிலொடு முடித்துப் பொருள் கொள்வர் இளம்பூரணர். தாயத்தின் அடைந்து ஈயச்சென்று வினைவயின் தங்கி வீற்றுக்கொள்ளப் பட்டு (இவ்வாறு நான்குதிறத்தானும்) எம்முடையன் எனவரூஉம் பொருளினது உரிமைத் தோற்றம் (உடையன) அல்லனவாயினும் உரிமையாதற்குப் பொருந்துவன உள. எ—று.

2. இவ்வாறன்றி, மேற்குறித்த 'செய்யா' என்னும் வாய்பாட்டினை அடையாத, செல்லாத, தங்காத, கொளப்படாத என எதிர்மறைப் பெயரெச்சமாக்கி "இந்நான்கினும் வரும், தகவு இல்லாத எம்முடையன எனவரும் பொருள் உரிமையுடைய பொருளல்லவாயினும் எமதெனவரூஉம் உரிமைத் தோற்றம் பொருந்துவனவுள" எனப்பொருள் கொள்ளுதலும் பொருந்தும் என்பதாம்.

அல்லவாயினும் என்பதனை மாறிக்கூட்டுக.[1] எனவே, ஒரு முகத்தாற் பொருள் தேடுவார் திறன் கூறினாருமாம். இனி அக் கிழமைத் தோற்றம் ஆவது.

''விரும்பிநீ, என்தோள் எழுதிய தொய்யிலும் யாழநின்
மைந்துடை மார்பிற் சுணங்கும் நினைத்துக்காண்'' (கலி.கஅ)

என்றவழித் தலைமகள் தோளைத் தோழி தன்னையுமுளப்படுத்தி என தெனக் கூறியவாறு காண்க.[2] பிறவுமன்ன (உசு)

நச்சினார்க்கினியம் :

இது, தோழி தலைவியுறுப்பினைத் தன்னுறுப்பாகக் கூறப் பெறுமென வழுவமைக்கின்றது.

(இ-ள்.) தாயத்தின் அடையா[3] - தந்தையுடைய பொருள் களாய் மக்களெய்துதற்குரிய பொருள்களிற் சேராதனவுமாய்; ஈயச் செல்லா - அறமும் புகழுங் கருதிக்கொடுப்பப் பிறர்பாற் செல்லாதனவுமாய்; வினைவயின் தங்கா - மைந்தரில்லாதார்க்கு மைந்தர் செய்வன செய்து பெறும் பொருளில் தங்காதனவு

1. இங்ஙனம் பொருள்கொள்ளுங்கால், இந்நான்கினும் அல்லாத எம்மென வரூஉம் பொருள் (பொருள்) அல்ல ஆயினும் கிழமைத் தோற்றம் புல்லுவவுள'' என மாறிக் கூட்டிப் பொருள் கொள்க என்பார் 'அல்லவாயினும் என்பதனை மாறிக் கூட்டுக' என்றார்.

'தந்தைபொருள் மைந்தனுக்குரியது என்னுந்தாயமுறையினாலும், 'ஒருவர் கொடுப்ப ஒருவர் பெற்றது' என்னும் கொடைத்திறத்தாலும், உழவு முதலிப தொழில் காரணமாகவும், பகைவர் முதலாயினாரை வெற்றி கொள்ளுந் திறத்தாலும் என உலகத்தார் பொருள் தேடுந்திறன் நான்காம் என்பதனைத் தொல்காப்பியனார் இச் சூத்திரத்தால் ஒருவாறு தெளிவு படுத்தினார் என்பார், ''எனவே, ஒரு முகத்தாற் பொருள் தேடுவார் திறன் கூறினாருமாம்'' என்றார் இளம்பூரணர்.

2. தோழி தலைமகனை நோக்கிக் கூறுவதாக அமைந்த கலித்தொகை யஅ—ஆம் பாடலில், ''விரும்பி நீ என்தோள் எழுதிய தொய்யிலும்'' எனத் தலைமகள் தோளைத் தோழி தன் தோளாகக் கூறியது, மேற்குறித்த உலகியற் பொருளுரிமை முறை நான்கும் அல்லாத அகத்திணை யொழுகலாற்றில் வழங்கும் நட்பின் கெழுதகைமையாகிய உரிமை முறையாகப் பொருந்தியதாகும்.

3. தாயம்-தந்தையுடையபொருளாய் மக்கள் அடைதற்குரிய பொருள். வினைவயின் தங்குதலாவது பொருளுடையார்க்கு உரிய பணிசெய்து அதனால் உரிமையுடையவராய்த் தனக்குரியபொருளாய்த் தன்பால் தங்குதல். வீற்றுக் கொள்ளப்படுதலாவது தன்னுள் வேறுபட்டாரிடமிருந்து வேறுபடுத்திக் கொள்ளப்படுதல். அல்லா—அல்லாதன, வழு. புல்லுவ—பொருந்துவன.

மாய்; வீற்றுக்கொளப்படா - வேறுபட்டானொருவன் வலிந்து கொள்ளப்படாதனவுமாய்; எம்மென வரூஉங் கிழமைத் தோற் - எம்முடையனவென்று தோழி கூறப் புலனெறி வழக்கிற்குப் பொருந்திவரும் உரிமையையுடைய உறுப்புக்கள்; அல்லாவாயினும் புல்லுவ உளவே - வழுவாயினும் பொருந்து வனவுள (எ-று.)

உறுப்புக் கட்புலனாதலின் தோற்றமென்றார். எனவே, உறுப்பொழிய இந்நான்கும் எம்மெனக் கூறலாகாவென்றார்.

''ஒருநாளென், தோள்நெகிழ் புற்ற துயரால் துணிதந்தோர்''
(கலி. 37)

எனவும்,

'' என்தோள் எழுதிய தொய்யிலும்'' (கலி. 18)

எனவும் தலைவி தோளினை என்தோள் என்றாள்.

''தன்கால் அரியமை சிலம்பு கழீஇப் பன்மாண்
வரிப்புனை பந்தொடு வைகிய செல்வோள்
இவைகாண் தோறும் நோவாம் மாதோ,'' (நற். 12)

''நெய்தல் இதழுண்கண்,
நின்கண்ணா கென்கண் மன'' (கலி. 39)

என்பனவும் இதன்கணடங்கும். 'உள'வென்றதனாற் சிறுபான்மை தலைவி கூறுவனவுங் கொள்க. அவை,

''என்னொடும் நின்னொடுஞ் சூழாது'' (அகம்.128)

எனவும்,

''நின்கண்ணாற் காண்பென்மன் யான்'' (கலி. 39)

எனவும் வரும்.

ஆய்வுரை :

இஃது ஒருசார் மரபுவழு அமைக்கின்றது.

(இ - ள்.) தந்தைக்குரிய பொருள்களாய் மக்கள் அடைதற் குரிய பொருள்களிற் சேராதனவுமாய், அறமும் புகழுங்கருதி ஒருவர்

கொடுப்ப மற்றையோர்பாற் செல்லாதனவுமாய், உழவு முதலிய தொழில் முயற்சியால் வாராதனவுமாய், வேறுபட்டுப் பிறரால் வலிந்துகொள்ளப்படாதனவுமாய் வரும் பொருளுரிமைமுறை (உலகியலிற் பொருந்துவன) அல்லவாயினும் (இவ்வகப்பொருளொழுகலாற்றிற்) பொருந்திவருவனவுள எ - று.

வீற்றுக்கொள்ளப்படுதல் என்பதற்கு, ஒருவரிடம் உள்ள பொருளை விலைகொடுத்துத் தனக்குரிமையுடையதாக அவரினின்றும் வேறுபடுத்திக் கொள்ளுதல் எனப் பொருள்கூறினும் அமையும்.

உகஅ. ஒருபாற் கிளவி ஏனைப்பாற் கண்ணும்
வருவகை தாமே வழக்கென மொழிப.

**இளம்பூரணம் :**

**என்—எனின். இதுவு மொருசார் பொருள் கோளுந்திறன் உணர்த்துதல் நுதலிற்று**

**(இ - ள்.) ஒருபக்கத்துக் கூறிய பொருண்மை ஒழிந்த பக்கத்துக் கண்ணும் வருவகைதாம் வழக்கு நெறி என்றவாறு.**

**மனையோள்மாட்டுங்—காமக்கிழத்தி மாட்டும் நிகழும் புணர்ச்சியும்பிரிவும் ஊடலும் பரத்தையர் மாட்டு நிகழும்.[1] அது வருமாறு :—**

**''அன்னை கடுஞ்சொல் அறியாதாள்'' (கலி.கூஎ)என்னுங் கலியுள்,**

1. இந்நூற்பாவில் இடம்பெற்றுள்ள 'பால்' என்பதனைப் 'பக்கம்' எனவும், 'கிளவி' என்பதனைப் 'பொருண்மை' எனவும் கொண்டார் இளம்பூரணர். ஒரு பால்—ஒருபக்கம். ஏனைப்பால்—ஒழிந்த பக்கம். தலைவனுடன் அளவளாவுந் திறத்தினராகிய மனைவி காமக்கிழத்தி என்போர்க்குக் கூறப்பட்ட புணர்ச்சி பிரிவு ஊடல் முதலிய பொருண்மை தலைவன்பால் தொடர்புடைய பரத்தையாரிடத்தும் நிகழும் என்பது இச்சூத்திரத்திற்கு இளம்பூரணர் கொண்ட பொருளாகும். பரத்தையர் தலைவனொடு ஊடல் கொண்டமைக்கு நற்றிணை ள—ஆம் பாடல் இளம்பூரணருரையில் மேற்கோளாகக் காட்டப்பெற்றுள்ளது. 'பரத்தை தலைவிக்குப் பாங்காயினார் கேட்ப விறலிக்கு உடம்படச் சொல்லியது' என்னுந்துறையிலமைந்த நற்றிணைப் பாடலாகிய இதன்கண் பரத்தை தலைவனை மனைவிக்கு அஞ்சினாள் என்று கூறி எள்ளி நகுவதாக அமைந்த குறிப்பன்றி இளம்பூரணர் கூறுமாறு தலைவனொடு பரத்தையூடிய குறிப்பு இடம் பெறாமை சிந்திக்கத் தகுவதாகும்.

"சிறுகாலை யிற்கடை வந்து குறிசெய்த
அவ்வழி என்றும்யான் காணேன்"

என்பது புணர்வுகுறித்து வந்தது.

"உள்ளுதொறு நகுவன் தோழி வள்ளுகிர்
மாரிக் கொக்கின் கூர்அல கன்ன
குண்டுநீர் ஆம்பல் தண்துறை யூரன்
தேங்கம ழைம்பால் பற்றி என்வயின்
வான்கோல் எல்வளை வவ்விய பூசற்
சினவிய முகத்துச் சினவாது சென்றுநின்
மனையோட் குரைப்பல் என்றலின் முனையூர்ப்
பல்லா நெடுநிரை வில்லின் ஒய்யும்
தேர்வண் மலையன் முந்தைப் பேரிசைப்
புலம்பிரி வயிரியர் நலம்புரி முழவின்
மண்ணார் கண்ணின் அதிரும்
நன்ன ராளன் நடுங்கஞர் நிலையே." (நற். க00)

இஃது ஊடல் குறித்து வந்தது. இப்பரத்தையர் பொருட் பெண்டிராகலின் இன்பம் பயக்குமோ எனின், அஃது இன்பமாமாறு வருகின்ற சூத்திரத்தான் எல்லாப் பொருட்கும் உளதாகும் பொது விலக்கணம் கூறியவாறு.[1] (உஎ)

நச்சினார்க்கினியம் :

இஃது, 'ஒன்றே வேறே' (தொல். பொ. 93) என்னுஞ் சூத்திரத்து 'ஒத்த கிழவனுங் கிழத்தியும்' என்ற ஒருமை பன்மைப்பாலாய் உணர்த்துகவென வழுவமைத்தது.[2]

---

1. இன்பத்திற்குப் பொதுவிலக்கணம் கூறுவதாக அமைந்த அடுத்த சூத்திரத்துடன் பொருளியைபுபுலப்படுதல் வேண்டி இளம்பூரணர் இச்சூத்திரத்திற்கு இவ்வாறு உரை வரைந்து எடுத்துக்காட்டுத் தந்து விளக்கினார் எனக் கொள்ள வேண்டியுளது.

2. வாழ்க்கையில் ஆண்பெண் இருபாலார்க்குரிய இயல்புகளையும் செயல் முறைகளையும் விரித்துரைக்கும் நூல்களிலும் உலகவழக்கிலும் கிழவன் கிழத்தி எனவும் ஒருவன் ஒருத்தியெனவும் ஒருமை யெண்ணில் வைத்துரைக்கப்படும் ஆண்பால் பெண்பால் ஆகிய பெயர்கள் ஈற்றெழுத்தாகிய விகுதியமைப்பின்படி அவ்வப் பாலின்கண் தலைவன் தலைவி எனவும் ஒருவன் ஒருத்தி எனவும் இவ்வாறு ஒவ்வொருவரையே குறிக்குந் தன்மையனவாயினும் வழக்கியலில் இச்சொற்கள் ஒருமை யெண்ணிலன்றி அத்தன்மையுடையராய் அவ்வப்பாலினரான பலரையும் சுட்டி வழங்குதல் பொருளியல் மரபாம் என்பதனை அறிவுறுத்தும் நிலையில் அமைந்தது இந்நூற்பா என்பது நச்சினார்க்கினியர் கருத்தாகும்.

(இ—ள்.) ஒருபாற் கிளவி - 'ஒத்த கிழவனுங் கிழத்தியும்' என்றவழி ஆணொருமையும் பெண்ணொருமையும் உணர்த்தி நின்ற சொற்களை ஆசிரியரும் அவ்வாறு ஆண்டாரேனும் அவ்வொருமைச் சொற்கள்; எனைப்பாற்கண்ணும் வருவகைதானே- நால்வகைக்குலத்துத் தலைவரையுந் தலைவியரையும் உணர்த்தும் பன்மைச்சொற்கண்ணே நின்று பன்மைப் பொருள் உணர்த்தி வருங் கூறுபாடுதானே; வழக்கென மொழிப - உலகவழக்கென்று சொல்லுவர் ஆசிரியர் (எ - று.)

இதனாற் பயன் உலகத்து ஒரூர்க்கண்ணும் ஒரோவொரு குலத்தின்கண்ணுந் தலைவருந் தலைவியரும் பலரேனும் அவர்களையெல்லாங் கூறுங்காற் கிழவனுங் கிழத்தியுமென்று ஒருமையாற் கூறுவதன்றி வேறோர் வழக்கின்றென்பதுபற்றி முதனூலாசிரியர் அங்ஙனஞ் சூத்திரஞ் செய்தலின், யானும் அவ்வாறே சூத்திரஞ் செய்தேனாயினும், அச்சொற் பலரையும் உணர்த்துமென வழுவமைத்தாராயிற்று. ஒருவனோடு பலர் கூட்டமுங்கோடற்கு ஏனைப்பாலென்று ஒருமையாற் கூறாது 'எனைப்பா' லெனப் பன்மையாற் கூறினார்.[1] இதனால் சொல்வழுவும் பொருள் வழுவும் அமைத்தார். 'ஒத்த கிழவனுங் கிழத்தியும்' (93) என்ற ஒருமையே கொள்ளின் அன்னாரிருவர் இவ்வுலகத்துள்ளாரன்றி வேறாக நாட்டிக்கொள்ளப் பட்டாரென்பதுபட்டு இஃது உலக வழக்கல்லாததோர் நூலுமாய் 'வழக்குஞ் செய்யுளும்' (தொல்.பாயிரம்) என்பதனோடு மாறுகோடலேயன்றிப் 'பரத்தை வாயினால்வர்க்குமுரித்தே' (தொல், பொ 224) என்றாற்போல்வன. பிற சூத்திரங்களும் வேண்டாவாமென் றுணர்க.[2] (உஅ)

---

1. 'ஏனை' என்னுஞ்சொல் ஒருமையினையும் 'எனை' என்னுஞ்சொல் பன்மையினையும் உணர்த்தும். 'ஏனை யொன்றே தேவர்ப்பராஅய முன்னிலைக் கண்ணே' என்புழி, 'ஏனை' ஒருமையுணர்த்துதலும், 'எனைவகை யாற் றேறியக் கண்ணும்' (திருக்குறள். 519) என்புழி, 'எனை' என்பது பன்மையுணர்த்துதலும் காண்க.

2. அகத்திணையொழுகலாற்றில் ஆண்பாலாரும் 'கிழவன்' எனவும் பெண்பாலாரும் 'கிழத்தி' எனவும் வழங்கும் பெயர்கள் முறையே அத்தகைய தலைமைப் பண்புடைய தலைவர்களையும் தலைவியரையும் குறித்துப் பன்மைப் பொருளிலேயே வழங்குவனவாகும். இவ்வாறன்றி இப்பெயர்கள் தலைவன் ஒருவனையும் தலைவி ஒருத்தியையுமே வரைந்து சுட்டுவன எனக் கொண்டால் அவ்வாறு சுட்டப்பெறும் இருவரும் உலகத்தில் இல்லாத தலைவர்களாயப் புலவர்களால் கற்பனையால் புனைந்து நாட்டப் பெற்றவர்களே என்ற தவறான கருத்துண்டாகும். அஃ

**ஆய்வுரை :**

இஃது இருவகைவழக்கினும் சொல்லுக்குப் பொருள்கொள்ளுந்திறன் இதுவெனவுணர்த்துகின்றது.

(இ-ள்.) இருதிணையைம்பால்களினும் ஒருதிணையில் ஒருமைப்பாலில் வைத்து உணர்த்தப்பட்ட பொருள் அத்திணையின் ஏனைப்பாலாகிய பன்மைப்பாலினும் பொருந்தி வருவனவாக அமைதலே வழக்கு நெறியென்று கூறுவர் புலவர். எ—று.

கிழவன், கிழத்தி என்பனமுதலாக இவ்வாறு ஆணொருமையும், பெண்ணொருமையும் உணர்த்தி நிற்கும் ஒருமைச் சொற்கள், நானிலத்துத் தலைவரையும் தலைவியரையும் உணர்த்தும் பன்மைச்

---

துண்டாகவே இத்தொல்காப்பியத்திற் கூறப்படும் தலைமக்களது அன்பின் ஐந்திணையொழுகலாறு இல்லாத தலைவர்கட்குரிய பொய்மையான புனைந்துரையாய், இதனைக் கூறும் தொல்காப்பியமும் உலகவழக்குக்கு ஒவ்வாத நூலெனக் கருதப்படும் நிலையேற்படும். இங்ஙனங்கொள்ளுதல் 'வழக்குஞ் செய்யுளும் ஆயிரு முதலின் எழுத்துஞ்சொல்லும் பொருளும் நாடிப் புலந்தொகுத்தோன் தொல்காப்பியன்' எனப் பனம்பாரனார் கூறிய நூலாசிரியர்' வரலாற்றுக்கு முற்றிலும் முரணாகும். எனவே உலகத்து ஓரூர் கண்ணும் ஒரோவொருகுலத்தின் கண்ணும் தலைமைப் பண்புடைய தலைவரும் தலைவியரும் பலராயினும் அவர்களையெல்லாம் உலகவழக்கிற் பொதுப்படக் கூறும்போது கிழவன் கிழத்தி யென்றாற்போன்று ஒருமைச் சொல்லால் வழங்கினும் அப்பெயர்கள் முறையே தலைவர் பலரையும் தலைவியர் பலரையும் குறித்த பன்மைப்பொருளினவாகவே கொள்ளுதல் வேண்டும் என அமைதி கூறும் நிலையில் இச்சூத்திரம் இயற்றப்பெற்றதென்பது நச்சினார்க்கினியர் தரும் விளக்கமாகும்.

'நாட்டிக்கொள்ளப்பட்டார்' என்பது இறையனார் களவியலுரையாசிரியர் கருத்தாகும். அன்பின் ஐந்திணைக்களவு என்னும் ஒழுகலாறு 'இல்லது இனியது நல்லது என்று புலவரால் நாட்டப்பட்டதோர் ஒழுக்கம்' என்பர் இறையனார் களவியலுரையாசிரியர். எனவே அன்பின் ஐந்திணையொழுகலாற்றிற்குரியராக வைத்துரைக்கப்படும் தலைவன் தலைவி என்போர் இவ்வுலகத்துள்ளாரன்றி வேறாகப் புலவர்களால் நாட்டிக் கொள்ளப்பட்டார் என்பது இறையனார் களவியலுரையாசிரியர் கருத்தெனத் தெரிகிறது.

இக்கருத்துத் தொல்காப்பியனார்க்கு உடன்பாடன்றென்பது 'மக்கள் நுதலிய அகனைந்திணையும்' எனவரும் அவரதுவாய்மொழியால் நன்குபுலனாம். "இஃது இல்லதெனப்படாது, உலகியலேயாம். உலகியலின்றேல், ஆகாயப்பூ நாறிற்று என்ற வழி அது சூடக்கருதுவாருமின்றி மயங்கக் கூறினானென்று உலகம் இழித்திடப் படுதலின் இதுவும் இழித்திடப்படும்" என நச்சினார்க்கினியர் அகத்திணையியலுரைமுகத்து இறையனார்களவியலுரையாசிரியர் கருத்தினை மறுத்துள்ளமையும் இங்கு ஒப்பு நோக்கத்தகுவதாகும்.

சொற்கண்ணே நின்று பன்மைப்பொருளையுணர்த்தும் முறை உலக வழக்கில் நிலைபெற்று வழங்கும் சொற்பொருள் மரபாகும் என்பதாம்.

உகசுகூ. எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது
தான் அமர்ந்து வருஉம் மேவற் றாகும்.

**இளம்பூரணம் :**

என்—எனின், மேலதற்கோர் புறனடை உணர்த்திற்று.[1]

(இ—ள்.) எல்லாவுயிர்க்கும் இன்பமென்பது தான் மனம் பொருந்திவரும் விருப்பத்தையுடைத்து என்றவாறு. எனவே மனம் பொருந்தியவழிப் பரத்தையர் மாட்டும் இன்பமுளதாகும் எனவும், பொருந்தாதவழி மனைவியர்மாட்டும் இன்பமின்றாம் எனவும் கொள்க.[2]

**நச்சினார்க்கினியம் :**

இது, மேலதற்கோர் புறனடை.

(இ-ள்.) இன்பம் என்பது தான் - அறனும் பொருளும் ஒழிய இன்பமென்று கூறப்படுவதுதான்; எல்லா உயிர்க்கும்

---

1. இஃது ஒருபக்கத்துக் கூறிய பொருண்மை ஒழிந்த பக்கத்தும் வரும் என ஒன்றிவரும் அளவில் நில்லாது, மனம் பொருந்தாத நிலையில் இன்பமும் துன்பமாதலும் மனம் பொருந்திய நிலையில் துன்பமும் இன்பமாதலும் ஆகிய வேறுபாட்டினைச் சுட்டி நின்றது எனக்கொண்டு மேலதற்கோர் புறனடை உணர்த்திற்று' எனக்கருத்துரை வரைந்தார் இளம்பூரணர்.

2. இன்பம் என்பது எல்லாவுயிர்கட்கும் உள்ளத்தொடு பொருந்திவரும் உணர்வாயினும் தான் விரும்பிய பொருள்களின் நுகர்ச்சியே இன்பமாகக் கொள்ளப்படுதலின், 'தான் அமர்ந்து வருஉ மேவற்று' என்றார். அமர்தல்—பொருந்துதல் அஃதாவது நுகர்ச்சிப்பொருளில் உள்ளம் ஒன்றுதல். மேவற்று—விருப்பத்தையுடையது. மேவல்—விருப்பம்.

ஒருவர்க்கு இனிதல்லாதது மற்றையோர்க்கு இனிதாதலும் ஒருவர்க்கு இனிதாய பொருள் ஏனையோர்க்கு இன்னாதாதலும் உலகியலிற் கண்டது. இன்பம் துன்பம் என்பன உள்ளத்தின் கோட்பாடுகளேயன்றிப் பிறிதில்லை என்பார்,

'இன்னாமை இன்ப மெனக் கொளின் ஆகுந்தன்
ஒன்னார் விழையுஞ் சிறப்பு' (திருக்குறள். 630)

என்றார் திருவள்ளுவர்.

அமர்ந்து வரூஉம்-மக்களுந் தேவரும் நரகரும் மாவும் புள்ளும் முதலிய எல்லாவுயிர்களுக்கும் மனத்தின்கண்ணே பொருந்தித் தொழிற்பட வருமாயினும்; மேவற்றாகும்—ஆணும் பெண்ணுமென அடுக்கிக் கூறலுடைத்தாய் நுகர்ச்சி நிகழும் (எ-று)

'மேவற்றாகு' மென்றார்; என்பது ஆணும் பெண்ணுமாய்ப் போக நுகர்ந்து வருதலின்[1] ஒருவனும் ஒருத்தியுமே இன்ப நுகர்ந் தாரெனப்படாது அவ்வின்பம் எல்லாவுயிர்க்கும் பொதுவென் பதூஉம் அவை இருபாலாய்ப் புணர்ச்சி நிகழ்த்துமென்பதூஉங் கூறியதாயிற்று. அறனும் பொருளும் எல்லா உயிர்க்கும் நிகழா, மக்கட்கே சிறந்துவருமென்றாராயிற்று.[2] (உக)

ஆய்வுரை :

இது, மேல் 'இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு அன் பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கிற்காமக்கூட்டம்' என்புழி, இன்பம் எனப்பட்டது இதுவெனவுணர்த்துகின்றது.

(இ - ள்) இன்பம் என்று கூறப்படும் உணர்வுதான் எல்லா வுயிர்க்கும் விருப்பத்தின் விளைவாக ஒருவரையொருவர் இன்றி யமையாதவராய் அன்பினாற் பொருந்தி மனத்தால் வெளிப்படத் தோன்றிவரும் பொதுவியல்பினதாயினும் ஆணும் பெண்ணுமாய் நுகரப்பெறும் சிறப்பியல்பினையுடையதாகும். எ—று.

எனவே, அன்பினைந்திணையொழுகலாற்றில் இன்பம் எனப் படுவது தான் எல்லா வுயிர்க்கும் பொதுப்படவுரிய புலனுகர்ச்சி யாகிய இன்பம் என்ற அளவிலமையாது மக்கட்குலத்தார் ஆணும் பெண்ணுமாய்த் தம்மிற் கூடி அளவளாவும் நிலைமைக்கண் அவர் தம் மனனுணர்வின்கண் அன்பின்வழித்தோன்றும் காதலின்ப நுகர்ச்சியே ஈண்டு இன்பம் எனச் சிறப்பித்துரைக்கப்படும் என்ப தும் தெளியப்படும். அமர்தல் - அன்பென்னும் உயிர்ப்பண்பு காரணமாக ஆண்பெண் இருபாலாரும் ஒருவரையொருவர் இன்றி

---

1. மேவல்—ஆணும்பெண்ணுமாய்ப் பொருந்திப்போகம் நுகர்தல். மேவற்று பொருந்திப் போகம் நுகர்தலையுடையது.

2. அறமுதலாகிய மும்முதற்பொருள்களுள் இன்பம் என்பது எல்லாவுயிர்க்கும் பொது எனவே அறமும் பொருளும் ஆகிய இரண்டும் எல்லாவுயிர்க்கும் பொது வாகாது மக்கட் குலத்தார்க்கே சிறந்துவரும் உறுதிப்பொருள்களாம் என்பது கருத்து.

யமையாதவராதல் மேவற்று - மேவுதலையுடையது. மேவல்- ஆணும்பெண்ணுமாய்ப் பொருந்தி வாழ்தல்.

'இன்பம் என்பது எல்லாவுயிர்க்கும் (பொதுவாகவுரியதாயி னும், ஈண்டுத்) தான் அமர்ந்து வரூஉம் மேவற்று ஆகும்' என இசையெச்சத்தால் வேண்டும் சொற்களை வருவித்துப் பொருள் கொள்ளுதல் வேண்டும்.

உஉ௦. பரத்தை வாயில் நால்வர்க்கும் உரித்தே
நிலத்திரி பின்றஃ தென்மனார் புலவர்.

**இளம்பூரணம் :**

என்—எனின். பரத்தையிற் பிரிவிற்கு உரியாரை உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) பரத்தையர்மாட்டு வாயில் விடுதல் நான்கு வருணத்தார்க்கும் உரித்து; அவ்வழிப் பிரியும் பிரிவு நிலம் பெயர்தல் இல்லை என்றவாறு.

எனவே, தன்னூரகத்துஞ் சார்ந்தவிடமுங் கொள்க. நால்வர்க் கும் உரித்து என்றமையான் நான்கு வருணத்துப் பெண்பாலாரும் அவனொடு ஊடப்பெறுப என்றவாறுமாம்.[1]

'' யாரிவன் எங்கூந்தல் கொள்வான் இதுவுமோர்
ஊராண்மைக் கொத்த படி றுடைத்தது.'' (கலி. அகூ)

---

1. பரத்தையர்பால் தூதுவிடுதல் நான்கு வருணத்தார்க்கும் உரித்து எனவே நான்கு வருணத்துப்பெண்பாலாரும் பரத்தை காரணமாகத் தலைவனொடு ஊடப் பெறுவர் எனவும், பரத்தையிற் பிரியும் பிரிவு நிலம் பெயர்ந்துறைதல் இல்லை யெனவே தன்னூ ரகமும் அதனைச் சார்ந்த இடமும் பரத்தையிற் பிரியும் இட மாகக் கொள்ளப்படும் எனவும் விளக்கம் தருவர் இளம்பூரணர்.

நால்வருணப் பிரிவு தமிழகத்திற்பேசப்பட்டது தொல்காப்பியனார் காலத் திற்கு மிகவும் பிற்காலத்திலாதலால் இந்நூற்பாவில் 'நால்வர்' என்றது நால் வருணத்தினைச் சுட்டாது நானில மக்களையே குறித்தது எனக் கொள்ளுதல் வேண்டும்.

என்பது பார்ப்பனி கூற்று.[1]

"பெரியார்க், கடியரோ ஆற்றாதவர்." (கலி. அஅ)

என்பது அரசி கூற்று.[2] (உக)

**நச்சினார்க்கினியம் :**

இது தலைவர்க்குரிய தலைவியர் பலருந் தலைவன் பரத்தைமை காரணமாக ஊடற்குரியரென்பதூஉம் அவரிடத்து வாயில் சேறற்குரியரென்பதூஉங் கூறி வழுவமைக்கின்றது.

(இ-ள்) பரத்தை வாயில் நால்வர்க்கும் உரித்து - தலைவன் பரத்தைமையால் தலைவிக்குத் தோன்றிய ஊடல் தீர்த்தற்குரிய வாயிலை அவர்பாற் செலுத்தல் நான்கு வருணத்தார்க்கும் உரித்து; அஃது நிலத்திரிபு என்று என்மனார் புலவர் - அவ்வொழுக்கம் பெரும்பான்மை மருதநிலத்தினின்றுந் திரிந்துவருதல் இன்றென்று கூறுவர் புலவர் (எ - று.)

'பரத்தைவாயி'லென்றது குதிரைத்தேர்போல நின்றது.[3]

---

1. பிற்காலத்தில் ஆட்சிபுரிந்த வேந்தர்களால் பார்ப்பனர்க்கும் பிரமதேயமாக வழங்கப்பட்ட ஊரின் ஆட்சிமுறை பார்ப்பனரால் தேர்ந்து கொள்ளப்பெற்ற பார்ப்பனர்க்கு உரியதாய் வழங்கிய தம் காலத்து நடை முறையினையெண்ணி 'ஊராண்மை' என்றது பார்ப்பனர்க்கேயுரியதாமெனக் கருதிய இளம்பூரணர்,

'இதுவும் ஓர் ஊராண்மைக் கொத்த படிறுடைத்து' என்பதனைப் பார்ப்பனி கூற்று என்றார்.

2. 'பெரியார்க்கு அடியரோ ஆற்றாதவர்' என அடிமை முறையினையெதிர்த்துக் கூறும் இவ்வுறுதிப்பாடு ஆட்சியுரிமையினை மேற்கொண்ட அரசகுலமகளிர்க்கன்றி ஏனையோர்க்குத் தோன்றுதலரிதாகலின் 'இது அரசி கூற்று' என்றார். எனினும் இங்ஙனம் தலைவனொடு புலந்துரைக்குங்கால் இன்னஇன்ன குலத்துத் தோன்றிய மகளிர் இன்னின்னவாறு புலந்துரைப்பர் எனக் கொள்ளுதல், ஒப்பாரும் மிக்காரும் இன்றி அன்பினைந்திணையொழுகலாற்றில் ஒழுகும் காதலரிருவரது காதற்கேண்மைக்குத் தக்கதன்றாதலின் மேற்குறித்த இளம்பூரணர் விளக்கம் அவர்கால நிலைமையை யொட்டி ஊகத்தாற் கூறப்பட்டதெனவே கொள்ளுதல் வேண்டும்.

3. 'குதிரை பூட்டப்பட்டு இயங்குந்தேர்' என விரிந்து வழங்குதற்குரிய தொடர் 'குதிரைத்தேர்' என இடையே வேண்டுஞ்சொற்கள் மறையத் தொகுத்து வழங்கப்பெற்றாற் போன்று 'தலைவனது பரத்தைமையால் தலைவிக்குத் தோன்றிய வாயில்' என விரிந்து வரவேண்டிய தொகைநிலைத்தொடர், 'பரத்தைவாயில்' எனத்தொகுத்து வழங்கப்பெற்றது என்பதாம்.

இதனாற் பயன் அந்தணர்க்கு நால்வரும் அரசர்க்கு மூவரும் வணிகர்க்கு இருவருமாகிய தலைவியர் ஊடற்குரியரென்பதூஉம் அவர்பால் தத்தந் தலைவர் ஊடறீர்த்தற்குரிய வாயில் விடுவ ரென்பதூஉம், அவர் வாயின் மறுத்தலும் நேர்தலும் உடைய ரென்பதூஉம், ஏனைப்பரத்தையர்க்கு வாயில்விடுதல் இன் றென்பதூஉங் கூறியவாறாயிற்று. 'ஒருபாற் கிளவி' (தொல். பொ. 222) என்பதனால் ஓரோவோர்குலத்துத் தலைவருந் தலைவியரும் அடங்குமாறுணர்க. உதாரணம் முற்காட்டியவற்றுட் காண்க. ஒருவனும் ஒருத்தியுமாகி இன்பநுகர்ந்து இல்லற நிகழ்த்துதலே சிறந்ததென்றற்கு இங்ஙனம் பலராதல் வழுவென்று அதனை அமைத்தார். (௩௦)

ஆய்வுரை :

இது, பரத்தையிற்பிரிவுக்கு உரியார் இவர் என்பதும் அப் பிரிவு நிகழும் இடம் இதுவென்பதும் உணர்த்துகின்றது.

(இ - ள்) பரத்தையிற்பிரிவு காரணமாகப் பாணர் முதலி யோரை வாயிலாக அனுப்புதல் மருதநிலத் தலைவர்க்கே சிறப் புரிமையுடையதாயினும் நானிலத் தலைவர்க்கும் ஒப்பவுரியதாகும். அவ்வழிப் பிரியும் பிரிவு, தாம் வாழும் நிலத்தைக் கடந்து நிகழ்தல் இல்லை. எ—று.

நிலம் பெயர்தல் இல்லையெனவே, தாம் வாழும் ஊரகத்தும் அதனைச் சார்ந்த புறஞ்சேரியகத்தும் அன்றித் தலைவன் தனக் குரிய நிலமல்லாத புறநிலத்தே பரத்தமை காரணமாகப் பிரிந் துறைதல் அவனது மனைவாழ்க்கைக் கடமைக்கும் அவனது தலைமைக்கும் ஒத்ததன்று என அறிவுறுத்தவாறாயிற்று.

உ௨௧. ஒருதலை உரிமை வேண்டினும் மகடூஉப்
பிரிதலச்சம் உண்மை யானும்
அம்பலும் அலருங் களவுவெளிப் படுக்குமென்று
அஞ்ச வந்த ஆங்கிரு வகையினும்
நோக்கொடு வந்த இடையூறு பொருளினும்
போக்கும் வரைவும் மனைவிகண் தோன்றும்.

இளம்பூரணர் :

என்—எனின். இது களவின்கண் தலைமகட்குரியதோர் மரபு உணர்த்திற்று.

(இ-ள்.) ஒருதலையுரிமை வேண்டினும் என்பது-ஒருதலையாகத் தலைமகள் உரிமை பூண்டலை வேண்டியவிடத்துமென்றவாறு.

மகடூஉப்பிரித லச்ச முண்மை யானும் என்பது - பிரிதற்கண் வரும் அச்சம் பெண்பாற்கு இயல்பாகு மென்றவாறு.

அம்பலும் அலரும் களவுவெளிப்படுக்குமென்று அஞ்சவந்தவாங் கிருவகையினும் என்பது-களவொழுக்கத்தை வெளிப்படுக்குமென்று அஞ்சும்படியாக வந்த அம்பலும் அலருமாகிய இருவகையின் கண்ணும் என்றவாறு.

நோக்கொடு வந்த இடையூறு பொருளினும் என்பது - தலைமகன் வரவு பார்த்திருந்தவழி வந்த இடையூறாகிய பொருளின் கண்ணும் என்றவாறு.

அவையாவன :— தாய்துஞ்சாமை நிலவு வெளிப்படுதல் முதலியன.

போக்கும் வரைவும் மனைவிகண் தோன்றும் என்பது - தலைமகனுடன் போதற் குறிப்பும் வரைவுகடாதற் குறிப்பும் மனைவி மாட்டுத் தோன்றும் என்றவாறு.[1]

"சிலரும் பலரும் கடைக்கண் நோக்கி
மூக்கின் உச்சிச் சுட்டுவிரல் சேர்த்தி
மறுகிற் பெண்டிர் அம்பல் தூற்றச்
சிறுகோல் வலந்தனள் அன்னை அலைப்ப

1. ஒருதலை—உறுதி. பிரிதல் அச்சம் மகடூஉக்கு உண்மையானும் என இயையும். மகடூஉ—பெண்., என்றது தலைவியை. மகடூஉவுக்கு என நான்காமுருபு விரித்துரைக்க. அம்பல்—அரும்பல்., களவில் தலைவனொடு தலைவிக்குளதாகிய தொடர்பு முகிழாய்ப் புறத்தார்க்குக்குறிப்பிற் புலப்படுதல். அலர்தல்—சொல்லாக விரிதல். 'மனைவிகள் போக்கும் வரைவும் தோன்றும்' என இயையும். போக்கு—தலைவனுடன் போதல் வேண்டும் என்ற மனக் குறிப்பு. வரைவு—வரைவுகடாதற் குறிப்பு., 'ஏன் இன்னும் மணஞ்செய்து கொள்ளவில்லை' எனத் தலைவனை வேட்கையுற்று வினவும் குறிப்பு.

அலந்தனென் வாழி தோழி கானற்
புதுமலர் தீண்டிய பூநாறு குரூஉச்சுவற்
கடுமா பூண்ட நெடுந்தேர் கடைஇ
நடுநாள் வரூஉம் இயல்தேர்க் கொண்கனொடு
செலவயர்ந் திசினால் யானே
அலர்சுமந் தொழிகஇவ் அழுங்க லூரே.'' (நற் கசுக)

இது போக்குக்குறித்தது. 'இரும்பிழி மகாஅர்' என்னும் பாட்டு வரைவு குறித்தது. (ஙம)

**நச்சினார்க்கினியம் :**

இது, களவின்கட் டலைவியின்கண் நிகழ்வதோர் வழுவமைக்கின்றது.

(இ - ள்.) உரிமை ஒருதலை வேண்டியும் - இடைவிடாத இன்பநுகர்தலோடு இல்லறநிகழ்த்தும் உரிமையை உறுதியாகப் பெறுதலை விரும்புதலானும்; பிரிதல் அச்சம் மகடூஉ உண்மையானும்- ஆள்வினைக்குறிப்புடைமையின் ஆண்மக்கள் பிரிவரென்று அஞ்சும் அச்சம் மகளிர்க்குண்டாகையினாலும்; ஆங்கு அம்பலும் அலரும் களவு வெளிப்படுக்கும் என்று அஞ்சவந்த இருவகையினும் -அக்களவொழுக்கத்திடத்தே அம்பலும் அலரும் இக்களவைப் புலப்படுக்குமென்று அஞ்சும்படி தோன்றிய இருவகைக் குறிப்பானும், நோக்கொடு வந்த இடையூறு பொருளினும் - பிறர் தன்னை அயிர்த்துநோக்கும் நோக்கங் காரணமாக வந்த கூட்டம் இடையூறுற்ற காரியத்தினாலும்; மனைவிகண் போக்கும் வரைவும் தோன்றும் - தலைவியிடத்தே உடன்போக்கும் வரையக்கருதுதலுந் தோன்றும் (எ—று)

''வழைபம லடுக்கத்து'' (அகம். 328) என்பதனுண் ''முகந்துகொண் டடக்குவம்'' என இடைவிடாது இன்பநுகர விரும்பியவாறும் உள்ளுறைபான் இல்லற நிகழ்த்த விரும்பிய வாறுங் காண்க

''உன்னங் கொள்கையொடு'' (அகம். 65)

என்பது அம்பலும் அலரும் அஞ்சிப் போக்குடன்பட்டது.

"ஆனா தலைக்கு மறனில் அன்னை
தானே யிருக்க தன்மனை யானே.' (குறுந். 262)

இஃது, இடையூறு பொருளின்கட் போக்குடன்பட்டது.

ஏனைய முன்னர்க் காட்டியவற்றுட் காண்க. 'ஒன்றித் தோன்றுந் தோழி மேன' (தொல். பொ. 39) என்பதனால் தோழிக்கும் இவையுரியவென்று கொள்க.[1] உடன்போக்குக் கருதுதலுந் தலைவன் தான் வரையாமல் தலைவி விரும்புதலும் வழுவாய் அமைந்தன. (௩௧)

ஆய்வுரை :

இது, களவொழுக்கத்தின்கண் தலைவிக்கு உரியதோர் இயல்பு உணர்த்துகின்றது.

(இ - ள்) (இடைவிடாது இன்பம் நுகர்தலோடு) மனையறம நிகழ்த்தும் உரிமையை உறுதியாக வேண்டுதலானும், வினை நிகழ்ததுதலில் விருப்புடைய ஆண்மக்கள் தம்மை விட்டுப் பிரிவர் என்னும் அச்சம் பெண்டிர்க்கு இயல்பாதலானும், களவொழுக்கத்தைப் புறத்தார்க்கு வெளிப்படுத்தும் என்று அஞசும்படி தோன்றிய அம்பலும் அலரும் ஆகிய இருவகைக் குறிப்பினாலும், தலைவனது வருகையை எதிர்நோக்கியிருந்த நிலைமைக்கண் வந்த அவனுடன் அளவளாவுதற்கியலாதபடி இடையூறு நேர்தலானும் தலைவனோடு உடன்போதற்குறிப்பும் 'ஏன் இன்னும் மணஞ்செய்து கொள்ளவில்லை?' எனத் தலைவனை வினவுங் குறிப்பும் தலைமகளிடத்தே தோன்றும். எ—று.

போக்கு - உடன்போக்கு, என்றது தலைவனுடன்போதல் வேண்டும் என்னுந் தலைவியின் உள்ளக்குறிப்பு :

வரைவு - மணத்தல், என்றது ஏன்மணந்து கொள்ளவில்லையெனத் தலைமகளுள்ளத்தே தோன்றும் வரைவுகடாதற் குறிபபினை.

---

1. தான் அவள் என்னும் வேற்றுமையின்றித் தலைவியுடன் கருத்தொருமித்து ஒன்றிய உள்ளமுடையாள் என்பதனை ஒன்றித் தோன்றுந் தோழி' என்பதனால் ஆசிரியர் குறித்தாராதலின் தலைவியின் உள்ளத்தே தோன்றிய இவ்வெண்ணங்கள் அவளுடன் ஒன்றியவுள்ளத்தினளாகிய தோழிக்கும் உரிய எனக்கொண்டார் நச்சினார்க்கினியர்.

உஉஉ. வருத்த மிகுதி சுட்டுங் காலை
உரித்தென மொழிப வாழ்க்கையுள் இரக்கம்.

இளம்பூரணம் :

என்—எனின். இது தலைமகட்குந் தோழிக்கு முரியதோர் திறன் உணர்த்திற்று.[1]

(இ • ள்.) வருத்தமிகுதியைக் குறித்தவழி மனைவாழ்க்கையுள் இரக்கம் உரித்தென்று சொல்லுவர் என்றவாறு.

எனவே; வருத்தமிகுதியைச் சுட்டாதவழி மனைவாழ்க்கையுள் இரக்கம் இன்றெனக் கொள்ளப்படும்.

"செல்லாமை உண்டேல் எனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை." (குறள். ககடுக)

"அன்பற மாறியாம் உள்ளத் துறந்தவள்
பண்பும் அறிதிரோ என்று வருவாரை
என்திறம் யாதும் வினவல் வினவிற்
பகலின் விளங்குநின் செம்மல் சிதையத்
தவலருஞ் செய்வினை முற்றாமல் ஆண்டோர்
அவலம் படுதலும் உண்டு." (கலி. கக)

இதுவுமோர் மரபுவழு வமைத்தது. (கூ0)

நச்சினார்க்கினியம் :

இது, கற்புக்காலத்துத் தோழிக்கும் அறிவர்க்கும் உரியதோர் வழுமைக்கின்றது.

---

1. மனைவாழ்க்கையுள் வருத்தம் மிகுதலைக் குறித்து மனைக்கண் இருந்து இரங்குதற்குரியோர் தலைமகளும் தோழியுமேயாதலின் 'இந்நூற்பா அவ்விருவர்க்கு முரியதோர் திறம் உணர்த்திற்று' எனக்கருத்துரை வரைந்தார் இளம்பூரணர்.

(இ - ள்.) வருத்தமிகுதி [1] சுட்டுங்காலை—தோழியும் அறிவரும் பரத்தையிற் பிரிவால் தலைவர்க்குந் தலைவியர்க்குந் தோன்றிய வருத்தமிகுதியைத் தீர்க்கக் கருதிக் கூற்று நிகழ்த்துங் காலத்து; வாழ்க்கையுள் இரக்கம் உரித்தென மொழிப - அவரது இல்வாழ்க்கை நிகழ்ச்சிக்கண்ணே தமக்கு வருத்தந்தோன்றிற்றாகக் கூறுதலும் உரித்தென்று [2] கூறுவராசிரியர் (எ - று.)

''நீர்நீ டாடிற் கண்ணுஞ் சிவக்கும்
ஆர்ந்தோர் வாயில் தேனும் புளிக்குந்
தணந்தனை ஆயினெம் இல்லுய்த்துக் கொடுமோ
அந்தண் பொய்கை யெந்தை யெம்மூர்க்
கடும்பாம்பு வழக்குந் தெருவில்
நடுங்கஞர் எவ்வங் களைந்த வெம்மே.'' (குறுந். 354)

இதனுள் 'இல்லறத்தினை நீ துறந்தாயாயின் எம்மை எம்மூர்க்கண்ணே விடுக'வெனத் தனக்கு வருத்தந்தோன்றிற்றாகத் தோழி கூறியவாறு காண்க.

''உடுத்துந் தொடுத்தும் பூண்டுஞ் செரீஇயுந்
தழையணிப் பொலிந்த ஆயமொடு துவன்றி
விழவொடு நின்றாய் நீயே யிஃதோ
ஓரா வல்சிச் சீரில் வாழ்க்கைப்
பெருநலக் குறுமகள் வந்தென
இனிவிழ வாயிற் றென்னுமிவ் வூரே.'' (குறுந். 295)

இதனுள் ஓரா ''வல்சி''யொடு முன்னர் நிகழ்த்திய வாழ்க்கை இவன் வந்தானாகப் புறத்து விளையாடும் விழவுள தாயிற்றென்று இவ்வூர் கூறாநிற்குஞ் செல்வம் இவளை ஞெகிழ்ந்தாற் பழைய தன்மையாமென்று அறிவர் இரங்கிக் கூறியவாறு காண்க.

---

1. இங்கு வருத்தம் என்றது, பரத்தமை காரணமாகத் தலைவியர்க்கும் தலைவர்க்கும் தோன்றிய மனவருத்தத்தினை. மிகுதியென்றது அவ்வருத்தம் கணவன் மனைவி யென்னும் இருவருள்ளத்தும் மிக்குத்தோன்றுதலை. சுட்டுதலாவது, அவர்தம் வருத்தத்தைத் தீர்க்கக்கருதித் தோழி அறிவர் முதலியோர் தலைவன் தலைவியாகிய அவ்விருவரிடத்தும் உரை நிகழ்த்துதல். தோழி முதலியோர் கூறும் கூற்றின்கண் அவ்விருவரது மனைவாழ்க்கைகள் பற்றியும் இரக்கவுணர்வு தோன்றும் என்பதாம்.

2. சுட்டுங்காலை வாழ்க்கையுள் இரக்கம் உரித்து எனவே வருத்தமிகுதியினைச் சுட்டுவோராகிய தோழிமுதலியோர் கூற்றின்கண் அவ்விருவரது மனைவாழ்க்கை பற்றிய இரக்கவுணர்வுதோன்றும் எனக் கொண்டார் நச்சினார்க்கினியர்.

"துறைமீன் வழங்கும்" (அகம். 316) என்பதனுள்,

"அதுபுலந் துறைதல் வல்லி யோரே"

எனப் புலவியால் நின் இல்வாழ்க்கை குறைபடுமெனத் தோழி கூறியவாறு காண்க.

இன்னும் உய்த்துக்கொண்டுணர் தலென்பதனால் ஏனைப் பிரிவான் நிகழும் வருத்தமிகுதியைக் குறித்தவிடத்து உயிர் வாழ்க்கையின் இரக்கமுரித்தென மொழிப என்றும் பொருள் கூறிச்,

"செல்லாமை யுண்டேல்" (குறள். 115)

எனவும்,

"அன்பற மாறியா முள்ள" (கலி. 19)

எனவும் வருவன பிறவுங் கொள்க. (௩௨)

**ஆய்வுரை :**

இஃது இன்பமேநிகழும் மனைவாழ்க்கையுள் இரங்கலுணர்வு தோன்றுதலுமுரித்தென்கின்றது.

*(இ - ள்) தலைவியின் வருத்தமிகுதியை உணர்த்தும் நிலையில் மனைவாழ்க்கையில் இரங்கலுணர்வுதோன்றுதலுரியது என்பர் புலவர். எ—று.*

*தலைமகனது பரத்தையிற் பிரிவுகாரணமாகத் தலைவிக்கு உளதாகிய வருத்தத்தின் மிகுதியினைத் தலைவனுக்கு அறிவுறுத்தும் நிலையில் அங்ஙனம் அறிவுறுத்தப் புகுந்த தோழி அறிவர் முதலிய வாயில்கள் உள்ளத்திலே இரங்கலுணர்வு தோன்றுதல் உண்டு என்பதாம்.*

*வையாவிக்கோப்பெரும்பேகன் தனது மனைவியைத் துறந்திருந்தானாக அவனால் துறக்கப்பட்ட கண்ணகி காரணமாகப் பரணர், அரிசில்கிழார், பெருங்குன்றூர் கிழார் ஆகிய புலவர் பெருமக்கள் அகத்திணைமரபின் படி தம்மைப் பாணராகவைத்துப்பாடிய செய்யுட்கள் மனைவாழ்க்கையில் இரங்கலுணர்வைப் புலப்படுத்தல் காணலாம்.*

௨௨௩. மனைவி உயர்வுங் கிழவோன் பணிவும்
நினையுங் காலைப் புலவியுள் உரிய.

**இளம்பூரணம் :**

என்—எனின். கற்புக்காலத்துத் தலைமகட் குரியதோர் மரபு உணர்த்திற்று.[1]

(இ—ள்.) தலைமகள் உயர்வும் தலைமகன் தாழ்வும் ஆராயுங் காலத்துப் புலவிக்காலத்து உரிய வென்றவாறு.

எனவே, ஒழிந்த ஊடல் துனியென்பனவற்றிற் குரியவாம்.[2]

''ஒரூஉக் கொடி யியல் நல்லார் குரனாற்றத் துற்ற
முடியுதிர் பூந்தாது மொய்ம்பின வாகத்
தொடிய எமக்குநீ யாரைப் பெரியார்க்கு
அடியரோ ஆற்றா தவர் ;

கடியர்நமக்கி யார்சொலத் தக்கார் மாற்று
வினைக்கெட்டு வாயல்லா வெண்மை யுரையாது கூறுநின்
மாய மருள்வா ரகத்து ;

ஆயிழாய், நின்கண் பெறினல்லால் இன்னுயிர் வாழ்கல்லா
என்கண் எவனோ தவறு.'' (கலி. அஅ)

இதனுள் தலைமகன் பணிவுந் தலைவி யுயர்வுங் காண்க. இஃது ஈண்டுக் கூறியதென்னை? 'காமக் கடப்பினுட் பணிந்த கிளவி' (கற்பியல். ௧௯) யென மேற்கூறப்பட்டதாலெனில், ஆண்டுக் கூறியது ஊடல் புலவி துனி யென்னு மூன்றிற்கும் பொதுப்பட நிற்றலின், இது புலவிக்கே உரித்தென்னுஞ் சிறப்பு நோக்கிக் கூறியவாறு காண்க.[3] (௩௨)

---

1. ''கற்புக்காலத்துத் தலைமக்கட்குரியதோர் மரபு உணர்த்திற்று' என இத்தொடர் இருத்தல் வேண்டும்.

2. ''எனவே ஒழிந்த ஊடல் துனியென்பவற்றிற்குரியவல்ல'' என இவ்வுரைத் தொடரைத் திருத்திப்பொருள் கொள்ளுதல் வேண்டும்.

3. ''காமக்கடப்பினுட்பணிந்த கிளவி
காணுங்காலைக்கிழவோற்குரித்தே
வழிபடு கிழமை யவட்கியலான'' (கற்பியல்—ய௬)

நச்சினார்க்கினியம் :

இது, கற்பினுள் தலைவற்குந் தலைவிக்கும் எய்தியதோர் வழுவமைக்கின்றது.

(இ—ள்.) புலவியுள் மனைவி உயர்வும் - புலவிக் காலத்துத் தலைவன் பணிந்துழி உட்கும் நாணுமின்றித் தலைவி அதனை ஏற்றுக்கோடலும்; கிழவோன் பணிவும்—தலைவன் தலைமைக்கு மாறாகத் தலைவியைப் பணிதலும்; நினையுங்காலை உரிய ஆராயுங் காலை இருவர்க்கு முரிய (எ - று)

''வலையுறு மயிலின் வருந்தினை பெரிதெனத்
தலையுற முன்னடிப் பணிவான் போலவும்
கோதை கோலா விறைஞ்சி நின்ற
ஊதையஞ் சேர்ப்பனை அலைப்பேன் போலவும்.'' (கலி.128)

இது, முன்னே தலைவி மனத்து நிகழ்தலுண்மையிற் கனவிலுங் கண்டாளென்றுணர்க

''தப்பினேன் என்றடி சேர்தலும் உண்டு'' (கலி. 89) என்பதும் அது.

'நினையுங்காலை' யென்றதனால் தோழியுயர்வுங் கிழவோன் பணிமொழி பயிற்றலுங் கொள்க.

''ஒன்று. இரப்பான்போல் எளிவந்துஞ் சொல்லும் உலகம்
புரப்பான் போல்வதோர் மதுகையும் உடையன்
வல்லாரை வழிபட் டொன்றறிந் தான்போல்
நல்லார்கண் தோன்றும் அடக்கமும் உடையன்
இல்லோர் புன்கண் ஈகையில் தணிக்க
வல்லான் போல்வதோர் வண்மையு முடையன்

என மேல் தலைமகன் பணிவும் தலைவியுயர்வுங் கூறியவர் ஈண்டுங்கூறியது, கூறியதுகூறல் என்னுங்குற்றமாகாதோ என்பது வினா. கற்பியலிற் கூறிய அவ்விதி ஊடல் புலவிதுனியென்ற மூன்றிற்கும் பொதுப்படக் கூறியது. இங்குக் கூறிய விதி புலவிக்கேயுரியதாகும். ஆதலின் குற்றமாகாது என்பது இளம்பூரணர் கூறும் விடையாகும்.

பிணக்கந்தோன்றிச் சிறிதுபொழுது நிகழ்வது புலவி எனவும் அப்பிணக்கம் அதனின் மிக்கு நீட்டித்து நின்ற ஊடல் எனவும், அப்பிணக்கம் முதிர்ந்தநிலை துனி எனவும் வழங்கப்படும்.

அன்னான் ஒருவன்தன் ஆண்டகை விட்டென்னைச்
சொல்லுஞ்சொல் கேட்டீ சுடரிழாய் பன்மாணும்.'' (கலி. 47)

இதனுள் தலைவன் இரந்துரைத்தவாறுந் தான் அதனை ஏற்றுக்கொண்டவாறுங் காண்க. இச்சூத்திரம் புலவிக்கே கூறினார். ஊடற்குந் துனிக்குங் 'காமக்கடப்பின்' (தொல். பொ. 160) என்பதனுட் கூறினாரென வுணர்க.[1] (௩௩)

**ஆய்வுரை :**

இது, கற்புக்காலத்துத் தலைமக்கட்குரியதோர் இயல்பு கூறுகின்றது.

(இ - ள்) மனைவி தன்னைக் கணவன் பணிந்தபொழுது அச்சமும் நாணமுமின்றி அவனது வணக்கத்தினையேற்றுக்கொள்ளும் உயர்வுடையளாதலும் கணவன் தனது தலைமைக்கு மாறாகத் தலைவியைப் பணிந்து தாழ்தலும் ஆராயுங்கால் புலவிக்காலத்து உரிய எ—று.

தலைமகள் உயர்வும் தலைமகன் தாழ்வும் புலவிக்காலதது உரிய எனவே, அப்புலவி நீட்டித்தலாகிய ஊடற்காலத்தும் அவ்வூடல் துனியாய் முதிர்ந்தகாலத்தும் மனைவியுயர்வும் கிழவோன் பணிவும் உரியவாகா என்றாராயிற்று.

௨௨௪. நிகழ்தகை மருங்கின் வேட்கை மிகுதியிற்
புகழ்தகை வரையார் கற்பி னுள்ளே.

**இளம்பூரணம் :**

என்—எனின், இதுவுமோர் மரபுணர்த்திற்று.

(இ - ள்.) கற்புக்காலத்து நிகழாநின்ற தகையின் பக்கத்து வேட்கை மிகுதியாற் புகழ்தலை நீக்கார் என்றவாறு.

களவுக்காலத்து நலம்பாராட்டிய தலைமகன் கற்புக் காலத்து மெழினலம் பாராட்டப்பெறும் என்றவாறு.[2]

---

1. இவ்விளக்கம் இளம்பூரணருரையைத் தழுவியமைந்ததாகும்.

2. களவொழுக்கம் நிகழுங்காலத்தில் தலைவியின் எழில் நலத்தினைப் பாராட்டி மகிழ்ந்த தலைவன் கற்புக்காலத்தும் தலைவியின் எழில் நலத்தினைப் பாராட்டி மகிழ்வான் என்பதாம்.

தகை என்பது அழகு. அதனைப் பற்றிப் புகழும் எனக் கொள்க.

"அணைமருள் இன்றுயில் அம்பணைத் தடமென்றோள்
துணைமலர் எழில் நீலத் தேந்தெழில் மலருண்கண்
மணமௌவல் முகையன்ன மாவீழ்வான் நிரை வெண்பல்
மணநாறு நறுந்தண் மாரிவீழ் இருங்கூந்தல்
அலர்முலை யாகத் தகன்ற அல்குல்
சிலநிரை வால்வளைச் செய்யா யோவெனப்
பலபல கட்டுரை பண்டையிற் பாராட்டி." (கலி. கச)

என வரும். (ங௩)

நச்சினார்க்கினியம்:

இது, கற்புக்காலத்துத் தலைவற்குந் தலைவிக்கும் உரிய தோர் வழுவமைக்கின்றது.

(இ-ள்.) கற்பினுள்—கற்புக்காலத்து; தகைநிகழ் மருங்கின்-ஒருவர்க்கொருவர் மனத்து நிகழுமிடத்து;[1] வேட்கை மிகுதியிற் புகழ் தகை வரையார்—வேட்கைமிகுதியாலே அதனைப் புகழ்ந்துரைக்குந் தகைமையினை ஆசிரியர் இருவர்க்கும் நீக்கார் கொள்வர் (எ—று.)

"ஆக வனமுலை அரும்பிய சுணங்கின்
மாசில் கற்பின் புதல்வன் தாயென
மாயப் பொய்ம்மொழி சாயினை பயிற்றி." (அகம். 6)

இது, புலவிக்கண் தலைவன் புகழ்ந்தது.

"அணைமருள்" (கலி. 14)

இது போக்கின்கண் தலைவன் புகழ்ந்தது.[2]

---

1. ஒருவர்க்கொருவர் மனத்து அழகு நிகழுமிடத்து' என்று இருத்தல் வேண்டும் 'தகை' என்பதன் பொருளாகிய 'அழகு' என்னுஞ்சொல் ஏடெழுதுவோரால் உரையில் விடப்பட்டது. 2. தலைவியைத் தலைவன் புகழ்தலும் தலைவி தலைவனைப் புகழ்தலும் தாம்தாம் தனித்துள்ள நிலையிலன்றிப் பிறரெதிர் நிகழ்வன அல்ல. ஆதலால் இவை வழுவாதற்கு அமைத்துக் கோடற்கும் இடனில்லையென்க.

''அரிபெய் சிலம்பின்'' (அகம். 6)

என்பதனுள் ஏந்தெழில் ஆகத்துப் பூந்தார் குழைய'' என்பது தலைவி புலவிக்கட் புகழ்ந்தது.

''நிரைதார் மார்பன் நெருநல் ஒருத்தியொடு'' (அகம். 66) என்பதும் அது.

'தகை' எனப் பொதுவாகக் கூறலிற் குணத்தைக் கூறலுங் கொள்க.

''நாலாறுமாறாய்'' (நாலடி. 383) எனவும்,
''நின்ற சொல்லர் நீடுதோன் றினியர்'' (நற். 1)

எனவும் வரும்.

குற்றேவனிலையளாகிய தலைவியைத் தலைவன் புகழ்தலா லும் பொருநாணினளாகிய தலைவி கணவனைப் பிறரெதிர் புகழ்தலானும் வழுவாயிற்று. (௩௪)

**ஆய்வுரை :**

இது, கற்புக்காலத்துத் தலைவனுக்குரியதோர் மரபு கூறு கின்றது.

(இ - ள்) நிகழாநின்ற அழகின் பக்கத்தே வேட்கை மிகுதி யால் தலைவன் தலைமகளைப் புகழுந்திறத்தினைக் கற்பினுள் நீக்காது ஏற்றுக்கொள்வர் அறிஞர். எ—று

தகை நிகழமருங்கு - அழகுநிகழும் பக்கம்., இஃதாவது தலைமகள்பால் மனைவாழ்க்கையில் அழகிய பண்பும் செயலும் வெளிப்பட்டுத் தோன்றும் நிலை. வேட்கை மிகுதியாவது தலை மகளுடைய அழகிய பண்பும் செயலுங்காரணமாகத் தலைவ னுள்ளத்தே மிக்குத்தோன்றும் வேட்கைப்பெருக்கம். மிகுதியின்- மிகுதியால். இன் ஏதுப்பொருளில் வந்தது. தலைமகளது நற்குண நற்செய்கைகளாகிய அழகில் திளைத்த தலைமகன் தலைவி யிடத்தே வைத்த பெருவேட்கைகாரணமாகத் தலைமகளைப் புகழ்ந்துபாராட்டுதலும் மனைவாழ்க்கைக்கு அழகுதருவதே என் பார் 'புகழ்தகை' என்றார் ஆசிரியர். தகை - அழகு. காதற் கேண்மையால் ஒருயிர் எனப் பழகுங்கேண்மையுடையாராகிய

காதலர் ஒருவருள் ஒருவர் ஒருவரைப் புகழ்தல் என்பது 'இனையர் இவர் எமக்கு இன்னம்யாம் என்று புனையினும் புல்லென்னும் நட்பு' என்றவாறு இருவரிடையே வேறுபாட்டுணர்வினைத் தோற்றுவிக்குமோ என ஐயுறுதற்கிடனின்றிக் கற்புக்காலத்தே கணவன் மனைவியின்பாற் கொண்ட வேட்கை மிகுதியினால் அவளுடைய எழில்நலங்களைப்பாராட்டிப்புகழும் இவ்வுரை அவர் தம் மனைமாட்சியினை மென்மேலும் வளம்பெறச் செய்வதாக லின் இத்தகைய புகழ்ச்சியுரையினை அறிஞர்கள் விலக்காது உடன்படுவர் என்பார் 'கற்பினுள் புகழ்தகை வரையார்' என்றார் ஆசிரியர். கோவலன் கண்ணகியை மணந்து மகிழும் கற்புக் காலத்தே 'மாசறுபொன்னே வலம்புரிமுத்தே, காசறு விரையே கரும்பே தேனே' என்றாங்குத் தன்மனைவியின் நலம் பாராட்டிய பகுதி இதன்பாற்படும்.

உஉரு. இறைச்சி தானே உரிப்புறத் ததுவே.

**இளம்பூரணம் :**

என்—எனின். இறைச்சிப்பொருளாமா றுணர்த்திற்று.

(இ—ள்.) இறைச்சிப் பொருளென்பது உரிப்பொருளின் புறத்தாகித் தோன்றும் பொருள் என்றவாறு.[1]

அஃதாவது கருப்பொருளாகிய நாட்டிற்கும் ஊர்க்குந் துறைக்கும் அடையாகி வருவது.[2]

"நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று
நீரினும் ஆரள வின்றே சாரற்
கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு
பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே." (குறுந். ங)

என்றவழி நாட்டிற்கு அடையாகி வந்த குறிஞ்சிப்பூவுந்

1. 'இறைச்சிதானே பொருட்புறத்ததுவே' எனப்பாடம்கொண்டார் நச்சி-னார்க்கினியர். இறைச்சி என்றது, வெளிப்படக் கூறப்படும் உரிப் பொருளின் புறத்தே தங்கியிருக்கும் குறிப்புப்பொருளே.

2. நாட்டிற்கும் ஊர்க்கும் நீர்த்துறைக்கும் அடைமொழிகளாய் வரும் கருப் பொருள் நிகழ்ச்சிகளே இறைச்சியெனப்படும் என்பதாம்.

தேனும் இறைச்சிப் பொருள் என்று கொள்க.[1] (௩௪)

௨௨௫. இறைச்சி தானே பொருட்புறத் ததுவே.

**நச்சினார்க்கினியம் :**

இது தலைவிக்குந் தோழிக்கு முரியதோர் வழுவமைக்கின்றது. இறைச்சியாவது உள்ள பொருள் ஒன்றனுள்ளே கொள்வதோர் பொருளாகலானுஞ்[2] செவ்வன் கூறப்படாமையானுந் தலைவன் கொடுமை கூறும்வழிப் பெரும்பான்மை பிறத்தலானும் வழுவாயிற்று.

(இ—ள்.) இறைச்சிதானே - கருப்பொருட்கு நேயந்தான்; பொருட் புறத்ததுவே—கூறவேண்டுவதோர் பொருளின் புறத்தே புலப்பட்டு அதற்கு உபகாரப்படும் பொருட்டன்மையுடையதாம் (எ—று.)

''இலங்கு மருவித் திலங்கு மருவித்தே
வானி னிலங்கு மருவித்தே தானுற்ற

---

1, 'தலைமகன் வரைந்து கொள்வது வேண்டித் தோழி தலைமகனை இயற்பழித்த வழித் தலைமகள் இயற்படமொழித்தது' என்ற துறையில் அமைந்தது இக்குறுந்தொகைப் பாடல். இதனைப் பெருமைபற்றிய வியப்புச் சுவைக்கு எடுத்துக் காட்டாகப் பேராசிரியர் மெய்ப்பாட்டியலுரையிற் காட்டியுள்ளார்.

''கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு பெருந்தேன் இழைத்தாற்போல வழி முறை முறையாற் பெருகற்பாலதாகிய நட்பு, மற்று அவனைக் கண்ணுற்ற ஞான்றே நிலத்தினது அகலம் போலவும் விசும்பின் ஒக்கம் போலவும் கடலின் ஆழம் போலவும் ஒரு காலே பெருகிற்றென்றமையின் இது தன்கண்தோன்றிய பெருமை வியப்பு; இது தலைமகன் கருத்தினுள்ள நட்பிற்குக் கொள்ளுங்கால் பிறன்கண் தோன்றிய பெருமை வியப்பா மென்பது கொள்க.'' எனப்பேராசிரியர் தரும் விளக்கம் உரிப் பொருளின் புறத்ததாய்த் தோன்றும் குறிஞ்சிப் பூவும் தேனும் ஆகிய இறைச்சிப் பொருளின் இயல்பினைப் புலப்படுத்தல் காணலாம்.

2. இது இறை என்னும் முதனிலையடியாகப் பிறந்த பெயர் இறைச்சி என்பதாகும். பொருள் என்றது வெளிப்படச் சொல்லப்பட்டுள்ள பொருளை. இங்ஙனம் புலப்படச் சொல்லப்பட்ட பொருளின் புறத்தே தங்கியதாய்க் குறிப்பினாற் கொள்ளப்படுவது இறைச்சிப் பொருள் என்பார், ''இறைச்சியாவது உள்ளதோர் பொருள் ஒன்றனுள்ளே கொள்வதோர் பொருள்'' என்றார். அப்பொருள் வெளிப்படையாகச் சொல்லப்படாதது என்பார், 'செவ்வன் கூறப்படாமையானும்' என்றார். செவ்வன் கூறப்படுதலாவது, சொல்லக்கருதிய பொருள் கேட்போர்க்குத் தெளிவாகப் புலப்படுமாறு சொல்லப்பெறுதல்.

சூள்பேணான் பொய் தான் மலை.'' (கலி. 41)

சூளைப் பொய்த்தானென்பதே கூறவேண்டும் பொருள். அதன்புறத்தே இங்ஙனம் பொய்த்தான்மலையகத்து நீர்திகழ்வா னென்னென இறைச்சிப்பொருள் தோன்றியவாறு காண்க. [1] பிறவு மன்ன. (௩௫)

**ஆய்வுரை :**

இது, தான்கருதியபொருளைக் குறிப்பின் உணர்த்தும் உரையாடற்பகுதியாகிய இறைச்சியின் இலக்கணங் கூறுகின்றது.

(இ - ள்) இறைச்சியாவது வெளிப்படக்கூறப்பட்ட உரிப் பொருளின் புறத்ததாகித் தோன்றும் குறிப்புப் பொருள். எ—று.

இத்தகைய குறிப்புப்பொருள் வெளிப்படக்கூறப்பட்ட உரிப் பொருளின் புறத்தே தங்கித் தோன்றுதலின் இறைச்சியென்னும் பெயருடையதாயிற்று. இறுத்தல் - தங்குதல். நாட்டிற்கும் ஊர்க்கும் நீர்த்துறைக்கும் அடைமொழியாகிவரும் கருப்பொருள் நிகழ்ச்சிக ளாற்புலப்படத் தோன்றும் குறிப்புப்பொருளே 'இறைச்சி' என வழங்கப்படும் என்பது இளம்பூரணர் முதலிய பண்டைய உரை யாசிரியர்களின் கருத்தாகும்.

'இறைச்சிதானே பொருட்புறத்ததுவே' என்பது நச்சினார்க் கினியர் கொண்ட பாடமாகும். ''கூறவேண்டுவதோர் பொருளின் புறத்தேபுலப்பட்டு அதற்கு உபகாரப்படும் பொருட்டன்மையுடை யது இறைச்சி'' என்பதும், வடநூலார் கூறும் இதனை 'நேயம்' என்ற பெயரால் வழங்குதலும் பொருந்துமென்பதும், நச்சினார்க் கினியர் கருத்தாகும். புதல்வற்பயந்த பூங்குழல் மடந்தை பரத் தையிற் பிரிந்துவந்த தலைவனொடு புலந்துரைப்பதாக அமைந்தது,

''ஒல்லேங் குவளைப் புலாஅல், மகன்மார்பிற்
புல்லெருக்கங் கண்ணி நறிது''

1. 'சூள்பொய்த்தான்' என்பது புலப்படச் சொல்லவேண்டியபொருள். சூள் பேணான் பொய்த்தானது மலை விளங்குகின்ற அருவிநீரையுடையதாயிற்று என்று கூறப்பட்ட பொருளின்புறத்தே இவ்வாறு சூள் பொய்த்தான் மலையில் மழைபெய்தல் கூடாதே. இம்மலையில் அருவி நீர் விளங்குதல் எவ்வாறு? என்னும் குறிப்புப் பொருள் தோன்றியவாறு காணலாம்.

என்பதாகும். 'இதன்கண் குவளை புலால் நாறுதற்கு அவன் தவற்றொடு கூடிய அவன் காதல் காரணமென்பதூஉம், எருக் கங்கண்ணி நறிதாதற்கு மகிழ்நன்செய்த துனிகூர் வெப்பம் முகிழ் நகை முகத்தால் தணிக்கும் புதல்வன்மேல் ஒருகாலைக கொரு காலபெருகும் அன்புகாரணம் என்பதூஉம்'' குறிப்பினாற் பெறப் படுதலின் இது 'குறித்தோன் கூற்றம் தெரித்து மொழிகிளவி' (தொல் - சொல். ருரு) யாயிற்று எனவும் ''வடலூரலார் இதனை நேயம் என்ப'' எனவும் சேனாவரையர் குறித்துள்ளமை ''கருப் பொருட்கு நேயந்தான்'' எனவரும் உரைத்தொடரொடு ஒப்பு நோக்கியுணரத்தகுவதாகும்.

உஉசு. இறைச்சியிற் பிறக்கும் பொருளுமா ருளவே
திறத்தியல் மருங்கில் தெரியு மோர்க்கே.

**இளம்பூரணம் :**

என்—எனின். இஃது இறைச்சிப் பொருள்வயிற் பிறக்கும் பிறிதுமோர் பொருள் உணர்த்துதல் நுதலிற்று.

(இ—ள்) இறைச்சிப் பொருள்வயிற் றோன்றும் பொருளும் உள ; பொருட்டிறத்தியலும் பக்கத்து ஆராய்வார்க் கென்ற வாறு.

இறைச்சிப் பொருள் பிறிதுமோர் பொருள் கொளக்கிடப் பனவுங் கிடவாதனவுமென இருவகைப்படும்.[1] அவற்றிற் பிறி தோர் பொருள் பட வருமாறு :—

''ஒன்றேன் அல்லென் ஒன்றுவென் குன்றத்துப்
பொருகளிறு மிதித்த நெரிதாள் வேங்கை
குறவர் மகளிர் கூந்தற் பெய்ம்மார்
நின்று கொய்ய மலரு நாடனோடு
ஒன்றேன் தோழி ஒன்றி னானே.'' (குறுந். உ0அ)

என்பது வரைவெதிர் கொள்ளாது தமர் மறுத்தவழித் தலை

---

1. ''இறைச்சியிற் பிறக்கும் பொருள்'' எனவே, இறைச்சிப் பொருளும் அதனிடமாகப் பிறக்கும் பிறிதோர் பொருளும் எனப்பொருள் இரண்டென்றவாறு. எனவே நாட்டிற்கும் ஊர்க்குந் துறைக்கும் அடைமொழியாய் உரிப்பொருட் புறத் தாய் வருவதும், அவ்வளவிலன்றிப் பிரிதுமோர் பொருள்பயப்ப உரிப்பொருட்குச் சார்பாய் வருவதும் என இறைச்சிப்பொருள் இருவகைப்படும் என்பதாம்.

மகனோடு ஒன்றுமாறு என்னெனக்கவன்ற தோழிக்கு உடன்போதற் குறிப்பினளாய்த் தலைமகள் கூறியதாகலின், இதனுட் பொருகளி றென்றமையால் தலைமகள்தமர் தலைமகன் வரைவிற் குடன்படு வாரும் மறுப்பாருமாகி மாறுபட்ட தென்பது தோற்றுகின்றது. ‘பொருகளிறு மிதித்த வேங்கை’ யென்றதனாற் பொருகின்ற விரண்டுகளிற்றினும் மிதிப்ப தொன்றாகலின் வரைவுடன்படா தார் தலைமகனை யவமதித்தவாறு காட்டிற்று ‘வேங்கை நின்று கொய்ய மலரும்’ என்றதனாள் முன்பு ஏறிப்பறித்தல் வேண்டுவது இப்பொழுது நின்று பறிக்கலாயிற்று என்னும் பொருள்பட்டது. இதனானே பண்டு நமக்கரியனாகிய தலைமகன் தன்னை யவமதிக்க வும் நமக்கெளியனாகி யருள் செய்கின்றானெனப் பொருள் கொளக் கிடந்தவாறு காண்க. (௯௫)

**நச்சினார்க்கினியம் :**

இஃது, எய்தியது இகந்துபடாமற் காத்தது.

(இ - ள்.) இறைச்சியிற் பிறக்கும் பொருளுமார் உளவே கருப்பொருள் பிறிதோர் பொருட்கு உபகாரப்படும் பொருட் டாதலேயன்றி அக் கருப்பொருடன்னுள்ளே தோன்றும் பொரு ளும் உள; திறந்து இயல் மருங்கில் - அஃது உள்ளுறையுவமத் தின் கூற்றிலே அடங்குமாறுபோல நடக்குமிடத்து; தெரியு மோர்க்கு - அவ்வுள்ளுறையுவமமன்று இஃது இறைச்சி யென்று ஆராய்ந்துணரும் நல்லறிவுடையோர்க்கு (எ—று.)[1]

“கன்றுதன் பயமுலை மாந்த முன்றில்
தினைபிடி யுண்ணும் பெருங்கல் நாட
கெட்டிடத் துவந்த உதவி கட்டில்

---

1. மலையில் ஒழுகும் அருவிநீராகிய கருப்பொருள். சூல்பேணாது பொய்த்த தலைவனது கொடுமையினைப் புலப்படுத்தற்கு உபகாரப்படும் நிலையில் அமைந்தது, மேற்குறித்த பொருட்புறத்ததாகிய இறைச்சிப்பொருளாகும். இவ்வாறு கருப் பொருள் மற்றொரு குறிப்புப் பொருளையுணர்தற்கு உபகாரப்படும் அவ்வளவில் அமைந்து விடாது அக்கருப்பொருளினுள்ளேயே தோன்றும் இறைச்சிப்பொருளும் உள்ளன. அஃது உள்ளுறையுவமத்தின் பகுதியிலே அடங்குமாறுபோன்று நடக்கும் நிலையினைப் பகுத்துணரும் நுண்ணறிவுடையார்க்கு இங்ஙனம் கருப்பொருளினுள்ளே கருதியுணரப்படும் இறைச்சியும், கருப்பொருள் நிகழ்ச்சியினையே உவமையாகக் கொண்டுவரும் உள்ளுறையுவமமும் தம்முள் வேறாதல் நன்கு புலனாம் என்பது இந்நூற்பாவுக்கு நச்சினார்க்கினியர் கொண்ட பொருளாகும்.

வீறுபெற்று மறந்த மன்னன் போல
நன்றி மறந்தமையா யாயின் மென்சீர்க்
கலிமயிற் கலாவத் தன்னவிவள்
ஒலிமென் கூந்தல் உரியவாம் நினக்கே.'' (குறுந் 225)

இதனுள் ''தான் கெட்டவிடத்து உதவின உதவியை அரச வுரிமையெய்திய மன்னன் மறந்தாற்போல நீ இரந்து துயருற்ற காலத்து யான் தலைவியை நின்னோடு கூட்டிய செய்ந்நன்றியை மறவாது இன்று நீ வரைந்துகொள்வையாயின் இவள் கூந்தல் நினக்குரிய'' வென்றவழி உவமையும் பொருளும் ஒத்து முடிந்தமையின் முன்னின்ற நாடவென்பது உள்ளுறையுவம மன்றாய் இறைச்சியாம். என்னை? தன் கன்றிற்குப் பயன்பட்டுப் பிறர்க்கு உயிரைக்கொடுக்கின்ற தினையைத் தான் உண்டு அழிவுசெய்கின்றாற்போல, நீ நின் கருமஞ் சிதையாமற் பார்த்து எமக்குயிராகிய இவளைத் துயருறுத்தி எம்மை இறந்துபடுவித்தல் ஆகாதென்று உவமையெய்திற்றேனும். பின்னர் நின்ற பொருளோடியையாது இவ்வுவமம் உள்ளுறையுற்றுப் பொருள்பயவாது இறைச்சியாகிய நாடென்பதனுள்ளே வேறோர் பொருள் தோற்றுவித்து நின்றதேயாமாதலின் முலைமாந்த என்றது தன் கருமஞ் சிதையாமற் பார்த்தென்னுந் துணையன்றி உள்ளுறையுவமப் பொருளை முற்ற உணர்த்தாமை யுணர்க.[1]

''வேங்கை தொலைத்த வெறிபொறி வாரணத்
தேந்து மருப்பின் இனவண் டிமிர்பூதுஞ்
சாந்த மரத்தின் இயன்ற உலக்கையால்
ஐவன வெண்ணெல் அறைபுரலுட் பெய்திருவாம்
ஐயனை யேத்துவாம் போல அணிபெற்ற
மைபடு சென்னிப் பயமலை நாடனைத்
தையலாய் பாடுவாம் நாம்.'' (கலி. 43)

---

1. வரைவிடைவைத்துப்பிரியும் தலைவனைநோக்கித் தோழிகூறுவதாக அமைந்தது 225—ஆம் குறுந்தொகைப் பாடல், இதன்கண் 'கன்றுதன் பயமுலை மாந்த முன்றில்தினை பிடியுண்ணும் பெருங்கல் நாட'' 'பெண்யானை தன் கன்று தன்முலையிற்பாலுண்ணத் தான் மனைமுற்றத்தில் உலரவைத்துள்ள தினையயுண்ணும் நாட்டினையுடையவனே' எனத் தலைவனை முன்னிலைப்படுதவதாய் அவனது நாட்டுக்கு அடைமொழியாய் வந்த கருப்பொருளாகும், இதன்கண் ''பெண்யானை தன்கன்றிற்குப் பயன்பட்டுப் பாலைச் சுரந்துகொண்டு பிறர்க்கு உயிரைக் கொடுக்கிற தினையைத் தான் உண்டு அழிவு செய்கின்றாற்போல' தலைவனாகிய நீ நினது கருமஞ்சிதையாமற் பார்த்துக்கொண்டு எமக்கு உயிர் போன்றவளாகிய தலைவியைத் துயருறுத்தி எம்மை இறந்துபடுமாறு செய்தல் ஆகாது'' என

இதனுட் புலவுநாறியும் பூநாறியுந் தீதும் நன்றுமாகிய இறைச்சியாகிய உலக்கைகளால் தலைவனைப் பாடும் பாட்டோடே கலந்து கூறத்தகாத தெய்வத்தையும் பாடுவாமென்னும் பொருள் பயப்பச் செய்த இறைச்சியிற்பொருளே பயந்தவாறும் இரண் டுலக்கையானும் பயன்கொண்டாற்போல் ஐயன்பேர் பாடு தலாற் பயன்கொள்ளாமையின் உள்ளுறையுவமமன்மையுங் காண்க. உள்ளுறையுவம மாயின்,[1]

''தன்பார்ப்புத் தின்னும் அன்பின் முதலையொடு
வெண்பூம் பொய்கைத்து அவனூ ரென்ப'' (ஐங்குறு. 41)

என்றாற்போலத் தலைவன்கொடுமையுந் தலைவி பேதைமையும் உடனுவமங் கொள்ளநிற்கும்.[2] இதுபற்றித் 'தெரியுமோர்க்கே' யென்றார் உம்மை இறந்ததுதழீஇயிற்று. (௩௬)

---

உள்ளுறையுவமங்கொள்ளலாமாயினும், இவ்வாறு உய்த்துணர்ந்து கூறும் உள்ளு-றைப்பொருள் இப்பாடலிற் பின்னர்க் கூறப்படும் பொருளொடு தொடர்ந்து முடியாது, 'கன்றுதன் பயமுலைமாந்த முன்றில் தினைபிடியுண்ணும் பெருங்கல்நாட'' என்ற அளவிலே யமைந்து தலைவனது கொடுமையினைப்புலப் படுத்தும் குறிப்பளவில் நின்று விடுதலால் இஃது உள்ளுறையுவமையாகாது இறைச்சியிற் பிறக்கும் குறிப்புப் பொருளாயிற்று என்பதாம். இதன்கண் 'கன்று தன் முலைமாந்த' என்ற தொடர், 'பிடிதன் கன்று பாலுண்ண முலைதந்தாற் போன்று தலைவனும் தன் கண் பிறர் பயன்கொள்ளச் செயற்பட்டான்' என உள்ளுறையுவமம் கொள்ளுதற்கு இடனின்றி, 'தலைவன் தன் கருமஞ்சிதையாமற் பார்த்துக் கொண்டான், என்னும் குறிப்பளவிலேயே நின்று உள்ளுறையுவமப்பொருளை முற்ற உணர்த்தாமை காணலாம்.

1. வெளிப்படச் சொல்லப்பட்ட கருப்பொருள் நிகழ்ச்சிகளை உவமையாகக் கொண்டு அவற்றின் வாயிலாக மறைத்துக் கூறப்பட்ட பொருளையுய்த்துணரும்படி யமைவதே உள்ளுறையுவமமாகும். ஆகவே கருப்பொருள்களிற் கூறப்படும் ஒவ் வொரு நிகழ்ச்சியும் உள்ளுறுத்திக் கூறப்பட்ட உவமேயப்பொருளை யுய்த்துணர் தற்குரிய உவமக்குறிப்புக்களாகப் பயன்படும் நிலையில் அமைதல் வேண்டும். இக் கலித்தொகையில் புலால் மணம் நாறும் யானைத் தந்தமும் பூவின் நறுமணம் வீசும் சந்தனமும் ஆகிய இருவகையுலக்கைகளும் முறையே தலைவனைப் பற்றிய பாடற்பொருள்வகையாகிய தீதும் நன்றும் குறித்தல் உள்ளுறைக்கு ஏற்றதே. ஆயினும் தாம் தம்முடைய பாடற்குரிய பொருளாகக் கொண்ட தலைவனைப் போற்றும் பாட்டுடன் கலந்து இவ்விடத்திற் பாடுதற்குரிய பொருளல்லாத தெய்வத் தையும் பாடும் இப்பாடலில் நன்றுந்தீதுமாகிய பயனைத்தாம் கொண்டாற்போன்று தெய்வத்தைப் பாடுதலாற் பயன்கொண்டகுறிப்பு இடம் பெற இஃது உள்ளுறை யுவமமாகாது இறைச்சியிற் பிறக்கும் குறிப்புப்பொருளேயாயிற்று. உள்ளுறையுவம மாயின் கருப்பொருள்களின் நிகழ்ச்சிகளின் ஒவ்வொரு கூறும் தாம் மறைத்துக்

ஆய்வுரை :

இஃது இறைச்சிக்கு எய்திபதன் மேற் சிறப்புவிதி கூறுகின்றது.

(இ - ள்) உரிப்பொருட்புறத்ததாய்வரும் கருப்பொருள் நிகழ்ச்சியாகிய இறைச்சியினுள்ளே தோன்றும் பிறிதோர் குறிப்புப் பொருள் அமைவனவும் உள. அங்ஙனம் கூறப்படும் பொருட் கூறுபாட்டோடும் இயையும் பகுதியினை ஆராய்ந்துணரவல்லார்க்கு (அப்பொருள் இனிது புலனாம்) எ-று.

எனவே முற்கூறியவாறு உரிப்பொருட்புறத்தாகித் தோன்றும் கருப்பொருள் நிகழ்ச்சியாகிய இறைச்சியும் அவ்விறைச்சியினுள்ளே தோன்றும் பிறிதொரு குறிப்பும் என இறைச்சியினாற் சுட்டப்படும் பொருள் இருவகைப்படும் என்றாராயிற்று. இறைச்சியிற் பிறக்கும் குறிப்புப் பொருளுக்கும உள்ளுறையுவமையால் உணர்த்தப்படும் உள்ளுறைப்பொருளுக்கும் இடையேயமைந்த நுண்ணிய வேறுபாட்டினையுணர்ந்து இஃது இறைச்சி, இஃது உள்ளுறையுவமை எனப் பிரித்துணர்தல் மேற்கூறும் உள்ளுறை வகை இயலும் பக்கத்தினைக் கூறுபடத் தெளிந்துணர்ந்தார்க்கின்றி ஏனையோர்க்கு இனிது விளங்காது என்பார், 'திறத்தியல் மருங்கின் தெளியுமோர்க்கே' என்றார் தொல்காப்பியனார்.

---

கூறும் பொருள்களைச் சுட்டிய உவமப்பகுதியாய் நின்று அவற்றோடு ஒத்த பொருள்களை யுய்த்துணர்தற்குத் துணை செய்தல் வேண்டும்.

2. 'தான் ஈன்ற பார்ப்பினையே தின்னும் அன்பில்லாத முதலைகளோடு வெண்ணிறப் பூவினையும் ஒருங்கே யுடைய பொய்கையினையுடையது அத்தலைவனது ஊர்' என்னும் பொருளுடைய ஐங்குறுநூற்றுப் பாடல், பொய்கையில் வாழும் அன்பில்லாத முதலையின் செய்கை தலைவனது கொடுமைக்கும் பொய்கையிலுள்ள வெண்பூ தலைவனோடு உடன்பழகியும் அவனது கொடுமையினையுணராத வெண்மையறிவினளாகிய தலைவியின் பேதைமைக்கும் ஒப்ப உவமங் கொள்ளும் நிலையில் அமைந்தமையால் உள்ளுறையுவமமாயிற்று. இவ்வாறு வரும் உள்ளுறையுவமத்திற்கும் மேற்குறித்தவாறு இறைச்சியிற் பிறக்கும் பொருளுக்கும் இடையேயமைந்த நுண்ணிதாகிய வேறுபாடுணர்ந்து இஃது உள்ளுறையுவமம், இது வேறொருபொருள் பயந்து நின்ற இறைச்சி எனப் பகுத்துணரவல்லார்க்கே இறைச்சியிற் பிறக்கும் பொருள் இனிது புலனாம் என்பார். 'திறத்தியல் மருங்கின் தெரியுமோர்க்கே' என்றார் தொல்காப்பியனார். 'இறைச்சியிற் பிறக்கும் பொருளும்' என்புழி உம்மை முன்னர்க்குறித்த பொருட்புறத்ததாகிய இறைச்சிப் பொருளேயன்றிக் கருப்பொருளினுள்ளே தோன்றும் பொருளும் உள' எனப்பொருள் தந்து நிற்றலின் இறந்தது தழீஇய எச்சவும்மையாகும்.

உ௨எ. அன்புறு தகுவன இறைச்சியிற் சுட்டலும்
வன்புறை யாகும் வருந்திய பொழுதே.

**இளம்பூரணம் :**

**என்பது சூத்திரம்.**

**என் — எனின்.** இது இறைச்சிப்பொருளாற் படுவதோர் பொருள் உணர்த்திற்று.

(இ- ள்.) அன்புறுதற்குத் தகுவன இறைச்சிப் பொருட்கண் சுட்டுதலும் வற்புறுத்தலாம் என்றவாறு. உம்மை இறந்தது தழீஇயிற்று.[1]

"அடிதாங்கும் அளவின்றி அழலன்ன வெம்மையாற்
கடியவே கனங்குழாஅய் காடென்றார் அக்காட்டுள்
துடியடிக் கயந்தலை கலக்கிய சின்னீரைப்
பிடியூட்டிப் பின்னுண்ணுங் களிறெனவும் உரைத்தனரே."
(கலி. ௧௧)

என்றது வற்புறுத்தற் குறிப்பு. (௩௬)

**நச்சினார்க்கினியம் :**

இஃது, இறைச்சி முற்கூறியவற்றின் வேறுபட வருமென்கின்றது.

(இ—ள்.) வருந்திய பொழுதே - பிரிவாற்றாத காலத்து; இறைச்சியுள் அன்புறு தகுந சுட்டலும் - தோழி கருப்பொருள்களுள் தலைவன் அன்புசெய்தற்குத் தகுவனவற்றைக் கருதிக் கூறலும்; வன்புறை ஆகும்-வன்புறுத்தலாகும் (எ-று.)

"நசைபெரி துடையர் நல்கலும் நல்குவர்
பிடிபசி களைஇய பெருங்கை வேழம்
மென்சினை யாஅம் பொளிக்கும்
அன்பின தோழியவர் சென்ற வாறே." (குறுந். 37)

1. இறைச்சியிற் பிறிதொரு பொருள்பயப்பக் கூறுதலேயன்றிப் பிரிவால் வருந்திய நிலைமைக்கண் அன்புறுதகுந சுட்டலும் உண்டு என்றமையால் 'சுட்டலும்' என்புழி 'உம்மை இறந்ததுதழீஇயிற்று' என்றார்.

இதனுள் முன்பே நெஞ்சகத்தன்புடையார் அதன் மேலே களிறு தன் பிடியின் பெரும்பசி களைதற்கு மென்றோலையுடைய ஆச்சாவைப் பிளந்து அந் நாரைப் பொளித்தூட்டும் அன்பினை யுடைய அவர் சென்ற ஆறதனைக் காண்பர்காண் என்று அன் புறுதகுந கூறிப் பிரிவாற்றாதவளை வற்புறுத்தவாறு காண்க. நம்மேல் இயற்கையாக அன்பிலனென்று ஆற்றாளாவளென்று கருதாது இவளை ஆற்றுவித்தற் பொருட்டு இவ்வாறு கூறலின் வழுவாயமைந்தது.

''அரிதாய வறன்'' (கலி.11) என்பது தோழி கூற்றன்மை உணர்க.[1] (௩எ)

**ஆய்வுரை :**

இதுவும் அது.

(இ - ள்) காதலர் இருவரிடையே அன்பு மீதூர்தற்குக் காரணமாகிய செயல்களை இறைச்சிப்பொருளிற் சுட்டிக் கூறு தலும் தலைமகள் பரிவால் வருந்திய நிலைமைக்கண் வற்புறுத்துங் குறிப்பினதாகும்.

தலைவன் வினைவயிற் பிரிந்தானாகத் தலைமகள் பிரிவாற் றாது வருந்தியபொழுது அவளை ஆற்றுவிக்குங் கடமையுடைய ளாகிய தோழி தலைமகன் செல்லும் வழியிடையே விலங்கு பறவை முதலிய கருப்பொருள் தத்தம் துணையுடன் சாதற்கேண்மையுடையனவாக அன்பு மீதூரும் கருப்பொருள் நிகழ்ச்சியினை யெடுத்துக் கூறுதல் பிரிந்து சென்ற தலைவர் அந்நிகழ்ச்சியைக் கண்டு விரைந்து வருவார் எனத் தலைவியை வற்புறுத்துங் குறிப் பினையுடையதாகும் என்பதாம்.

1. இந்நூற்பாவுக்கு 'அரிதாயவறன்' என்னும் கலியிலுள்ள 'அடிதாங்குமலி வின்றி' என்ற தாழிசையை உதாரணமாக எடுத்துக்காட்டினார் இளம்பூரணர். இக்கலித்தொகை தலைவியின் கூற்றாகும். தலைவனது, பிரிவால் தலைவி வருந்தின பொழுது அன்புறுதகுந இறைச்சியுட் சுட்டித் தலைவர் விரைவில் வருவார் என வற்புறுத்தற்குரியவள் தோழியேயாதலின் தோழிகூற்றினையே இங்கு உதாரணமாகக் காட்டுதல் வேண்டும் என்பது நச்சினார்க்கினியர் கருத்தாதலின், இளம்பூரணர் காட்டிய ''அரிதாயவறன்'' (கலி-11) என்பது தோழி கூற்றன்மை யுணர்க'' எனக்குறித்தார்.

உ௨அ. செய்பொரு ளச்சமும் வினைவயிற் பிரிவும்
மெய்பெற உணர்த்துங்[1] கிழவிபா ராட்டே.

**இளம்பூரணம் :**

என்—எனின். இது தலைமகட்குரியதோர் இயல்புணர்த்து-தல் நுதலிற்று.[2]

(இ ள்.) தலைமகன் பொருள்வயிற் பிரியு மிடத்து ஆறின்னாமையா னுளதாகிய அச்சமும் வினைவயிற் பிரியுங் காலத்தினுந் தலைவியைப் பாராட்டிப் பிரிதலினால், அப்பாராட்டினான் மெய்பெறவுணரும் என்றவாறு.

"நெஞ்சு நடுக்குறக் கேட்டுங் கடுத்துந்தாம்
அஞ்சியது ஆங்கே அணங்காகும் என்னுஞ் சொல்
இன்றீங் கிளவியாய் வாய்மன்ற நின்கேள்
புதுவது பன்னாளும் பாராட்ட யானும்
இதுவொன் றுடைத்தென எண்ணி." (கலி. உ௪)

என்றமையாற் பாராட்டினால் தலைமகள்பிரிவு உணர்ந்தவாறு அறிக. (௩௭)

**நச்சினார்க்கினியம்:**

இது, தலைவன் தலைவியைப் பாராட்டிய வழி வருவதோர் வழுவமைக்கின்றது.

———

1. கிழவி, தன்னைத்தலைமகன் பாராட்டிய பாராட்டினால் செய்பொருளச்சமும் வினைவயிற் பிரிவும் மெய்பெறவுணரும் என இயைத்துரைக்கும் முறையில் இளம்பூரணர் உரை அமைந்திருத்தலால் 'மெய்பெறவுணரும்' என்பதே அவர் கொண்ட பாடமாகும்.

2. தலைமகன் தலைவியைப் பாராட்டிய பாராட்டினால் செய்பொருளச்சமும் வினைவயிற் பிரிவும் கிழவியுணரும்' எனப்பொருள் கொண்டமையால், 'இது தலைமகட்குரியதோர் இயல்புணர்த்துதல் நுதலிற்று' எனக் கருத்துரை வரைந்தார் இளம்பூரணர். செய்பொருள் அச்சமாவது, தலைவன் பொருள்தேடப் பிரியுமிடத்து வழியிடையே நேரும் வருத்தங்களை நினைதலால் தலைவியின் மனத்தே தோன்றும் அச்சம். வினைவயிற் பிரிவாவது, பகைவரைப் போரில் வென்றடக்குதல் குறித்தும் நாடுகாத்தற்பொருட்டும் தலைவன் தலைவியைப் பிரிந்து செல்லுதல்.

(இ - ள்.) கிழவி பாராட்டே — தலைவன் தலைவியைப் பாராட்டிய பாராட்டு ; செய்பொருள் அச்சமும்—யாஞ் செய்யக் கருதிய பொருட்கு இவள் இடையூறாவள்கொலென்று தலைவன் அஞ்சிய அச்சத்தையும் ; வினைவயின் பிரிவும் - தான் பொருள் செய்தற்குப் பிரிகின்றதனையும் ; மெய் பெற உணர்த்தும் - ஒரு தலையாகத் தலைவிக்கு உணர்த்தும் (எ - று.)[1]

அப் பாராட்டுக் கிழவியதாகலிற் கிழவி பாராட்டென்றார்.

''நுண்ணெழின் மாமை'' (கலி. 5) என்பதனுட் கழிபெரு நல்கலால்[2] தலைவன் செய்பொருட்கஞ்சியவாறும் அவன் பிரியக் கருதியதூஉந் தலைவியுணர்ந்தாள் அப் பாராட்டினாலென்றுணர்க.

அன்பானன்றிப் பொருள் காரணத்தாற் பாராட்டினமை யானும் அதனைச் செவ்வனங் கொள்ளாது[3] பிறழக் கோடலானும்[4] இருவர்க்கும் வழுவாமென்றமைத்தார். (௩அ)

**ஆய்வுரை :**

இது, மேற்குறித்த இறைச்சிப்பொருள் போன்று குறிப்பிற் பொருள்புலப்படுத்தும் பிறிதுமோர் நிகழ்ச்சியும் உண்டென் கின்றது.

(இ - ள்) தலைமகள் தன்னைத் தலைவன் பாராட்டிய பாராட்டினால் தான் பிரிந்துசென்று செய்யக்கருதிய பொருளுக் குத் தலைமகள் இடையூறாவாள்கொல்லோ எனத் தலைமகன் அஞ்சிய அச்சத்தினையும் தலைமகன் வினைவயிற் பிரிந்துசெல்ல விருப்பதனையும் குறிப்பினால் உணர்வாள் எ—று.

---

1. கிழவிபாராட்டு, செய்பொருளச்சமும் வினைவயிற் பிரிவும் மெய்பெற வுணர்த்தும். கிழவி—தலைவி. கிழவிபாராட்டு—தலைவியைத் தலைவன் பாராட்டிய பாராட்டுரை. செய்பொருள் அச்சம் என்றது, தலைவன் தான் பிரிந்துசென்று பொருளீட்டுதற்குத் தலைவி தடை செய்வாளோ எனத்தன் உள்ளத்திற்கொண்ட அச்சமாகும். மெய்பெறவுணர்த்தலாவது தெளிவாகப் புலப்படுத்தல்.

2. கழிபெருநல்கல்—தலைவியின்பால் தலைவன் செய்த அளவின் மிக்க தலையளி.

3. செவ்வனங் கொள்ளாமை—யாவது இயல்பாக நிகழ்ந்த பாராட்டெனக் கொள்ளாமை.

4. பிறழக்கோடல்—மாறுபடக்கொள்ளுதல்.

கிழவி (தலைவனது) பாராட்டினால் செய்பொருளச்சமும் வினைவயிற்பிரிவும் உணரும் என இயையும்.

இனி, 'மெய்பெறவுணர்த்தும்' எனப்பாடங்கொண்டு, இனி, 'கிழவி பாராட்டு, என்பதனை எழுவாயாக்கி, 'கிழவிபாராட்டு செய்பொருளச்சத்தினையும் வினைவயிற்பிரிவினையும் மெய்பெறவுணர்த்தும்' எனப் பொருள்வரைந்தார் நச்சினார்க்கினியர். கிழவிபாராட்டு—தலைவன் தலைவியைப் பாராட்டிய பாராட்டு.

தலைவன் தலைமகளைப் பாராட்டியபாராட்டு அவன் உள்ளத்தேயுள்ள அச்சத்தினையும் அவனது பிரிவினையும் தலைமகள் உணரும்படிசெய்தமையின் இத்தகைய பாராட்டும் இறைச்சி போன்று குறிப்புப் பொருளுடையதாதல் காணலாம்.

௨௨௬. கற்புவழிப் பட்டவள் பரத்தைமை ஏத்தினும்
உள்ளத் தூட லுண்டென மொழிப

**இளம்பூரணம் :**

**என்—எனின். இதுவும் அது.** [1]

**(இ—ள்) கற்புக் காரணமாகத் தலைமகனது பரத்தைமைக் குடன்பட்டாளே யாயினும், உள்ளத்தின்கண் ஊடல் நிகழும் என்றவாறு.** [2] (௩௮)

**நச்சினார்க்கினியம் :**

**இது, தலைவிக்கட் டோன்றியதோர் வழுவமைக்கின்றது.**

**(இ—ள்.) கற்புவழிப்பட்டவள் - கற்பின் வழிநின்ற தலைவி; பரத்தை ஏத்தினும் - பரத்தையைப் புகழ்ந்து கூறினாளாயினும்;**

---

1. இதுவும் தலைமகட்குரியதோர் இயல்புணர்த்துதல் நுதலிற்று என்பதாம்.

2. தற்கொண்டானாகிய கணவனைப் பேணிப் போற்றுதலாகிய கற்பொழுக்கம் காரணமாகத் தலைவி தலைமகனது புறத்தொழுக்கிற்கு உடன்பட்டாளாயினும் தலைவனது பரத்தைமை காரணமாகத் தலைவியின் உள்ளத்திலே ஊடல் நிகழ்தல் உறுதி என்பதாம்.

உள்ளத்து ஊடல் உண்டென மொழிப - உள்ளத்துள்ளே ஊடின தன்மை உண்டென்று கூறுவர் புலவர் (எ-று.)[1]

பரத்தையை ஏத்தவே தலைவன்கட் காதலின்மை காட்டி வழுவாயிற்றேனும் உள்ளத்தூட லுண்மையின் அமைக்க வென்றார்.

> ''நாணி நின்றோள் நிலைகண் டியானும்
> பேணினென் அல்லனோ மகிழ்ந வானத்
> தணங்கருங் கடவுளன் னோள்நின்
> மகன்தா யாதல் புரைவதாங் கெனவே'' (அகம். 16)

என வரும்.

'ஏத்தினும்' என்ற உம்மையால்[2] ஏத்தாமற் கூறும்பொழு தெல்லாம் மாறுபடக் கூறலுளதென்பது பெற்றாம்.

> ''என்னொடு புரையுந ளல்லள்
> தன்னொடு புரையுநர்த் தானறியுநளே'' (பதிற்றுப்.)

எனவரும். (கூக)

ஆய்வுரை :

இதுவும் குறிப்புப்பொருளிற்பயிலும் ஓர் உரைத்திறம் உணர்த்துகின்றது.

(இ—ள்) கற்புக்கடம் பூண்ட தலைமகள் பரத்தையைப் புகழ்ந்து பாராட்டினாளாயினும் அவள் மனத்தகத்தே தலைவனோடு ஊடினதன்மையுண்டு என்பர் நுண்ணுணர்வினோர் எ-று

'ஏத்தினும்' என்புழி உம்மை எதிர்மறை. பரத்தையை இகழ்தற்கு உரிய தலைமகள் அவளையிகழாது புகழ்ந்தாலும் அப் புகழ்ச்சியுரை அவள் தன் மனத்தகத்தே கொண்ட ஊடற்குறிப்பினை நன்கு புலப்படுத்தும் என்பதாம்.

---

1. தலைவன்பாற் குற்றங்காணாது அவனது சொல்வழியடங்கி நடக்குந் தலைமகள் தன் கணவனாற் காதலிக்கப்பெற்ற பரத்தையைப் பாராட்டிக் கூறினாளாயினும் கணவனது பரத்தமை காரணமாக அவளது உள்ளத்துள்ளே ஊடின தன்மை உறுதியாக உண்டு என்பர் உளநூற்புலவர்.

2. 'ஏத்தினும்' என்புழி உம்மையால் ஏத்தாமையே பெரும்பான்மை என்பது பெற்றாம்.

உ௩0 கிழவோள் பிறள்குணம் இவையெனக் கூறிக்
கிழவோன் குறிப்பினை உணர்தற்கும் உரியள்.

**இளம்பூரணம் :**

என்—எனின். இது தலைமகட் குரியதோர் இலக்கண முணர்த்துதல் நுதலிற்று.

(இ—ள்.) தலைவி மற்றொருத்தி குணம் இத்தன்மையள் எனச்சொல்லித் தலைமகன் குறிப்பினை யறிதற்கு முரியள் என்றவாறு.

இது கற்பியலுட் கூறியதற் கிலக்கணம்.[1]

"கண்டிகும் அல்லமோ கொண்கநின் கேளே
ஒள்ளிழை உயர்மணல் வீழ்ந்தென
வெள்ளாங் குருகை வினவு வோளே." (ஐங்குறு. கஉஉ)

என வரும். பிறவு மன்ன. (௩௬)

**நச்சினார்க்கினியம் :**

இஃது, எய்தியது ஒருமருங்கு மறுக்கின்றது ; உள்ளத் தூடலின்றியும் பிறளொருத்தியைத் தலைவி புகழுமென்றலின்.[2]

(இ—ள்.) கிழவோள் பிறள் குணம் இவையெனக் கூறி- தலைவி வேறொரு தலைவியுடைய குணங்கள் இத் தன்மைய வென்று தலைவற்குக் கூறி ; கிழவோன் குறிப்பினை அறிதற்கும் உரியள்- அவள் மாட்டு இவன் எத்தன்மையனா யிருக்கின்றானென்று தலைவன் குறிப்பினை உணர்தற்குமுரியள் (எ—று.)

பரத்தை யென்னாது 'பிறள்' என்றதனால் தலைவியே யாயிற்று ; அன்றிப் பரத்தையாயின் ஊடலின்மை அறனன்

---

1. இது, தலைவி கூற்று நிகழும் இடங்களைத் தொகுத்துணர்த்தும்—கற்பியல் ௬—ஆம் சூத்திரத்தினுட் கூறப்பட்ட தலைவியின் கூற்றுவகைகளுள் ஒன்றற்குரிய இலக்கணம் கூறுவது என்பர் இளம்பூரணர்.

2. 'பிறள்' என்றது தன்னையொத்த மற்றொரு தலைவியை. விதுப்புறுதலாவது வேட்கை மிகுதியால் ஒன்றனையறிதற்கு உள்ளம் விரைதல்.

றாகலின் உள்ளத்தூடல் நிகழ்பவை வேண்டும். தோழி கூறுங்கால் தலைவியரைக் கூறப்பெறாளென்பதூஉம் பரத்தையரைக் கூறின் அவர்க்கு முதுக்குறைமை கூறிக் கூறுவளென்பதூஉங் கொள்க.

'கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே
ஒள்ளிழை உயர்மணல் வீழ்ந்தென
வெள்ளாங் குருகை வினவு வோளே.''

(ஐங்குறு. 122) இது, தலைவன் வரையக் கருதினாளோர் தலைவியை இனையளெனக் கூறி அவள்மாட்டு இவன் எத்தன்மையனென்று விதுப்புற்றுக் கூறியது. இது தலைவன் கூற உணராது தான் வேறொன்று கூறி அவன் குறிப்பு அறியக் கருதுதலின் வழுவாயமைந்தது. இது கைக்கிளைப்பொருட்கண் வழுவமைக்கின்றது.[1]

ஆய்வுரை :

இதுவும் ஓர் உரையாடலில் தோன்றும் குறிப்புணர்த்துகின்றது.

(இ - ள்) தலைவி, தன்தலைவனால் விரும்பப்பெற்றவள் எனத் தான் ஐயுற்ற மற்றொருத்தியைக் குறித்து 'இவள் இத்தன்மையள்' எனத் தலைவனுக்கு எடுத்துரைக்கு முகமாக 'அவளிடத்தில் இவன் எத்தன்மையனாகவுள்ளான்' எனத் தலைவனது உள்ளக்குறிப்பினைத் தான் உணர்தற்கும் உரியள் எ—று.

௨௩௧. தம்முறு விழுமம் பரத்தையர் கூறினும்
மெய்ம்மை யாக அவர்வயி னுணர்ந்தும்
தலைத்தாட் கழறல்தம் எதிர்ப்பொழு தின்றே
மலிதலும் ஊடலும் அவையலங் கடையே

இளம்பூரணம் :

என்—எனின். இது தலைமகட்குரியதோர் மரபுணர்த்திற்று.

---

1. கண்டிடுமல்லமோ' (ஐங்குறு. 122) என்ற பாடல் காமஞ்சாலா இளையோளைத் தலைவன் விரும்பிய குறிப்பினைப் புலப்படுத்தலின் இது கைக்கிளைப் பொருண்மைக்கண் வந்த வழுவமைதியாயிற்று.

(இ—ள்.) பரத்தையர் தாமுற்ற துன்பத்தினைத் தலைமகட்குக் கூறியவழியும் அவரிடத்துத் துன்பத்தை மெய்ம்மையாக உணர்ந்துவைத்துந் தலைமகன்மாட்டுக் கழறுதல் தலைவன் எதிர்ப்பட்டபொழுது இல்லை, மகிழ்ச்சியும் புலவியும் அல்லாத காலத்து என்றவாறு.

கூறினும் என்ற உம்மை எதிர்மறை. கூறாமை பெரும்பான்மை. அதனை ஐயப்படாது துணிந்தலான் மெய்ம்மையாக வென்றார். அதனைத் தலைமகன் வந்தவழிக் கூறுவாளாயின் தனக்குப் புணர்ச்சியிற் காதலில்லையாம். சொல்லாளாயின் அவள் கூறிய வதனாற் பயனில்லையாம். அதனைக் கலவியிறுதியினும் புலவியினும் கூறப்பெறும் என்றவாறு.[1]

''நின்னணங் குற்றவர் நீசெய்யும் கொடுமைகள்
என்னுழை வந்துநொந் துரையாமற் பெறுகற்பின்.''
(கலி. எஎ)

எனப் புலவியிற் கூறியவாறு காண்க.

கலவியிறுதியிற் கூறுதல் வந்தவழிக் காண்க. (௬௰)

———

1. தலைவனால் பரத்தையர் தாம் உற்ற வருத்தத்தைத் தலைவியிடம் வந்து கூறுதல் அரிது என்பார், 'தம்முறுவிழுமம் பரத்தையர் கூறினும்' என்றார். 'கூறினும்' என்புழி உம்மை எதிர்மறையாதலாற் கூறாமையே பெரும்பான்மை என்பதாம். அங்ஙனம் பரத்தையர்தன்கண்வந்து தலைவனது குற்றங்கூறினாராயி-னும் அதனை ஐயப்படாது மெய்ம்மையாகத் துணிந்த வழியே அதுபற்றித் தலைவனிடம் தலைவி வினவுதல் வேண்டும் என்பார் 'மெய்ம்மையாக அவர்வயின் உணர்ந்தும்' என்றார். பரத்தையர் தலைவனைப் பற்றித் தன்கட்கூறிய குற்றத்தினைத் தலைவன் வந்த அப்பொழுதே தலைவி கூறுவாளாயின் தலைவனைக் கூடி மகிழ்தலில் அவட்குக் காதல் இல்லை என்ற நிலையேற்படும். பரத்தையர் கூறியதனைத் தலைவனிடம் சொல்லாமலே விட்டு விடுவாளாயின் பரத்தையர் தாமுற்ற துன்பத்தைத் தலைவியிடம் சொன்னதனால் ஒரு பயனும் இல்லையாம்., அன்றியும் தன்பாற்குறையிரந்தாரது துன்பத்தை நீக்கும் அருட்பண்பில்லாதவள் தலைவி என்னும் இகழ்ச்சியுமுளதாகும். எனவே தலைவி பரத்தையர் தலைவனைக் குறித்துத் தன்பால் வந்து கூறிய துயரத்தினைத் தான் தலைவனொடு கூடி மகிழும் புணர்ச்சியின் இறுதியினும் தலைவனொடு தானுற்ற புலவிக்காலத்தும் கூறப்பெறும் என்பது இச்சூத்திரத்தின் பயனாகும் என இளம்பூரணர் தரும் இவ்விளக்கம் தலைமக்களாகிய காதலரிருவரது வாழ்க்கையில் அமைதற்குரிய உள்ளப்பண்பினை நன்கு புலப்படுத்துதல் உணர்ந்து மகிழத்தகுவதாகும்.

**நச்சினார்க்கினியம் :**

இது, பரத்தையர்க்குந் தலைவிக்குந் தலைவற்கும் படுவதோர் வழுவமைக்கின்றது.

(இ - ள்.) தம்முறு விழுமம் பரத்தையர் கூறினும் - தலைவனால் தாம் உற்ற வருத்தத்தைத் தலைவிக்குப் பரத்தையர் கூறினும் ஏனைத் தலைவியர் கூறினும்; அவர்வயின் மெய்ம்மையாக உணர்ந்து - அவர் கூறியவாற்றானே அவ் வருத்தத்தை அவரிடத்து உண்மையாக உணர்ந்து; தலைத்தாட் கழறல் - தலைவன் முன்நின்று கழறுங் கழற்றுரை; தம் எதிர்ப்பொழுது இன்று - தம்மைப் பரத்தையர் எதிர்ப்பட்ட பொழுதின்கண் இல்லை; மலிதலும் - அவர் துயருற நின்றுழிக் கவலாது நீங்கினானென மகிழ்தலும்; ஊடலும் - அவன் பிரிவிற்கு இவர் இரங்கினாரென்ற காரணத்தான் ஊடுதலும்; அவை அலங்கடை - அவ்விரண்டும் நிகழாவிடத்து (எ—று.)

என்பது வெறுத்த உள்ளத்தளாமென்பது கருத்து. எனவே, மலிதலும் ஊடலும் நிகழுமிடத்தாயின் தலைத்தாட் கழறுமென்பது பெறுதும், தலைத்தாள், தகுதிபற்றிய வழக்கு.[1]

> ''பொன்னெனப் பசந்தகண் போதெழில் நலஞ்செலத்
> தொன்னல மிழந்தகண் துயில்பெறல் வேண்டேன்மன்
> நின்னணங் குற்றவர் நீசெய்யுங் கொடுமைகள்
> என்னுழை வந்துநொந் துரையாமை பெறுகற்பின்.'' (கலி.77)

இது, பரத்தையர் முன்னரன்மையின் மலிதலும் ஊடலும் நிகழ்ந்து தலைத்தாட் கழறியது.

கழறாது கூறியது வந்துழிக் காண்க. தம்முறுவிழுமத்தைப் பரத்தை தலைவிக்குக் கூறுதலாற் பரத்தைக்கும், அவர் கூறத் தான் எளிவந்தமையின் தலைவிக்கும், இவரிங்ஙன மொழுகலின் தலைவற்கும் வழுவமைந்தது. உம்மை இறந்தது தழீஇயிற்று. (சக)

1. தலைத்தாள்—தலைவன் முன்னிலை. உயர்ந்தோர் முன்னிலையிற் கூறுதலை அவர்தம் திருவடிக்கு உரைப்பதாகக் கூறுதல் மரபாதலின் தலைத்தாள் தகுதிபற்றிய வழக்கு என்றார். தாட்டலை எனற்பாலது 'தலைத்தாள்' எனமுன் - பின்னாகத் தொக்கு நின்றது இல்முன் எனற்பாலது முன்றில் என மருவி வழங்கினாற் போல்வதோர் மரூஉ முடிபு. கழறல்—இடித்துரைத்தல். தம் எதிர்ப்பொழுது—பரத்தையர் தம்மை எதிர்ப்பட்ட காலத்து. மலிதல்— மகிழ்தல். ஊடல்—பிணங்குதல். கழறல் இன்று என முடியும்.

**ஆய்வுரை :**

இது, மனைவாழ்க்கையில் தலைமகட்குரியதோர் திறம் உணர்த்துகின்றது.

(இ - ள்) தலைவனால் தாம் உற்ற துனபத்தினைப் பரத்தையர் தன்பால் வந்து கூறிய நிலையிலும், தான் அவர்களது துன்பத்தினை உண்மையாகவே உணர்ந்தநிலையிலும் தலைமகள் தலைவனுடன் மகிழ்ச்சியும் புலவியும் ஆகிய காலத்தன்றித் தலைவன் தன்னை எதிர்ப்பட்டபொழுது முன்னிலையில் நின்று இடித்துரைத்தல் இல்லை. எ—று.

தலைவனுடன் தான் அன்பினாற்கலந்து அளவளாவும் மகிழ்ச்சிக்காலத்தில் அம்மகிழ்ச்சியொடு கூட்டித் தலைவன் முறைகளைக்கூறி இடித்துரைத்தலும், தலைவன்பால் தவறு கண்டு தான் புலக்குங்காலத்து அத்தவறுகளோடு பரத்தையர் உற்ற குறைகளையும் ஒருங்கேகூறி இடித்துரைத்தலும் நுண்ணுணர்வுடைய தலைமகளின் இயல்புகளாம் என அறிவுறுத்தும் நிலையில் அமைந்தது இச்சூத்திரமாகும். மகிழ்ச்சியும் புலவியும் ஆகிய இவ்விருநிலையும் அல்லாத ஏனைக்காலங்களில் தலைவனை முன்னின்று கழறுதல், தற்கொண்டாற்பேணித் தகைசான்ற சொற்காக்குந் தலைவியின் கடமைக்கு ஊறுவிளைப்பதாகலின் அங்ஙனம் இடித்துரைத்தல் கூடாதெனத் தொல்காப்பியனார் விலக்கிய திறம் உணர்ந்து மகிழத்தக்கதாகும்.

௨௩௨. பொழுது தலைவைத்த கையறு காலை
இறந்த போலக் கிளக்குங் கிளவி
மடனே வருத்தம் மருட்கை மிகுதியொடு
அவைநாற் பொருட்கண் நிகழும் என்ப.[1]

**இளம்பூரணம் :**

என்—எனின். இது பருவம் வந்துழித் தலைமகட் குரியதோர் வழுக்காத்தலை நுதலிற்று.

(இ - ள்.) பொழுது தலைவைத்தலாவது — யாதானு

---

1. பொழுது—குறித்த பருவகாலம். தலைவைத்தல்—தொடங்குதல், இறத்தல்—கடத்தல். மடன்—அறியாமை. மருட்கை—மயக்கம்.

மொரு பருவத்தைக் குறித்தவழி யப்பருவம் இருதிங்களை யெல்லை யாகவுடைத்தாயினும் அது தோற்றியவழி என்றவாறு.

கையறு காலை என்பது — இது கண்டு செயலற்றகாலை என்றவாறு.

இறந்தபோலக் கிளத்த லாவது — அக்காலந் தோன்றிய பொழுது கழிந்தது போலக் கூறுதல்.

மடனே வருத்தம் மருட்கை மிகுதியொடு அவை நாற்பொருட் கண் நிகழும் என்ப என்பது—அவ்வாறு கூறுதல் அறியாமையான தால் வருத்தத்தானாதல் மயக்கத்தானாதல் அக்காலத்திற் குரிய பொருள் மிகத் தோன்றுதலானாதல் என இந்நான்கு பொருளா னும் நிகழும் என்றவாறு.[1]

சிறுபொழுதாயின் யாமங் கழிவதன் முன்னர்க் கூறுதல்.[2] எனவே, இவ்வாறு வருஞ் செய்யுள் காலம் பிழைத்துக் கூறுகின்ற தல்ல. என்றவாறு.

"பொருகடல் வண்ணன் புனைமார்பில் தார்போல்
திருவில் விலங்கூன்றித் தீம் பெயல் தாழ
வருது மெனமொழிந்தார் வாரார்கொல் வானம்
கருவிருந்து ஆலிக்கும் போழ்து" (கார்நாற். ௧)

இது பருவங்கண்டவழி வாரார்கொல் என்றமையால் இறந்த போலக் கிளந்தவறாயிற்று. பிறவு மன்ன. இதுவு மோர் மரபு வழுவமைத்தல் [3] (௪௧)

---

1. அப்பருவகாலந் தொடங்கிய பொழுதிலேயே முடிவுற்றதாகக் கூறுதல் அறியாமையாலாவது வருத்தத்தாலாவது மயக்கத்தாலாவது அக்காலத்திற்குரிய பொருள்மிகுந்து தோன்றுதலாவது என இந்நான்கு பொருளானும் நிகழும்.

2. இனிப், பொழுது' என்பதற்கு ஒருநாளின் எட்பிரிவாகிய சிறுபொழுது எனக்கொண்டு, 'இறந்தபோலக்கிளத்தல்' என்பதற்கு, 'குறித்தயாமம் கழிவதற்கு முன் அது கழிந்ததாகக் கூறுதல்' எனப் பொருளுரைத்தலும் பொருந்தும் என்ப தாம்.

3. இவ்வாறு கூறுதல் காலமயக்கமாகிய சொல்வழுவன்றெனபதும், தலை மகனது பிரிவினால் செயலற்ற நிலையில் தலைவியாற் கூறப்பட்டுவருதலின் இது மரபு வழுவமைதியாகக் கொள்ளப்படும் என்பதும் இளம்பூரணர் கருத்தாகும்.

நச்சினார்க்கினியம் :

இது 'பின்னர் நான்கும் பெருந்திணை பெறுமே,' (தொல், பொ. 105) என்ற சிறப்புடைப்பெருந்திணையன்றிப்[1] பெருந்திணைக் குறிப்பாய்க் கந்தருவத்துட்பட்டு வழுவிவரும் 'ஏறிய மடற்றிறம்' (தொல். பொ.51) முதலிய நான்கினுள்[2] ஒன்றாய் முன்னர் நிகழ்ந்த கந்தருவம் பின்னர் வழீஇவந்த 'தேறுத லொழிந்த காமத்து மிகுதிறம்'[3] (தொல். பொ. 51) ஆகிய பெருந்திணை வழுவமைக் கின்றது.

ஓதலுந்தூதும் ஒழிந்த பகைவயிற் பிரிவாகிய வாளாணெ திரும் பிரிவும் முடியுடை வேந்தர்க்கும் அவரேவலிற் பிரியும் அரசர்க் கும் இன்றியமையாமையின், அப் பிரிவிற் பிரிகின்றான் 'வன்புறை குறித்தல் தவிர்ச்சி யாகும்' (தொல். பொ. 185) என்பதனாற் கற்புப்போல நீ இவ்வாறொழுகி யான் வருந்துணையும் ஆற்றி யிருவென ஆற்றுவித்துப் பிரிதல் இலக்கணமன்மையின் வாளா பிரியுமன்றே; அங்ஙனம் பிரிந்துழி[4] அவன் கூறிய கூற்றினையே கொண்டு ஆற்றுவிக்குந் தோழிக்கும் ஆற்றுவித்தலரி தாகலின், அவட்கு அன்பின்றி நீங்கினானென்று ஆற்றாமை மிக்கு ஆண்டுப் பெருந்திணைப்பகுதி நிகழுமென்றுணர்க.

1. சிறப்புடைப் பெருந்திணையென்பன வேதத்துட்கூறப்பட்ட எண்வகைமணங் களுள் பிரமம், பிராசாபத்தியம், ஆரிடம், தெய்வம் என்னும் நால்வகை மணங் களுமாகும்.

2. பெருந்திணைக் குறிப்பு ஆவன ஏறியமடற்றிறம், இளமை தீர்திறம், தேறுதலொழிந்த காமத்து மிகுதிறம், மிக்க காமத்து மிடல் என முன்னர் அகத்திணை யியலுட் கூறப்பட்ட நான்குமாகும்.

3. பெருந்திணைக்குறிப்பாகிய இந்நான்கனுள் ஒன்றாகிய தேறுதலொழிந்த காமத்து மிகுதிறம், ஆகிய பெருந்திணை வழு அமைக்கின்றது இச்சூத்திரம் என்பது நச்சினார்க்கினியர் கருத்தாகும்.

4. முன்னர்க் கந்தருவவழக்கத்தோடொத்த அன்பின் ஐந்திணைக்களவொழுக் கம் ஒழுகிய தலைமகன் நாட்டிற்கு இன்றியமையாத பகைவயிற் பிரிந்து செல்ல வேண்டியநிலையேற்பட கற்பிற்போலத் தலைமகளை வற்புறுத்திப் பிரியும் வாய்ப் பின்றித் தோழிக்கு மட்டுமே பிரிவுணர்த்திப் பிரிந்து சென்றானாகத் தோழியும் அவன்கூறிய மொழிகளையே கூறித் தலைமகளை ஆற்றுவிக்கவும் அவளை ஆற்று வித்தலரிதாகையினாலே தோழி தேற்றவும் தேறுநிலையினளாகிய தலைவி, தலை வன் தன்கண் அன்பின்றி நீங்கினான் என்று ஆற்றாமைமிக்குப் பலரும் அறிய அரற்றி வருந்தியநிலைமைக்கண் தேறுதலொழிந்த காமத்து மிகுதிறமாகிய பெருந் திணைக் குறிப்புத் தலைமகள்பால் நிகழும் என்பர் நச்சினார்க்கினியர்.

(இ - ள்.) பொழுது[1] - அந்திக்காலத்தே; கையறு காலை 'புறஞ்செயச் சிதைத்தல்' (தொல். மெய்ப். 18) என்னுஞ் சூத்திரத்தில் அதனின்றூங்கின்று எனக் கூறிய 'கையறவுரைத்த' லென்னும் மெய்ப்பாடெய்தியகாலத்தே; தலைவைத்த - அந்த வாற்றாமையின் இகந்தவாக முடிவிலே வைக்கப்பட்ட மெய்ப்பாடுகள்; மிகுதியோடு மடனே வருத்தம் மருட்கை நற்பொருட்கண் நிகழும் - தன் வனப்புமிகுதியுடனே மடப்பமும் ஆற்றாமையும் வியப்புமாகிய நான்கு பொருட்கண்ணே நடக்கும்; அவை - இறந்தபோலக் கிளக்குங்கிளவி என்ப அங்ஙனம் அவை நடக்கின்ற நான்குபொருளுங் கூற்றுநிகழுங்கால் தன்னைக் கைகடந்தன போலக் கூறும் கூற்றாய் நிகழுமென்று கூறுவர் புலவர் (எ—று.)

தலைவைத்த மெய்ப்பாடாவன ஆறாமவதியினும் ஒப்புத்[2] தோன்றுதற்குரிய மெய்ப்பாடுகளாகிய மன்றத்திருந்த சான்றோரறியத் தன்றுணைவன் பெயரும் பெற்றியும் அவனொடு புணர்ந்தமையுந் தோன்றக் கூறியும் அழுதும் அரற்றியும் பொழுதொடு புலம்பியும் ஞாயிறு முதலியவற்றொடு கூறத்தகாதன கூறலும் பிறவுமாம்.

''புரிவுண்ட புணர்ச்சியுட் புல்லாரா மாத்திரை
அருகுவித் தொருவரை அகற்றலின் தெரிவார்கண்
செயநின்ற பண்ணினுள் செவிசுவை கொள்ளாது
நயநின்ற பொருள்கெடப் புரியறு நரம்பினும்
பயனின்று மன்றம்ம காமம் இவள்மன்னும்
ஒண்ணுதல் ஆயத்தார் ஓராங்குத் திளைப்பினும்
முண்ணுனை தோன்றாமை முறுவல்கொண் டடக்கித்தன்
கண்ணினு முகத்தினு நகுபவள் பெண்ணின்றி

---

1. 'இங்குப் பொழுது' என்றது, அந்திப் பொழுதினை கையறுகாலை—கையாறு என்னும் மெய்ப்பாடு தோன்றியகாலம். தலைவைத்த-(அவ்வாற்றாமையைக் கடந்தனவாக) முடியிலே வைக்கப்பட்ட மெய்ப்பாடுகள்., என்றது களவொழுக்கத்தில் காதலர்பால் நிகழ்தற்குரிய மெய்ப்பாடுகளில் ஆறும் எல்லைக்கண் இறுதியிற் கூறப்பட்ட கையறவுரைத்தல் என்னும் எல்லையையுங்கடந்து நாண் நீங்கிய நிலையிற் பலரும் அறிய அழுதும் அரற்றியும் பொழுதொடுபுலம்பியும் வருந்தும் நிலையில் தலைமகளிடத்தே தோன்றும் மெய்ப்பாடுகளை.

2. 'ஆறாமவதியினுமிறப்பத்' என்றிருத்தல் வேண்டும். இறத்தல்—எல்லைக் கடத்தல்.

யாவருந் தண்குரல் கேட்ப நிரைவெண்பல்
மீயுயர் தோன்ற நகாஅ நக்காங்கே
பூவுயிர்த் தன்ன புகழ்சால் எழிலுண்கண்
ஆயிதழ் மல்க வழும் ;
ஓ ஓ, அழிதகப் பாராதே அல்லல் குறுகினம்
காண்பாங் கனங்குழை பண்பு ;
என்று, எல்லீரு மென்செய்தீர் என்னை நகுதிரோ
நல்ல நகாஅலிர் மற்கொலோ யானுற்ற
வல்ல லுறீஇயான் மாய மலர்மார்பு
புல்லிப் புணரப் பெறின் ;
எல்லாநீ, உற்ற தெவனோமற் றென்றீரேல் எற்சிதை
செய்தான் இவனென வுற்ற திதுவென
வெய்த வுரைக்கு முரனகத் துண்டாயின்
பைதல வாகிப் பசக்குவ மன்னோவென்
நெய்தன் மலரன்ன கண் ;
கோடுவாய் கூடாப் பிறையைப் பிறிதொன்று
நாடுவேன் கண்டனென் சிற்றிலுட் கண்டாங்கே
ஆடையான் மூஉய் அகப்படுப்பேன் சூடிய
காணான் றிரிதருங் கொல்லோ மணிமிடற்று
மாண்மலர்க் கொன்றை யவன் ;
தெள்ளியேம் என்றுரைத்துத் தேராது ஒருநிலையே
வள்ளியை யாகென நெஞ்சை வலியுறீஇ
உள்ளி வருகுவர் கொல்லோ உளைந்தியான்
எள்ளி யிருக்குவென் மற்கொலோ நல்லீருண்
மாந்தர் கடி கொண்ட கங்குல் கனவினால்
தோன்றின னாகத் தொடுத்தேன்மன் யான்தன்னைப்
பையெனக் காண்கு விழிப்பயான் பற்றிய
கையுளே மாய்ந்தான் கரந்து;
கதிர்பகா ஞாயிறே கல்சேர்தி யாயின்
அவரை நினைத்து நிறுத்தென்கை நீட்டித்
தருகுவை யாயின் தவிருமென் நெஞ்சத்
துயிர்திரியா மாட்டிய தீ;
மையில் சுடரே மலைசேர்தி நீயாயின்
பௌவநீர்த் தோன்றிப் பகல்செய்யு மாத்திரை
கைவிளக் காகக் கதிர்சில தாராயென்
தொய்யில் சிதைத்தானைத் தேர்கு ;

சினைத்தானைச் செய்வ தெவன்கொலோ எம்மை
நயந்து நலஞ்சிதைத் தான்;
மன்றப் பனைமேன் மலைமாந் தளிரே நீ
தொன்றிவ் வுலகத்துக் கேட்டு மறிதியோ
மென்றோள் நெகிழ்த்தான் தகையல்லால் யான்காணேன்
நன்று நீ தென்று பிற;
நோயெரி யாகச் சுடினுஞ் சுழற்றியென்
ஆயிதழ் முள்ளே கரப்பன் கரந்தாங்கே
நோயுறு வெந்நீர் தெளிப்பிற் றலைக்கொண்டு
வேவ தளித்திவ் வுலகு;
மெலியப் பொறுத்தேன் களைந்தீமின் சான்றீர்
நலிதருங் காமமுங் கௌவையு மென்றிவ்
வலிதில் உயிர்காவாத் தூங்கியாங் கென்னை
நலியும் விழுமம் இரண்டு;
எனப்பாடி,
இனைந்துநொந் தழுதனள் நினைந்துநீ டுயிர்த்தனள்
எல்லையும் இரவுங் கழிந்தனவென் றெண்ணி
எல்லிரா, நல்கிய கேள்வன் இவன்மன்ற மெல்ல
மணியுட் பரந்தநீர் போலத் துணிபாங்
கலஞ்சிதை யில்லத்துக் காழ்கொண்டு தேற்றக்
கலங்கிய நீர்போல் தெளிந்து நலம்பெற்றாள்
நல்லெழின் மார்பனைச் சார்ந்து". (கலி. 142)

இதனுள் அந்திக்காலத்தே கையற வெய்திப் பின்னர்ச் சான்றோரை நோக்கிக் கூறுகின்றவள் புல்லாரா மாத்திரையெனஆவனோடு புணர்ச்சி நிகழ்ந்தமையும் யாவருங் கேட்ப நக்கழுது அல்லலுறீஇயானெனப் பெயரும் பெற்றியுங் கூறிப், புல்லிப் புணரப்பெறின் ஈதிகழ்ச்சியன்றாமெனக் கூறத்தகாதன கூறலான் மடன்[1] தன்னை இறந்தவாறுந், தெள்ளியே மென்றதனானும் எள்ளி யிருக்குவ னென்றதனானும் வருத்தமிறந்த வாறுங், "கோடுவாய் கூடா" என்பது முதலாகக் "கொன்றை

---

1. மடன்—மகளிர்க்குரிய குணங்களில் ஒன்றான மடப்பம். வருத்தம்-ஆற்றாமை. மருட்கை—வியப்பு மிகுதி என்றது தலைவியது வனப்பு மிகுதியினை. இந்நான்கு பொருளுங் கைகடந்தனபோலக் கூறுங்கூற்றுக்கள் தலைமகள்பால் நிகழ்ந்தவாற்றினை இங்கெடுத்துக்காட்டிய 142—ஆம் கலியிலும் அதற்கு நச்சினார்க்கினியர் தந்த விளக்கத்திலும் கண்டுணர்க.

யவன்'' என்னுந் துணையுந் தான் செய்ததனை வியவாமையின் மருட்கை யிறந்தவாறும், நெய்தன் மலரன்ன கண்ணெனத் தன்வனப்பு மிகுதி கூறலின் மிகுதி யிறந்தவாறுங் காண்க. எல்லிரா நல்கிய கேள்வனிவனெனவே கந்தருவத்தின் வழுவிப் பெருந்திணை நிகழ்ந்தவாறும் பின்னர் வரைவு நிகழ்ந்தவாறுங் காண்க. இதற்குப் பொருளுரைக்குங்காற், கேட்பீராக இவள் நக்கு, நக்க அப்பொழுதே யழும், இங்ஙனம் அழுமாறு காமத்தை ஊழானது அகற்றலின் அஃதறுதியாக நரம்பினும் பயனின்றாயிருந்தது. ஓஒ இதனையுற்ற இவள் அல்லற்பண்ணைப் பாராதே அழிதக யாங் குறுகினோம். குறுகி யாம் இதனை முடிவு போகக் காண்பேமென்று வந்து எல்லீரும் என்செய்தீர்? என்னை யிகழ்கின்றீரோ? இவ் வருத்தத்தை எனக்குறுத்தினவனது மாயஞ் செய்த மலர்ந்த மார்பை யான் முயங்கிக் கூடினும் இகழ்ச்சியன்றாம் என்றற்றொடக்கமாய் வரும். (௬௨)

**ஆய்வுரை :**

இது, பிரிந்து சென்ற தலைவன் தான்வருவதாகக் குறித்த பருவந்தொடங்கிய நிலையில் தலைமகட்குளதாவதோர் இயல்பு கூறுகின்றது.

(இ - ள்) வினைவயிற் பிரிந்த தலைவன் தான் மீண்டுவருவதாகக் குறித்த பருவம் தொடங்கினமையால் (தலைவி) செயலற்று இரங்குதற்குரிய காலத்திலே குறித்த அப்பருவம் வந்து முடிவுற்றது போலக் கருதிக் கூறும் சொல் மடன் வருத்தம் மருட்கை மிகுதியென்னும் அவை நான்குபொருட்கண்ணும் நிகழும் என்று கூறுவர் ஆசிரியர் எ—று.

இங்குப் 'பொழுது' என்றது, ஓராண்டுக்குரிய அறுவகைப் பெரும்பொழுதுகளில் இருதிங்களையெல்லையாகவுடைய பருவத்தினை. தலைவைத்தல்—தொடங்குதல். கையறுகாலை - (தலைவன் குறித்த பருவத்தில் வாராமையையெண்ணிச்) செயலற்று இரங்குதற்குரிய காலம். இறத்தல்—கடத்தல். வந்துகழிதல். மடன்—அறியாமை. வருத்தம்—துயரம். மருட்கை—வியப்பு. மிகுதி—அப்பருவ காலத்திற்குரிய பொருள்கள் மிகுந்து காணப்படுதல்.

௨௩௩. இரந்து குறையுற்ற கிழவனைத் தோழி
நிரம்ப நீக்கி நிறுத்தல் அன்றியும்
வாய்மை கூறலும் பொய்தலைப் பெய்தலும்
நல்வகை யுடைய நயத்திற் கூறியும்
பல்வகை யானும் படைக்கவும் பெறுமே.

**இளம்பூரணம் :**

என்—எனின். களவுக்காலத்துத் தோழிக்குரியதோர் திறன் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இரந்து குறையுற்ற தலைமகனைத் தோழிநிரம்ப நீக்கி நிறுத்தலன்றி மெய்ம்மை கூறுதலும் பொய்ம்மை கூறுதலும் நல்வகையுடைய நயத்தினாற் கூறியும் பல்வகையானும் படைத்து மொழிந்து சொல்லவும் பெறும் என்றவாறு.

உதாரணம் களவியலுட் காட்டப்பட்டனவுள்ளுங் காண்க நல்வகையுடைய நயத்திற்குச் செய்யுள் :—

''வெள்ளாங் குருகின் பிள்ளையும் பலவே
அவையினும் பலவே சிறுகருங் காக்கை
அவையினும் அவையினும் பலவே குவிமடல்
ஓங்கிரும் பெண்ணை மீமிசைத் தொடுத்த
தூங்கணங் குரீஇக் கூட்டுவாழ் சினையே.''

இது மடலேறுவல் என்ற தலைவனைப் பழித்து அருளுடை-யீராதலான் மடலேறுவது அரிது என நயத்திற் கூறியது.

இதுவு மோர் மரபுவழு வமைத்தவாறு. (௬௨)

**நச்சினார்க்கினியம் :**

இது, தோழி தலைவனைக் கூறுவனவற்றுள் வழுவமைவன கூறுகின்றது.

---

1. இது களவுக்காலத்தில் தன்பால் இரந்து குறையுற்ற தலைவனைச் சேட்படுத்தற்கண்ணும் 'மடலேறுவேன்' எனத் துணிந்த தலைவனை மடல் விலக்கு தற்கண்ணும் தோழி தலைமகன்பால் கூற்று நிகழ்த்தற்குரிய முறைமையினை யுணர்த்துவது இச் சூத்திரமாதலின் 'களவுக்காலத்துத் தோழிக்குரியதோர் திறன் உணர்த்துதல் நுதலிற்று, எனக்கருத்துரை வரைந்தார் இளம்பூரணர்.

(இ-ள்.) இரந்து குறையுற்ற[1] கிழவனை- இரந்துகொண்டு தன் காரியத்தினைக் கூறுதலுற்ற தலைவனை; தோழி நிரம்ப நீக்கி நிறுத்தலன்றியும்[2]- தோழி அகற்றுற ஏத்துமுறைமையில் தாழ்வின்றாக அகற்றி நிறுத்தலேயன்றியும்; வாய்மை கூறலும்- நுமது கூட்டத்தினை யான் முன்னே அறிவலென மெய்யாகக் கூறலையும்; பொய்தலைப் பெய்தலும்- அப் புணர்ச்சியில்லை யென்று பொய்த்ததுணைத் தலைவன்மேற் பொய்யுரை பெய்துரைத்தலையும் அவன் வரைந்து கோடற்பொருட்டுச் சில பொய்களைக் கூற வேண்டுமிடங்களிலே பெய்துரைத்தலையும்; நல்வகையுடைய நயத்திற் கூறியும்- நல்ல கூறுபாடுடைய சொற்களை அசதியாடிக் கூறியும்[3]; பல்வகையானும் படைக்கவும் பெறுமே- இக் கூறியவாறன்றி வேறுபடப் புனைந்துரைக்கவும் பெறும் (எ-று.)

தோழி நீக்கலன்றியுங் கூறலையுந் தலைப்பெய்தலையும் படைக்கவும் பெறும். பல்வகையானும் படைக்கவும் பெறுமென வினை முடிக்க. தோழி தலைவனோடு நயங்கருதுமாற்றால் அவனை நீக்குதல் ஏனையவற்றோடெண்ணாது அன்றியுமெனப் பகுத்துரைத்தார். ஏனைக்குறை முடித்தற்கு இடையூறின்மை கூறியனவும் வரைவு கடாய்க் கூறியனவுமாம்.

"நெருநலு முன்னா ளெல்லையு......
.................................மகளே."

இது சேட்படுத்தது.

"எமக்கிவை யுரையன் மாதோ நுமக்கியான்
யாரா கியரோ பெரும வாருயிர்
ஒருவிர் ஒருவிர்க் காகி முன்னாள்
இருவீர் மன்னும் இசைந்தனிர் அதனால்
அயலே னாகிய யான்
முயலேன் போல்வனீ மொழிபொருட் டிறத்தே."

---

1. குறையுறுதலாவது, தான் கருதிவந்த காரியத்தைக் கூறுதல்.

2. நிரம்ப நீக்கி நிறுத்தலாவது இரந்து குறையுறவந்த தலைவன் தன்பால் அணுகி நில்லாது நெடுந்தூரத்தே அகன்று நிற்குமாறு சேட்படுத்தல்.

3. அசதியாடிக் கூறலாவது, எள்ளல் இளமை பேதமை மடம் காரணமாக நகைச்சுவை தோன்றக் கூறுதல்.

இது வாய்மை கூறியது. யாந்தன்னை மறைத்தலிற்போலும் இவள் குறை முடியாளாயதெனை அவன் கருதக் கூறினாள்.

''அறியேம் அல்லேம் அறிந்தனம் மாதோ
பொறிவரிச் சிறைய வண்டின மொய்ப்பச்
சாந்த நாறும் நறியோள்
கூந்தல் நாறுநின் மார்பே தெய்யோ.'' (ஐங்குறு. 230)

இதுவும் அது.

''நீயே, பொய்வன் மையிற் செய்பொருண் மறைத்து
வந்துவழிப் படுகுவை யதனால்
எம்மை யெமக்கே வில்வலனே
தகாது சொல்லப் பலவும் பற்றி
யொருநீ வருதல் நாடொறும் உள்ளுடைந்
தீர்மா மழைக்கண் கலுழ்க மதனால்
நல்லோர் கண்ணு மஃதல்ல
தில்லை போலுமிவ் வுலகத் தானே.''

இது பொய்தலைப் பெய்தது.

''திருந்திழாய் கேளாய்'' (கலி. 65) என்னுங் குறிஞ்சிக் கலியுள் வரைந்து கோடற்குப் பொய்யுரை படைத்தது.

''அன்னையு மறிந்தனள் அலரு மாயின்று
நன்மனை நெடுநகர் புலம்புகொள வுறுதரும்
இன்னா வாடையும் மலையும்
நும்மூர்ச் செல்கம் எழுமோ தெய்யோ.''(ஐங்குறு. 236)

இது, நல்வகையுடைய நயத்திற் கூறியது.

''வீகமழ் சிலம்பின் வேட்டம் போந்து
நீயே கூறினு மமையுநின் குறையே.''

இதுவும் அது.

அஃதன்றியும் நீயே சென்று கூறென்றலும் அறியாள் போறலுங் குறியாள் கூறலுங் குறிப்புவேறு கூறலும் பிறவும் நயத்திற்கூறும பகுதியாற் படைத்தது பலவகையாற் படைத்துத்

துறைவகையாம். இன்னும் வேறுபட வருவனவெல்லாம் இதனா-னமைக்க. இவை நாடகவழக்காகவும் உலகியல் வழக்காகவும் புனைந்துரைத்தமையானுந் தோழி தலைவற்குக் கூறத்தகாதன கூறலானும் வழுவமைந்தது. (௪௩)

**ஆய்வுரை :**

இது, களவுக்காலத்தில் தோழிக்கு உரியதோர் திறம் உணர்த்துகின்றது.

(இ—ள்) தோழி தன்பால் இரந்து குறையுற்று நிற்குந் தலைவனை மிகுதியும் சேய்மையிடத்தினனாக நீக்கி நிறுத்துத-லோடு அவனுக்கு உண்மைநிலையினையெடுத்துரைத்தலும் பொய்ம்மையொடு விரவிய சொற்களைக் கூறுதலும் நன்மைக் கூறுபாடுடைய நயவுரைகளைக் கூறுதலும் இவ்வாறு பலவகை-யானும் படைத்து மொழிதலையும் தன் திறமாகக் கொள்ளப்-பெறுவாள். எ—று.

நிரம்ப நீக்கி நிறுத்தலாவது, தன்னை அணுகிநின்று இரந்து குறையுற்ற தலைவனைத் தம் சுற்றத்தார் எதிர்ப்படாதவாறு அச்சக்கிளவியால் தன்னை அணுகாது நெடுந்தூரம் அகன்று நிற்கும்படி சேட்படநிறுத்தல். வாய்மை கூறல் என்பது நிகழ்வன கூறுதல். பொய்தலைப்பெய்தலாவது, உண்மை நிகழ்ச்சியுடன் நிகழாததனையும் கூட்டிக் கூறுதல். நல்வகையுடைய என்றது, நன்மைத் திறம் வாய்ந்த பொருள்களை. நயத்திற் கூறலாவது கேட்டோர்விரும்பியேற்றுக்கொள்ளும் படி இன்சொற்களால் எடுத்துரைத்தல். 'பல்வகையானும் படைக்கவும் பெறும்' என்றது, உள்ளதனை உள்ளவாறு கூறுதலேயன்றி இவ்வாறு இல்லதுகூறிப் படைத்து மொழியவும் பெறும்' எனப் பொருள்தந்து நிற்றலின் படைக்கவும் என்புழி உம்மை இறந்தததுதழீஇய எச்சவும்மையாகும்.

௨௩௪. உயர்மொழிக் கிளவி உறழுங் கிளவி
ஐயக் கிளவி ஆடூஉவிற் குரித்தே.

**இளம்பூரணம் :**

**என்—எனின்.** தலைமகற்குந் தலைமகட்கும் உரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) உயர்த்துச் சொல்லுதற்குரிய கிளவி தலைமகற்குந் தலைமகட்கும் ஒத்தகிளவி,[1] ஐயக்கிளவி, தலைமகற்கே உரித்தென்றவாறு.[2]

தலைவிமாட்டு ஐயக்கிளவி யின்றென்றவாறாம். அதனாற் குற்ற மென்னையெனின், தெய்வமென்று ஐயுறுங்கால் அதனை முன்பு கண்டறிவாளாதல் வேண்டும். காணாமையின் ஐயமிலள் என்க.[3] இனி உயர்த்துச் சொல்லுதல் உளவாம்.

> "அவன்மறை தேஎம் நோக்கி மற்றிவன்
> மகனே தோழி யென்றனள்."                                  (அகம். சஅ)

என்பது உயர்த்துச் சொல்லியவாறு.

தலைவன் உயர்த்துச் சொல்லியதற்குச் செய்யுள் :—

> "மாதர் முகம்போல் ஒளிவிட வல்லையேல்
> காதலை வாழி மதி."                                  (குறள். ௧௧௧அ)

பிறவு மன்ன. ஐயக்கிளவி களவியலுட் கூறப்பட்டது.                  (சுங)

நச்சினார்க்கினியம் :

இது, தோழிக்குந் தலைவிக்குமுரியதோர் வழுவமைக்கின்றது.

---

1. 'உறழ்தல்' என்னுஞ்சொல் 'ஒத்தல்' என்ற பொருளில் இங்கு ஆளப்பெற்றதெனக் கொள்வர் இளம்பூரணர். ஈண்டு ஒத்தலாவது தலைவனுக்கும் தலைவிக்கும் ஒப்பவுரியதாதல்.

2. தலைவி ஐயுறுமிடத்துத் தெய்வமோ? என்று ஐயுறுதல் வேண்டும். அங்ஙனம் அணங்கு (தெய்வம்) என்று ஐயுற்றல் அவளது உள்ளத்தே அச்சவுணர்வு தோன்றுமல்லது காமவுணர்வு தோன்றாது ஆகவே ஐயக்கிளவி ஆடுவிற்குரித்து என்றார் ஆசிரியர்.

3. தம்மாற் காணப்பட்டதொரு பொருளை 'அதுவோ இதுவோ' என ஐயுறுவோர் தமது ஐயத்திற்கு இலக்காகிய பொருள்களையெல்லாம் முன்னமே கண்டிருத்தல் வேண்டுமென்னும் நியதியில்லை. தாம் ஐயுற்ற பொருள்களுள் ஏதேனும் ஒன்று தம்மால் முன்னனே காணப்பட்ட பொருளாகவும் அதனை யொத்துத் தோன்றும் ஏனையது அறிந்தார் சொல்லக் கேள்வியுற்ற பொருளாகவும் அமைதல் இயல்பு. எனவே தலைவி 'தெய்வமென்று ஐயுறுங்கால் அதனை முன்பு கண்டறிவாளாதல் வேண்டும்' எனவரும் இளம்பூரணர் கூற்று அத்துணைப் பொருத்தமுடையதாகத் தோன்றவில்லை.

(இ-ள்.) உயர்மொழிக்கு[1] உறழுங் கிளவியும்[2] உரிய- இன்பம் உயர்தற்குக் காரணமான கூற்றுநிகழுமிடத்திற்கு எதிர் மொழியாக மாறுபடக்கூறுங் கிளவி நிகழ்தலுமுரிய; ஐயக்கிளவி ஆடூஉவிற்கு உரித்தே—கூறுவேமோ கூறேமோ என்று ஐயமுற்றுக் கூறுஞ் சொல் தலைவற்குரித்து (எ—று.)

உறழுங்கிளவியைப் பொதுப்படக் கூறினார்.[3] தோழி உயர் மொழி கூறியவழித் தலைவி உறழ்ந்து கூறலுந், தலைவன் உயர் மொழி கூறியவழித் தோழி உறழ்ந்து கூறலுந், தலைவன் உயர் மொழி கூறியவழித் தலைவி உறழ்ந்து கூறலுந், தலைவி உயர் மொழி கூறியவழித் தோழி உறழ்ந்து கூறலுங் கோடற்கு.

''சுணங்கணி வனமுலை'' (கலி. 60) என்னுங் குறிஞ்சிக் கலியுள்,

> ''என்செய்தான் கொல்லோ இஃதொத்தன் தன்கண்
> பொருகளிறு அன்ன தகைசாம்பி யுள்ளுள்
> உருகுவான் போலும் உடைந்து''

எனத் தோழி கூறியவழித்,

> ''தெருவின்கட், காரணமின்றிக் கலங்குவார்க் கண்டு...எவன்''

எனவும்,

> ''அலர்முலை யாயிழை நல்லாய் கதுமெனப்
> பேரம ருண்கணின் தோழி உறீஇய
> ஆரஞர் எவ்வ முயிர்வாங்கும்
> மற்றிந்நோய் தீரு மருந்தருளாய் ஒண்டொடீ:
> நின்முகங் காணும் மருந்தினேன் என்னுமால்
> நின்முகந் தான்பெறின் அல்லது கொன்னே
> மருந்து பிறிதியாது மில்லேற் றிருந்திழாய்

---

1. உயர்மொழியாவது, காதலரிடையே இன்பம் உயர்தற்குக் காரணமாகிய உரையாடல்.

2. உறழுங்கிளவியாவது, ஒருவர் ஒன்று கூறினால் அதற்கு எதிர்மொழியாக மறுத்துக்கூறும் உரையாடல்.

3. பொதுப்படக் கூறுதலாவது ஆடவர் மகளிர் இருபாலார்க்கும் ஒப்ப வுரியதாகக் கூறுதல்.

என்செய்வாங் கொல்லினி நாம் ;
பொன்செய்வாம்''                                                                                 (கலி 60)

எனவுந் தலைவி உறழ்ந்து கூறியவாறு காண்க.

இது தலைவன் வருத்தங்கூற அதனை ஏற்றுக்கொள்ளாது உறழ்தலின் வழுவாய் நாண்மிகுதியாற் கடிதின் உடம்படாமை யின் அமைந்தது.

''எல்லாவிஃ தொத்தன்'' (கலி. 61) என்னுங் குறிஞ்சிக் கலியுள்,

''ஈத லிரந்தார்க்கொன் றாற்றாது வாழ்தலிற்
சாதலுங் கூடுமா மற்று''                                                              (கலி. 61)

எனத் தலைவன் கூறியவழி,

''இவடந்தை, காதலின் யார்க்கும் கொடுக்கும் விழுப்பொருள்
யாதுநீ வேண்டியது;''                                                                  (கலி. 61)

எனவும்,

''மண்டமர் அட்ட களிறன்னான் தன்னையொரு
பெண்டிர் அருளக் கிடந்த தெவன் கொலோ'' (கலி. 61)

எனவும் தோழி யுறழ்ந்து கூறியவாறு காண்க.

இதுவும் அவன் வருத்தத்திற்கு எதிர்கூறத்தகாதன கூற லின் வழுவாய்த் தலைவி கருத்தறிந்து உடம்பட வேண்டுமென்று கருதுதலின் அமைந்தது.

''அணிமுகம் மதியேய்ப்ப..................
..................................................
முத்தியெறிந்து விடற்கு''.                                                        (கலி. 64)

இது, தலைவன் உயர்மொழிக்குத் தலைவி உறழ்ந்து கூறி யது. இது நகையாடிக் கூட்டத்தை விரும்பிக் கூறிய மொழிக்கு உறழ்ந்து கூறலின் வழுவாய் அவனும் நகையாடிக் கூறலின் அமைந்தது.

"மறங்கொ ளிரும்புலி" (கலி. 42) என்னுங் குறிஞ்சிக் கலியுள்,

"ஆர்வுற்றார் நெஞ்சம் அழிய விடுவானோ
ஓர்வுற றொருதிற மொல்காத நேர்கோல்
அறம்புரி நெஞ்சத் தவன்" (கலி 42)

எனத் தலைவி கூறலும்,

"தண்ணறுங் கோங்க மலர்ந்த வரையெல்லாம்
பொன்னணி யானைபோல் தோன்றுமே நம்மருளாக்
கொன்னாளன் நாட்டுமலை" (கலி. 42)

எனத் தோழி உறழ்ந்து கூறியவாறு காண்க. இதுவுந் தலைவி கூற்றிற்கு மாறாதலின் வழுவாய்ச் சிறைப்புறமாகக் கேட்டு வரைதல் பயனாதலின் அமைந்தது.

"சொல்லின் மறாதீவாண் மன்னோ விவள்" (கலி. 61)

எனவுங்,

"கூறுவங் கொல்லோ கூறலங் கொல்லெனக்
கரந்த காமங் கைந்நிறுக் கல்லாது" (அகம். 198)

எனவும் ஐயக்கிளவி தலைவற்குரியவாய் வந்தன.

இனி ஐயப்பாடு தலைவிக்குமுரித்தென்றாற் 'சிறந்துழி யையும்' (தொல். பொ. 94) என்பதற்கு மாறாம்.

"அவன்மறை தேஎம் நோக்கி மற்றிவன்
மகனே தோழியென்றனன்" (அகம். 48)

என்பதனை ஐயத்துக்கண் தெய்வமென்று துணிந்தாளெனின் அதனைப் பேராசிரியர் தாமே மறுத்தவாறு காண்க.[1] (கக)

---

1. ஐயம் என்பது, ஒருபொருள்மேலே இருபொருட்டன்மைகருதிவரும் மனத் தடுமாற்றம். ஐயுற்றுக்கூறும் கூற்று தலைவனுக்கன்றித் தலைவிக்கு இல்லை. அகநானூறு 48—ஆம் பாடலில் 'அவன்மறை தேஎம் நோக்கி மகனே தோழி' எனத் தலைவி வியந்து உயர்த்துக் கூறியதன்றி ஐயுற்றுக் கூறினாலல்லள் அங்ஙனம் ஐயுற்றவள் அவனைத் தெய்வமென்று துணிந்தாளெனின் தலைவிக்கு அச்சமேயன்றிக் காமக்குறிப்பு நிகழாதாம்.

**ஆய்வுரை :**

இது தலைவனுக்கும் தலைவிக்கும் உரியதோர் சொல்வகையுணர்த்துகின்றது.

(இ—ள்) வியந்து உயர்த்துச் சொல்லுதற்குரிய சொல், தலைவன் தலைவி ஆகிய இருபாலார்க்கும் ஒத்த சொல்வகையாகும். ஐயுறறுக் கூறுதற்குரிய சொல் தலைமகனுக்குரியது. எ-று.

உயர்மொழிக் கிளவியாவது, காதலர் இருவரும் ஒருவரையொருவர் எதிர்ப்பட்ட முதற்காட்சியில் ஒருவரையொருவர் வியந்து நோக்கித் தம்மினும் உயர்ந்தாராக உயர்த்துக்கூறும் சொல்லாகும். ஐயக்கிளவியாவது, 'இவர் மக்களினத்தாரோ அன்றித்தெய்வமோ, எனத் தம்மினும் மேலாயினாரோடு வைத்து எண்ணி ஐயுற்றுக் கூறுஞ் சொல். ஆடூஉ—ஆண்மகன்; என்றது தலைவனை.

௨௩௫. உறுகண் ஓம்பல் தன்னியல் பாகலின்
உரிய தாகும் தோழிகண் உரனே.

**இளம்பூரணம் :**

என்—எனின். இது தோழிக்குரியதோர் மரபுவழுக் காத்தலை நுதலிற்று.

(இ—ள்.) தலைமகற் குற்றதுன்பம் பரிகரித்தல் தோழி இயல்பாகலின்[1] அவட்குரியதாகும் அறிவு என்றவாறு.

---

'ஐயத்துக்கண்தெய்வமென்று துணிந்தாளெனின் அதனைப் பேராசிரியர் தாமே மறுத்தவாறு காண்க' எனவரும் இவ்வுரைந்தொடர், தொல்காப்பியம் பொருளியலாகிய இப்பகுதிக்குப் பேராசிரியர் உரை வரைந்துள்ளார் என்பதனையும் அவ்வுரையுள் உயர்மொழிக்குரிய உதாரணமாக 48-ஆம் அகப்பாடல் காட்டப்பெற்றிருந்ததென்பதனையும் அதனை அதன்கண் உள்ள 'மகனே' என்பதனை உயர்மொழிக்குரிய கிளவியாகக் கொள்ளாது ஐயக்கிளவியாகக் கொள்ளுதலைப் பேராசிரியர் மறுத்துள்ளார் என்பதனையும் புலப்படுத்துதல் காணலாம். அகம் 48-ஆம் பாடலில் வரும் 'மகனே' என்பதனை உயர்மொழிக்குரிய கிளவியாகவே இளம்பூரணர் கொண்டுள்ளமையும் இங்கு நினைத்தற்குரியதாகும்.

1. 'தலைமகட்குற்ற துன்பம் பரிகரித்தல் தோழியியல்பாகலின்' என்றிருத்தல் பொருத்தமாகும்.

உரன் — அறிவு.

அதனானே யன்றே :

("பால்மருள் மருப்பின் உரல்புரை பாவடி.")
என்னும் பாலைக்கலியுள்,

"கிழவர் இன்னோர் என்னாது பொருள் தான்
பழவினை மருங்கிற் பெயர்புபெயர் புறையும்." (கலி. ௨௧)
எனக் கூறினாள் என்று கொள்க.[1] (௪௮)

நச்சினார்க்கினியம் :

இது, தோழி அறிவுடையளாகக் கூறலும் அமைகவென்கின்றது.

(இ—ள்.) உறுகண்[2] ஓம்பல் தன் இயல்பு ஆகலின் - தலைவிக்கு வந்த வருத்தத்தைப் பரிகரித்தல் தனக்குக் கடனாதலின், தோழிகண் உரன் உரியதாகும் - தோழிமாட்டு அறிவுளதாகக் கூறல் உரித்தாகும் (எ-று.)

"பான்மருண் மருப்பின்" (கலி. 21) என்னும் பாலைக்கலியுட்,

"பொருள் தான்
பழவினை மருங்கில் பெயர்பு பெயர்புறையும்
அன்ன பொருள்வயின் பிரிவோய்" (கலி. 21)

எனத் தோழி அறிவுடையாளாகக் கூறியவாறு காண்க.

"பிண்ட நெல்லின் அள்ளூ ரன்னஎன்
ஒண்டொடி ஞெகிழினும் நெகிழ்க
சென்றீ பெருமநின் தகைக்குநர் யாரோ" (அகம். 46)

என்பது உறுகண் காத்தற்பொருட்டாகத் தலைவி வருந்தினும் நீ செல்லென்றாள் தலைவன செல்லாமை அறிதலின்.

---

1. 'கிழவர் இன்னர் என்னாது பொருள்தான் பழவினைமருங்கிற் பெயர்வு உறையும்' எனத் தோழி தலைவனை நோக்கிக் கூறும் கூற்றில் அவளது அறிவுடைமை மிக்குத் தோன்றியவாறு காணலாம்.

2. உறுகண் — துன்பம். ஓம்புதல் — பரிகரித்தல் ; வருமுன் அறிந்து நீக்குதல் உரன் — அறிவின் திண்மை.

ஒன்றென முடித்தலான் தலைவி உரனுடையளெனக் கூறலுங் கொள்க. (௪௫)

ஆய்வுரை :

இது தோழிக்கு இன்றியமையாததோர் இயல்பு உணர்த்து-கின்றது.

(இ—ள்) களவொழுக்கத்தில் ஒழுகும் காதலர் இருவர்க்கும் நேரக்கூடிய இடையூறுகளை முன்னரே உய்த்துணர்ந்து அவை நிகழாதவாறு பாதுகாத்தல் தோழியின்பால் எதிரதாக்காக்கும் அறிவின் திண்மை இன்றியமையாது நிலைபெறற்குரியதாகும (எ-று.)

உறுகண்—காதலர் வாழ்க்கையில் வந்து உறுவனவாகிய இடையூறுகள். ஓம்பல்-வாராது தவிர்த்தல். 'தன்' என்றது, தோழியை. தோழிகண் உரன் உரியதாகும் என இயையும். உரன்—அறிவின்திண்மை. 'உரனென்னுந் தோட்டியான் ஓரைந் துங்காப்பான்' (திருக்குறள். 24) என்புழி உரன் என்னுஞ்-சொல் அறிவின் திண்மை என்ற பொருளில் ஆளப்பெற்றுள்ளமை காண்க.

௨௩௬. உயர்மொழிக் கிளவியும் உரியவால் அவட்கே,

இளம்பூரணம் :

என்—எனின், இதுவு மது.[1]

(இ—ள்) உயர்த்துச் சொல்லுங் கூற்றும் உரித்து தோழிக்கு என்றவாறு.

''தாமரைக் கண்ணியை தண்நறுஞ் சாந்தினை
நேரிதழ்க் கோதையாள் செய்குறி நீவரின்
மணங்கமழ் நாற்றத்த மலைநின்று பலிபெறூஉம்
அணங்கென அஞ்சுவர் சிறுகுடி யோரே.'' (கலி. ௫௨)

---

1. அதுவும் தோழிக்குரியதோர் மரபு வழுக்காத்தலை நுதலிற்று என்பதாம்.

என்பது உயர்த்துச் சொல்லியவாறு.[1] (சரு)

நச்சினார்க்கினியம் :

இதுவுந் தோழிக்குரியதோர் வேறுபாடு கூறுகின்றது.

(இ—ள்.) அவட்கு[2] - தோழிக்கு; உயர்மொழிக் கிளவியும் உரிய- தலைவியையுந் தலைவனையும் உயர்த்துக் கூறுங் கூற்றும் உரியவாம் ஓரோவோரிடத்து (எ - று.)

''மகிழ்மிகச் சிறப்ப மயங்கினள் கொல்லோ
யாண ரூரநின் மாணிழை அரிவை
காவிரி மலர்நிறை யன்னநின்
மார்புநனி விலக்கல் தொடங்கி யோளே.'' (ஐங்குறு.42)

இதனுட் காவிரிப் பெருக்குப்போலத் தலைவியை நோக்கி வருகின்ற மார்பினைத் தான் விலக்குமாறென்னையெனத் தலைவியை உயர்த்துக் கூறியவாறு காண்க.

''காலையெழுந்து'' (குறுந். 45) என்பதும் அது.

''உலகம் புரப்பான் போல்வதோர் மதுகையும் உடையன்'' (கலி.47)

எனவுந்,

''தாமரைக் கண்ணியை.........'' (கலி. 52)

எனவுந் தலைவனை உயர்த்துக் கூறியவாறு காண்க. (சகூ)

ஆய்வுரை :

இதுவும் தோழிக்குரியதோர் திறம் உணர்த்துகின்றது.

1. தன்னிற் பெரியாரை அவர் முன்னின்று உயர்த்துக் கூறுதல் முகமன் மொழியாவதன்றி மரபென்றாயினும் தோழி தலைவன் முன் நின்று இங்ஙனம் உயர்த்துக் கூறுதல் தலைவன் இக்களவொழுக்கினை விடுத்துத் தலைவியை மணந்து கொள்ளுதல் வேண்டும் என்னுங்கருத்துடன் உயர்த்துக்கூறியதாகலின் மரபு வழுவமைதியாக அமைத்துக் கொள்ளப் பெறும்.

2. அவட்கு என்புழி அவள் என்னுஞ்சுட்டு முற்சூத்திரத்திற் குறித்த தோழியைச் சுட்டியது.

(இ—ள்.) காதலர் இருவரையும் மக்களின் மேற்படவுயர்ந்த தெய்வமாக வுயர்த்துககூறும் மொழியும் மேற்குறித்த தோழியாகிய அவட்கு உரிய எ—று.

'உயர்மொழிக் கிளவியும் அவட்கு உரிய' என இயையும் ஆல்—அசை. அவள் என்னுஞ் சுட்டுப்பெயர் மேலைச் சூத்திரத்திற் கூறப்பட்ட தோழியைச் சுட்டிநின்றது.

''தாமரைக் கண்ணியை .............. நீவரின்

................ ................ ........................

அணங்கென அஞ்சுவர் சிறுகுடியோரே' (கலி. ருஉ)

இது தலைவனைத் தெயவமென உயர்த்துக்கூறியது.

'எமக்கோர், கட்காண் கடவுளல்லளோ பெரும' (பொருளியல். சூத். 75—மேற்கோள்) இது தலைவியைத் தெய்வமென உயர்த்துக் கூறியது. இவையிரண்டும் தோழி கூற்றாக அமைந்த உயர்மொழிக் கிளவிகளாகும்.

உகூஎ. **வாயிற் கிளவி வெளிப்படக் கிளத்தல்**
**தாவின் றுரிய தத்தங் கூற்றே.**

**இளம்பூரணம் :**

**என்—எனின். வாயில்கட்குரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று.**

**(இ - ள்.) தத்தங் கூறுபாட்டினான் வாயில்கள் கூறுங் கிளவி வெளிப்படக் கிளத்தல் கேடின்றி யுரிய வென்றவாறு.**[1]

**தத்தங்கூறாவது அவரவர் சொல்லத்தகுங் கூறுபாடு. ஆனுருபு தொக்கு நின்றது. எனவே, வாயில்களல்லாத தலை**

---

1. வாயிற்கிளவி—பார்ப்பான் பாங்கன் முதலிய வாயில்கள் கூறும் சொல்வகைகள். தத்தம் கூற்று — தத்தமக்குரியவாகச் சொல்லத்தகும் கூறுபாடு. 'தத்தம் கூற்றான்' என ஆனுருபு விரித்துத் 'தத்தங் கூற்றான் வாயிற்கிளவி வெளிப்படக்கிளத்தல் தாவின்று உரிய' என இயைத்துப் பொருள் வரைந்தார் இளம்பூரணர்.

தா இன்றி — கேடின்றி.

மகளும் நற்றாயும் மறைத்துச் சொல்லப்பெறுவர் என்றவாறு.[1]

வருகின்ற சூத்திரம் மறைத்துச் சொல்லும் உள்ளுறை சொல்லுகின்றா ராதலின், அவ்வுள்ளுறை வாயில்களை விலக்கியவாறு. இவர் மறைத்ததனாற் குற்றமென்னை? இவர் குற்றேவல் முறைமையராதலானும் கேட்போர் பெரியோர் ஆதலானும் வெளிப்படக் கூறாக்காற் பொருள் விளங்காமையானும் அவ்வாறு கூறினால் இவர் கூற்றிற்குப் பயனின்மையானும் வெளிப்படவே கூறும் என்க.[2] (சசு)

நச்சினார்க்கினியம் :

இது, தலைவியுந் தோழியும் வாயிலாகச் சென்றாருடன் கூறுவனவற்றுட் படுவதோர் வழுவமைக்கின்றது.

(இ—ள்.) தத்தங் கூற்றே-தோழிக்குந் தலைவிக்குமுரிய கூற்றின்கண் : வாயிற் கிளவி - வாயிலாய் வந்தார்க்கு மறுத்துத் தலைவனது பழிகளைக் கூறுங் கிளவிகளை; வெளிப்படக் கிளத்தல்- மறையாது வெளியாம்படி கூறுதல்; தாவின்று உரிய - இங்ஙனம் கூறுகின்றேமே என்னும் வருத்தம் மனத்து நிகழ்தலின்றியே உரியவாம் (எ - று.)[3]

அவை தலைவிக்குந் தோழிக்கு முரியனவும் தோழிக்கே யுரியனவுந் தலைவிக்கே யுரியனவுமாம். வாயில்களாவார் ஆற்றாமையுந் தோழி முதலியோருமாம்.

''நெஞ்சத்த பிறவாத நிறையில ளிவளென
வஞ்சத்தான் வந்தீங்கு வலியலைத் தீவாயோ'' (கலி. 69)

---

1. வாயில்கள் வெளிப்படக்கிளத்தல் உரிய எனவே, வாயில்கள் அல்லாத தலைமகளும் நற்றாயும் தம் கூற்றுக்களை வெளிப்படக் கூறாது மறைத்துக் கூறுதலும் உண்டு என்பது பெறப்படும் என்பர்.

2. அடுத்துவரும் சூத்திரம் மறைத்துக்கூறும் கூற்று வகையிலாகிய உள்ளுறை கூறுகின்றதாதலின், வாயில்களாவார் தலைமக்களிடத்தே தாம் சொல்லக் கருதியதனை மறைத்துக்கூறாது வெளிப்படக் கூறுதல் வேண்டும் என விதித்தலும் மறைத்துக் கூறும் கிளவியாகிய உள்ளுறை வாயில்கட்கு உரியதன்றென விலக்குதலும் இந்நூற்பாவின் நோக்கம் என்பது இளம்பூரணர் கருத்தாகும்.

3. வாயிற்கிளவியாவது, தோழியும் தலைவியும் தம்பால் வாயிலாய் வந்தார்க்கு மறுத்துரைக்கூற்று. வெளிப்படக்கிளத்தலாவது தாம் கூறக் கருதிய குற்றங்களை விளங்கக் கூறுதல். தாவின்று உரிய என்றது, குற்றத்தை இவ்வாறு வெளிப்படக் கூற வேண்டியுளதே என்னும் வருத்தம் மனத்தில் நிகழ்தலின்றியே துணிந்து கூறுதல். தா என்பது வருத்தம் என்னும் பொருளில் வந்த உரிச்சொல்.

இஃது, ஆற்றாமை வாயிலாகத் தலைவன் வந்துழித் தலைவி வெளிப்படக் கூறியது. இது தோழிக்கும் உரித்து.

'எரியகைந் தன்ன தாமரை யிடையிடை
யார்ப்பினும் பெரிதே'' (அகம். 116)

இதனுள் ''நாணிலை மன்ற'' எனத் தோழி கூறி அலரா கின்றாளென வெளிப்படக் கிளத்தலின் வழுவாயமைந்தது.

''அகலநீ துறத்தலி னழுதோவா வுண்கணெம்
புதல்வனை மெய்தீண்டப் பொருந்துத லியைபவால்
நினக்கொத்த நல்லாரை நெடுநகர்த் தந்துநின்
தமர்பாடுந் துணங்கையு ளரவம்வந் தெடுப்புமே'' (கலி. 70)

இது தலைவி கூற்று.

'உரிய' வென்றதனால் தோழி வாயிலாகச் சென்றுழித் தலைவி வெளிப்படக் கூறுதலுங் கொள்க. அஃது ''இம்மை யுலகு'' என்னும் (66) அகப்பாட்டினுட் காண்க.

இவை இங்ஙனம் வெளிபடக் கிளத்தலின் வழுவாய் அமைந் தன. (சஎ)

ஆய்வுரை :

*இது, கற்பியல் வாழ்க்கையில் வாயில்களாவார்க்குரியதோர் திறம் உணர்த்துகின்றது.*

*(இ—ள்) வாயில்களாவார் தாம் கூறுதற்குரிய கூற்றுக்-களைத் தத்தமக்குரிய சொல்வகைகளில் வெளிப்படக்கூறுதல் வருத்தமின்றியுரிய எ-று.*

*வாயிற்கிளவி தத்தம் கூற்றே வெளிப்படக்கிளத்தல் உரிய என இயையும். வாயில்களாவார் தோழி முதல் கண்டோர் இறுதியாக மேற்கற்பியலிற் கூறப்பட்ட பன்னிருவர். அவருள் கற்பியல் வாழ்ககையில் வாயிலாதற்குரிய பாணர் முதலியோரைக் குறித்ததே இச்சூத்திரமெனக்கொள்ளுதல் பொருததமுடையதாகும்.*

உ௲அ. உடனுறை உவமம் சுட்டுநகை சிறப்பெனக்
கெடலரு மரபின் உள்ளுறை ஐந்தே.

இளம்பூரணம் :

என்—எனின் உள்ளுறையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

( இ—ள் ) உடனுறையும் உவமமும் சுட்டும் நகையும் சிறப்பும் எனக் கெடலரு மரபினை உடைய உள்ளுறை ஐந்துவகைப் படும் என்றவாறு.

உள்ளுறையாவது பிறிதொருபொருள் புலப்படுமாறு நிற்ப தொன்று.[1] அது கருப்பொருள் பற்றிவருமென்பது அகத்திணையியலுள் ( அகத்திணை. ௫0 ) கூறப்பட்டது.

உடனுறையாவது உடனுறைவ தொன்றைச் சொல்ல, அதனானே பிறிதொரு பொருள் விளங்குவது.

''விளையா டாயமொடு வெண்மணல் அழுத்தி
மறந்தனம் துறந்த காழ்முளை யகைய
நெய்பெய் தீம்பால் பெய்தினிது வளர்ப்ப
நும்மினுஞ் சிறந்தது நுவ்வை யாகுமென்று
அன்னை கூறினள் புன்னையது சிறப்பே
அம்ம நாணுதும் நும்மொடு நகையே
விருந்திற் பாணர் விளரிசை கடுப்ப
வலம்புரி வான்கோடு நரலும் இலங்குநீர்த்
துறைகெழு கொண்கநீ நல்கின்
நிறைபடு நீழற் பிறவுமா ருளவே.'' (நற். ௧௭௨)

இதனுள் 'புன்னைக்கு நாணுதும்' எனவே, அவ்வழித்தான் வளர்த்த புன்னையென்றும். 'பல்காலும் அன்னை வருவள்' என்றுடனுறைகூறி விளக்கியவாறு.[2] பிறவுமன்ன.

———

1. 'உள்ளுறையைந்தே' என உடனுறை முதலாகவுள்ள ஐந்திணையும் உள்ளுறையென்ற பெயரால் தொல்காப்பியனார் குறிப்பிடுதலால் 'உள்ளுறையாவது பிறிதொரு பொருள் புலப்படுமாறு நிற்பதொன்று'' என ஐந்தற்கும் பொதுவாக விளக்கம் தந்தார் இளம்பூரணர்.

2. தன்னுடன் உறைவது ஒன்றைச் சொல்ல அதனாலே பிறிதொரு பொருள் குறிப்பாகப் புலப்படும்படி செய்தல் உடனுறையெனப்படும். 'நும்மினுஞ் சிறந்தது நுவ்வையாகும் என்று அன்னை கூறினள் புன்னையது நலனே' எனத் தம்முடன் உறைவதாகிய புன்னையினைக் கூறியது 'பலகாலும் இங்கு அன்னை வருவாள்' என்ற குறிப்புப்பொருளைத் தந்தமையின் 'உடனுறை' யென்னும் உள்ளுறையாயிற்று.

உவமம் என்பது உவமையைச் சொல்ல உவமிக்கப்படும் பொருள் தோன்றுவது.

''வெறிகொள் இனச்சுரும்பு பேய்ந்ததோர் காவிக்
குறைபடுந்தேன் வேட்டும் குறுகும்—நிறைமதுச் சேர்ந்து
உண்டாடும் தன்முகத்தே செவ்வி உடையதோர்
வண்டா மரைப்பிரிந்த வண்டு.'' (தண்டி. ருக உ௯ர).

இது வண்டைக் கூறுவாள் போலத் தலைமகள் பரத்தையிற் பிரிவு கூறுதலின் உள்ளுறையுவமம் ஆயிற்று.[1]

சுட்டு என்பது ஒரு பொருளைச் சுட்டிப் பிறிதோர் பொருட் படுதல்.

''தொடிநோக்கி மென்தோளும் நோக்கி அடிநோக்கி
அஃதாண் டவள்செய் தது.'' (குறள். ௧உ௭௯)

இதனுள் இப் பூப்பறிப்பேமாயின் வளைகழன்று தோள் மெலிய நடத்தல் வல்லையாக வேண்டும் என ஒருபொருள் சுட்டித் தந்தமை காண்க.[2]

நகையாவது நகையினாற் பிறிதொரு பொருளுணர நிற்றல்.

''அசையியற் குண்டாண்டோ ரேஎர்யான் நோக்கப்
பசையினள் பைய நகும்.'' (குறள். ௧0௯அ)

இதனுள் நகையினாற் பிறிதோர் குறிப்புத் தோன்றியவாறு

---

1. 'உவமம்' என்றது, இங்கு உள்ளுறையுவமையினை. இதன் இலக்கணம் அகத்திணையியல் ௫௰, ௫௧-ஆம் சூத்திரங்களில் விரித்துரைக்கப் பெற்றது.

2. இத்திருக்குறள் தலைமகள் குறிப்புக்கண்டு தலைமகனுக்குத் தோழி சொல்லியதாகும். 'தலைமகள்தன் தோளில் அணிந்த தோள்வளையை முதலில் நோக்கி அதன்பின் தன் மெல்லிய தோளையும் நோக்கிப் பின தன் அடியையும் நோக்கித் தன் குறிப்புப் புலப்படச் செய்தாள் எனவரும் இத்திருக்குறளில், தலைவர் பரியின் இத்தொடி தோளில் நில்லா, தோளும் மெலியும். இவ்விரண்டும் நிகழாமல் என்பாதங்களாகிய நீவிர் தலைவரொடு உடன் செல்லுதற்கு முந்துதல் வேண்டும்' என உடன் போதற் குறிப்பினைப் புலப்படுத்தும் நிலையில் அமைவது எனத் தலைமகளது நிலைமையினைச் சுட்டிக் கூறுந்திறத்தால் அவள் கருதியது உடன்போக்கு எனப் பிறிதொரு பொருளையும் சுட்டிததந்தமையின் இது சுட்டு என்னும் உள்ளுறையாயிற்று.

காண்க.[1]

சிறப்பு என்பது இதற்குச் சிறந்தது இஃது எனக் கூறுவத னானே பிறிதோர் பொருள் கொளக் கிடப்பது.[2] (சஎ)

நச்சினார்க்கினியம் :

இது, மேல் வெளிப்படக் கிளப்பன கூறிப் பின் வெளிப் படாமற் கிளக்கும் உள்ளுறை இனைத்தென்கின்றது.

(இ—ள்.) உடனுறை-நான்கு நிலத்தும் உளவாய் அந் நிலத்துடனுறையுங் கருப்பொருளாற் பிறிதொன்று பயப்ப மறைத்துக் கூறும் இறைச்சியும்; உவமம்-அக் கருவாற் கொள்ளும் உள்ளுறையுவமமும் ஏனையுவமமும்; சுட்டு-உடனுறை யுவமமும் அன்றி[3] நகையுஞ் சிறப்பும் பற்றாது வாளாது ஒன்று நினைந்து ஒன்று சொல்வனவும் அன்புறு தகுந இறைச்சியுட் சுட்டிவருவன-வும்; நகை-நகையாடி ஒன்று நினைத்து ஒன்று கூறுதலும்; சிறப்-பென-ஏனையுவமம் நின்று உள்ளுறை யுவமத்தைத் தருங் கருப்பொருட்குச் சிறப்புக் கொடுத்து நிற்றலும் என்று; கெடலரும் மரபின் உள்ளுறை ஐந்தே-கெடுதலரிதாகிய முறைமையினையுடைய உள்ளுறை ஐந்து வகைப்படும் (எ-று.)

ஒன்றனை உள்ளுறுத்து அதனை வெளிப்படாமற் கூறலின் அவற்றை உள்ளுறையாமென்றார்.[4]

---

1. தன்னைநோக்கி மகிழ்ந்த தலைமகளைக் கண்ட தலைவன் யான் காதலால நோக்க இவள் நெகிழ்ந்து தனக்குள்ளே மெல்ல நகுகின்றாள். ஆதலால் நுடங்கிய இயல்பினையுடையாளாகிய இவளது புன்முறுவலின்கண்ணே தோன்றுகின்றதொரு நன்மைக்குறிப்பு உண்டு'' எனக்கூறுவதாக அமைந்த திருக்குறளில், தலைமகளது முறுவலால் அவள் மனத்திற் கொண்ட பிறிதொரு குறிப்புத் தோன்றியது நகையென்-னும் உள்ளுறையாகும்.

2. சிறப்பு என்னும் உள்ளுறைக்கு இளம்பூரணருரையில் எடுத்துக்காட்டு இல்லாமையால் அவர்கொண்ட சிறப்பென்னும் உள்ளுறைப்பற்றிய விளக்கத்தினைத் தெரிந்து கொள்ள இயலவில்லை.

3. இவ்வுரைத்தொடர் 'உடனுறையுமுவமுமன்றி' என்றிருத்தல் வேண்டும்.

4. தான் கூறக்கருதியதொன்றனையுள்ளே மறைத்து அதனை வெளிப் படாமற் கூறுதலின் உள்ளுறையென்பது காரணப்பெயராம்.

"இறைச்சி தானே" (தொல். பொ. 229) 'இறைச்சியிற் பிறக்கும்' (தொல். பொ. 230) என்பனவற்றுள் இறைச்சிக்குக் காரணங் காட்டினாம்[1] உவமம் உவமவியலுட் காட்டுதும்.

"பெருங்கடல் முகந்த பல்கிளைக் கொண்மூ
இருண்டுயர் விசும்பின் வலனேர்பு வளைஇப்
போர்ப்புறு முரசின் இரங்கி முறைபுரிந்
தறநெறி பிழையாத் திறனறி மன்னர்
அருஞ்சமத் தெதிர்ந்த பெருஞ்செய் ஆடவர்
கழித்தெறி வாளின் நளிப்பன விளக்கும்
மின்னுடைக் கருவியை ஆகி நாளுங்
கொன்னே செய்தியோ அரவம் பொன்னென
மலர்ந்த வேங்கை மலிதொடர் அடைச்சிப்
பொலிந்த ஆயமொடு காண்டக இயலித்
தழலை வாங்கியுந் தட்டை யோப்பியும்
அழலேர் செயலை யந்தளிர் ததைஇயுங்
குறமகள் காக்கு மேனற்
புறமுந் தருதியோ வாழிய மழையே." (அகம். 188)

இதனுட் கொன்னே செய்தியோ அரவமென்பதனாற் பயனின்றி அலர்விளைத்தியோவெனவுங் கூறி ஏனற்புறமுந் தருதியோ என்பதனால் வரைந்து கொள்வையோ வெனவுங் கூறித் தலைவனை மழைமேல் வைத்துக் கூறலிற் சுட்டாயிற்று. கொன்னே செய்தியோ என்றதனால் வழுவாயினும் வரைதல் வேட்கையாற் கூறினமையின் அமைந்தது.

'அன்புறு தகுந' (தொல். பொ. 231) என்பதனுள் ஏனையதற்குக் காரணங் காட்டினாம்.[2]

"விளையா டாயமொடு பிறவுமா ருளவே." (நற். 172)

இதனுட் புன்னைய அன்னை நுவ்வையாகுமென்றதனான் இவளெதிர் நும்மை நகையாடுத லஞ்சுதுமென நகையாடிப் பகற்குறி யெதிரே கொள்ளாமைக் குறிப்பினான் மறைத்துக்

---

1. இத்தொடர் 'இறைச்சிக்குதாரணங்காட்டினாம்' என்றிருத்தல் வேண்டும்.

2. 'அன்புறுதகுந என்பதனுள் ஏனையதற்குதாரணங்காட்டினாம்' என்றிருத்தல்வேண்டும்.

கூறி மறுத்தவாறு காண்க. இதனைச் செவ்வனங் கூறாமையின் அமைத்தார்.

'உள்ளுறை யுவம மேனை யுவமம் (தொல். பொ. 46) என்னுஞ் சூத்திரத்து "விரிகதிர் மண்டிலம்" (கலி. 71) என்னும் மருதக்கலியுட் சிறப்புக் கொடுத்து நின்றது காட்டினாம்.

அறத்தொடு நிலையும் பொழுதும் ஆறும் முதலியனவுஞ் செவ்வனங் கூறப்படுதலின் இவை கரந்தே கூறப்படுதலிற் 'கெடலரு மரபின்' என்றார்.[1] இவை தோழிக்குந் தலைவிக்கும் உரியவாறு செய்யுட்களை நோக்கியுணர்க.[2]

ஆய்வுரை :

இது மறைத்துக்கூறும் கிளவியாகிய உள்ளுறையின் வகை உணர்த்துகின்றது.

(இ-ள்) உடனுறை, உவமம், சுட்டு, நகை, சிறப்பு எனக் கேடில்லாத மரபினையுடைய உள்ளுறை ஐந்து வகைப்படும் எ-று.

கருதிய பொருளை வெளிப்படக்கூறாது, தன்னோடு உடனுறைவதொன்றைச் சொல்லி அதன் பயனாகத் தான் கருதிய பொருளைக் குறிப்பிற் புலப்படச் செய்தல் உடனுறையெனப்படும். உவமையைச் சொல்ல அதனால் உவமிக்கப்படும் பொருள் புலப்படச் செய்தல் உள்ளுறையுவமம் எனப்படும். ஒரு பொருளைச் சுட்டிக்கூறி அதனாற் பிறிதோர்பொருள் புலப்படச் செய்வது சுட்டென்னும் உள்ளுறையாகும். நகைக்குறிப்பினாற் பிறிதோர் பொருள் புலப்படச் செய்தல் நகை என்னும் உள்ளுறையாகும். இதற்குச் சிறந்தது இது எனக் கூறுவதனானே பிறிதோர் பொருள் தோன்றக் கூறுவது சிறப்பு என்னும் உள்ளுறையாம் என்பது இளம்பூரணர் தரும் விளக்கமாகும்.

---

1. இவ்வுள்ளுறை யைந்தும் தாம் சொல்லக்கருதிய பொருளை மறைத்தே கூறப்படுதலின் கெடுதலரிதாகிய முறைமையுடைய உள்ளுறை ஐந்து என அடை புணர்த்தோதினார்,

2. இவ்வுள்ளுறையைந்தும் தோழி கூற்றிலும் தலைவி கூற்றிற்கும் உரிய வாய் வருதலன்றி ஏனையோர் கூற்றுக்களில் இடம் பெறுதலில்லை என்பதனை அகத்திணைச் செய்யுட்களாகிய இலக்கியங்களை நோக்கியுணர்ந்து கொள்க என்பார், "இவை தோழிக்குந் தலைவிக்கும் உரியவாமாறு செய்யுட்களை நோக்கியுணர்க' என்றார் நச்சினார்க்கினியர்.

இனி, உடனுறையென்பது, நிலத்துடன் உறையுங் கருப் பொருளாற் பிறிதொரு பொருள் தோன்ற மறைத்துக கூறும் இறைச்சி. உவமமாவது அக்கருப்பொருளாற் கொள்ளும் உள்ளு றையுவமும ஏனையுவமும். நகையும் சிறப்பும் பற்றாது ஒன்று நினைந்து ஒன்று கூறுதலும் அன்புறுதற்குத் தகுவனவற்றை இறைச்சியுட் சுட்டுதலும் சுட்டென்னும் உள்ளுறையாகும். நகைக்குறிப்புத் தோன்ற ஒன்று நினைந்து ஒன்று கூறுதல நகை யென்னும் உள்ளுறையாகும். உள்ளுறையுவமத்தைத் தரும் கருப் பொருட்கு ஏனையுவமம் அடை மொழியாய் நின்று சிறப்புக் கொடுத்து நிற்பது சிறப்பென்னும் உள்ளுறையாகும். இவை ஐந்தும், தான் சொல்லக் கருதிய பொருளை உள்ளுறையாகத் தன்னகத்துட்கொண்டு அதனை வெளிப்படக் கூறாது மறைத்துக கூறுதலின உளளுறையெனப்பட்டன என்பது நச்சினார்க்கினியர் தரும விளக்கமாகும்.

இங்குக் கூறப்பட்ட உள்ளுறை ஐந்தனுள் உடனுறை என்பது இறைச்சியையும் உவமம் என்பது உள்ளுறையுவமத்தினையும் சுட்டு என்பது அன்புறுதகுந இறைச்சியுட் சுட்டுதலையும குறித்தன எனக் கொளளுதலே பொருததமுடையதாகும். நகைக் குறிப்புத் தோன்ற ஒன்று நினைந்து ஒன்று கூறுதல் நகை என்னும் உள்ளு றையாகும் என நச்சினார்க்கினியர் தரும் விளக்கம் ஏற்புடைய தேயாகும். உடனுறைக்கும் நகைக்கும் இளம்பூரணர் தரும் விளக்கமும் எடுத்துக்காட்டும் குறித்த அவ்வந் நிகழ்ச்சிக்கு மட்டுமின்றி ஏனையவற்றிற்குச் செல்லாமையின் அவற்றை உளளுறைக்குரிய வகையாகக் கொளளுதற்கு இயலவில்லை. இளம்பூரணர் சுட்டென்னும் உள்ளுறைக்கு எடுததுக் காட்டிய தொடிநோக்கி' (1279) என வரும திருக்குறள் குறிப்பறிவுறுத்தல்' என்ற தலைப்பில தலைமகள் குறிப்பினை வெளியிட்டுரைப்பதாகலின் அதனை மறைத்துக் கூறும் உள்ளுறை வகையாகக் கொளளுதற்கியலவில்லை. இனிச் சிறப்பென்னும் உள்ளுறைக்கு இளம்பூரணருரையில் எடுத்துக்காட்டு எதுவும் காணப்பெறாமையால் நச்சினார்க்கினியர் தரும் விளக்கததினையே இப்போதைக்கு ஏற்புடையதாகக்கொளளலாம்.

௨௩௬. அந்தமில் சிறப்பின் ஆகிய இன்பம்
தன்வயின் வருதலும் வகுத்த பண்பே.

**இளம் பூரணம் :**

என்—எனின். இதுவும் உள்ளுறைப் பாற்படுவதோர் பொருள் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) அந்தமிலாத சிறப்பினாகிய வின்பத்திடத்து உள்-ளுறைப் பொருண்மை வருதலும் வகுத்த இயல்பு என்றவாறு.

'அந்தமில் சிறப்பு' என்பது மேன்மேலுஞ் சிறப்புச் செய்தல்

''நுண்எழில் மாமைச் சுணங்கணி ஆகம்தம்
கண்ணோடு தொடுத்தென நோக்கியும் அமையார் என்
ஒண்ணுதல் நீவுவர் காதலர் மற்றவர்
எண்ணுவ தெவன்கொ லறியேன் என்னும்.'' (கலி. ௬)

என்றவழி, இன்பத்தின்கண்ணும் பிறிதோர் பொருள் உண்டென்பது தோற்றுகின்றது.[2] (௬அ)

இது, முற்கூறிய உள்ளுறைபற்றித் தலைவற்கு வருவேதோர் வழுவமைக்கின்றது.

(இ—ள்.) ஆக்கிய[3] அந்தமில் சிறப்பின் இன்பமும்-முற்கூறிய உள்ளுறை ஐந்தானும் அவர்களுண்டாக்கிய முடிவிலாத

---

1. முடிவில்லாத சிறப்பினைச் செய்தலாலுளதாகிய இயன்பத்தின் கண்ணே உள்ளுறையாகப் பிறிதொரு பொருள் தோன்றுதலும் முன்வகுத்துரைக்கப்பட்ட உள்ளுறையின் இயல்பாகும் என்பது இச்சூத்திரத்திற்கு இளம்பூரணர் கண்ட பொருளாகும்.

'அந்தமில்சிறப்பின் ஆகிய இன்பம் தன்வயின் (உள்ளுறை) வருதலும் வகுத்த பண்பே' என மேலைச் சூத்திரத்திலுள்ள 'உள்ளுறை' என்பதனை அதிகாரத்தால் வருவித்துரைப்பர் இளம்பூரணர்.

2. தலைவன் தலைவியுடன் அன்பினாற் கலந்து அளவளாவி மகிழும் இன்ப நிலையிலே தலைவியின்பாற் பேரன்புடையனாய் அவன் மேன் மேலும் செய்த சிறப்பின்கண்ணே கடமை கருதித் தலைமகளைச் சிலநாள் பிரிந்திருக்கப்போகின்றோம் என்னும் பிரிதலுணர்வு தோன்றி' தலைவர் செய்யும் இச்சிறப்பு நம்மைப் பிரிந்து செல்வதாயிருக்கும்' எனத் தலைவியுணரும் வண்ணம் உள்ளுறை பொருளாய்க் கூறலன்றிச் செயலால் வெளிப்படுதலின் இதுவும் முற்கூறிய உள்ளுறையின்பாற் படுவதாயிற்று.

3. 'ஆகியவின்பம்' எனப்பாடங்கொண்டார் இளம்பூரணர்,

சிறப்பினையுடைய இன்பம்; தன்வயின் வருதலும் வகுத்த பண்பு-தலைவன் கண்ணும் நிகழ்ந்து இன்பஞ் செய்தலுங் காமத்துக்கு முதலாசிரியன் வகுத்த இலக்கணம் (எ-று.)

தலைவன் தன்மை என்ப தொன்றின்றி நந்தன்மையெனக் கருதுதலின் யாம் ஒன்றை நினைந்து ஒன்று கூறினும் அவன் முனியாது இன்பமெனக் கொள்வனெனக் கூறியவற்றை அவன் இவை இன்பந் தருமென்றே கோடலின் வழுவமைப்பட்டன. உதாரணம் முற்காட்டியவற்றுட் காண்க.[1] (௫௪)

ஆய்வுரை:

இஃது அகத்திணையொழுகலாற்றில் மறைத்துக் கூறும் கூற்றுவகையாகிய உள்ளுறையால் உளதாம் பயனகூறுகின்றது.

(இ—ள்) முடிவில்லாத சிறப்பினையுடைய அகத்திணையொழுகலாற்றல் உளதாகிய இன்பம் இத்தகைய உள்ளுறையிலே விளங்கித் தோன்றும்படி செய்த சிறப்பும் முன்னைச் சான்றோர் வகுத்துரைத்த பண்புடைய சொல்லாடல் முறையால் விளைந்ததே எ—று.

தோழியும் தலைவியும் தலைவனுடன் உரையாடுங்கால் தம் உள்ளக்கருத்தினை வெளிப்படக்றாது மறைத்துக் கூறுதலாகிய இவ்வுரையாடல் முறை இதனைக்கேட்கும் நுண்ணு-ணர்வினார்க்கு இன்பந்தரவல்லதாகும். நம்முடைய தலைவன் தன் தன்மையென்பதொன்றின்றி நம் தன்மையன் என்றுகருதுதலின், யாம் ஒன்று நினைந்து ஒன்று கூறினும அவன் அச்சொற்களைக் கேட்டு வெகுளாது இன்பமெனக் கொள்வன் என்ற கருததால் தலைவியும் தோழியும் தலைவனுடைய குறைகளைக் குறிப்பாகப் புலப்படுத்தி இடித்துரைக்கும் நிலையிற் கூறப்பட்ட உள்ளுறைப் பொருண்மையினைக் கேட்டுணர்ந்த தலைவன் 'இவை இன்பந் தரும் என்றே ஏற்றுக்கொள்வானாதலால் இத்தகைய உள்ளுறைப் பொருண்மையால் தலைமக்களது இன்பவுணர்வு வளர்ந்து சிறக்கும என்பதனை ஆசிரியர் இச் சூத்திரத்தாற் புலப்படுத்தியவாறு காணலாம்.

---

1. 'தலைவன் தன் தன் தன்மையென்ப தொன்றின்றி நந்தன்மையெனக் கருதுதலின்' என்றிருத்தல் வேண்டும்.

உசம. மங்கல மொழியும் அவையல் மொழியும்
மாறில் ஆண்மையில் சொல்லிய மொழியுங்
கூறிய மருங்கிற் கொள்ளும் எனப.

**இளம்பூரணம் :**

என்—எனின். இதுவும் உள்ளுறைப் பாற்படுவதோர் சொல் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மங்கலமொழி முதலாகச் சொல்லப்பட்டனவும் உள்ளுறைப் பாற்படும் என்றவாறு.

மங்கலமொழியாவது—மங்கலத்தாற் கூறுஞ்சொல். அது செத்தாரைத் துஞ்சினார் என்றல்.

அவையல் மொழியாவது இடக்க ரடக்கிக் கூறுதல். அது கண் கழீஇ வருதும் என்றல்.

மாறிலாண்மையிற் சொல்லிய மொழியாவது ஒருவனைச் சிங்கம் வந்த தென்றாற்போற் கூறுவது.

அவையெல்லாஞ் சொல்லாற் பொருள்படாமையின் உள்ளுறைப் பாற்படும்.[1] இன்னும் இவ்வாற்றாற் பொருள் கொள்ளுமாறு 'ஒல்லுவ தொல்லும்' என்னும் புறப்பாட்டினுள் (புறம். கக௯) 'நோயில ராகநின் புதல்வர்' எனவும் 'சிறக்கநின்னாளே' எனவும் வரும் மங்கலச் சொல் கெடுக என்னும் பொருள்பட்டவாறு காண்க.

"இதுவுமோர் ஊராண்மைக் கொத்த படிறுடைத்து" (கலி. அக) என்றது தீயொழுக்கம் ஒழுகினாய் என இடக்கரடக்கி அவையல்மொழியால் ஒழுக்கக் குறைபாடு கூறியவாறு. (சக)

'வைகிய மொழியும்' எனவும் 'கூறியல் மருங்கின்' எனவும் பாடங் கொண்டார் நச்சினார்க்கினியர்,

**நச்சினார்க்கினியம் :**

இது, மேன் மூன்றுபொருளும் வழுவாயமைக என்றலின் எய்தாத தெய்வித்தது [2]

---

1. மங்கலமொழி, அவையல்மொழி, ஆண்மையிற் சொலியமொழி என்னும் இவையெல்லாம் சொல்லால் வெளிப்படப்பொருள் தராது மறைந்த பொருளையுணர்த்துதலால் இவையும் ஒருவகை உள்ளுறையின்பாற்படும் என்பதாம்.

2. 'அவையல்மொழியும்' என்பது இளம்பூரணர் கொண்ட பாடம்.

(இ-ள்.) மங்கலமொழியும் - தலைவற்குத் தீங்கு வருமென் றுட்கொண்டு தோழியுந் தலைவியும் அதற்கஞ்சி அவனை வழுத்து தலும்; வைஇய மொழியும்[1] — தலைவன் தம்மை வஞ்சித்தானா கத் தலைவியுந் தோழியுங் கூறலும்; வைஇய மொழி: தீங்கை வைத்த மொழியுமாம்; மாறில் ஆண்மையிற் சொல்லிய மொழி-யும் - மாறுபாடில்லாத ஆளுந்தன்மையிடத்தே பழிபடக் கூறிய மொழியும்; கூறியன் மருங்கிற் கொள்ளும் என்ப - வழுவமைதி யாகக் கூறிய இலக்கணத்திடத்தே கொள்ளும்மொழி யென்று கூறுவர் ஆசிரியர் (எ—று.)[2]

''நோயிலராக நங்காதலர்'' (அகம். 114) எனவுங் ''காந்த ளுஞ் செய்வினை முடிக்கத் தோழி'' எனவுங் கூறுவன நம்மை அறனன்றித் துறத்தலின் தீங்குவருமென்றஞ்சி வாழ்த்தியது. நம் பொருட்டுத் தீங்கு வருமென நினைத்தலின் வழுவாயமைந்தது.[3]

''வையினர் நலனுண்டார் வாராமை நினைத்தலின்''
(கலி. 134)

என்பது வஞ்சித்தமை கூறிற்று.

''இதுவுமோ—ரூராண்மைக்கொத்த படிறுடைத்து'' (கலி.89) என்பது ஆண்மையிலே பழியுண்டு என்றது. இதுவும் வழீஇ அமைந்தன. (௩௪)

**ஆய்வுரை :**

இது, தலைமகட்கு ஆகாதன எனப் பின்னர் (மெய்ப்

1. 'வைஇயமொழி' என்றது 'தலைவன் தம்மை வஞ்சித்தானாகக் கூறும் மொழியாகும். வைதல்—வஞ்சித்தல், 'வையினர் நலனுண்டார், (கலி. 134) என்புழி இச்சொல் இப்பொருளிற் பயிலுதல் காண்க, இனி 'வைஇயமொழி' என்பதற்குத் தீங்கைவைத்தமொழி அஃதாவது தலைவன் செய்த தீங்கினைக் குறித்த மொழி எனவும் பொருள் கொள்வர்.

2. 'இதுவும் ஓர் ஊராண்மைக்கொத்தபடிறுடைத்து என்ற தொடர் 'தலைவனது ஆண்மையிலே பழியுண்டு' (கலி. 89) என்றலின், தீங்கைவைத்தமொழியா தலறிக.

3. தோழியும் தலைவியும் நம்பொருட்டுத் தலைவற்குத் தீங்கு வருமென அஞ்சி வாழ்த்துதலும் தலைவன் வஞ்சனைசெய்தான் என அவன் மேல் தீங்கினையேற்றிக் கூறலும் வழுவாமேனும் அவன்பால் அன்புமிகுதியாற் கூறியனவாதலின் வழுவமைதியாக அமைத்துக்கொள்ளப்பெற்றன என்பது நச்சினார்க்கினியர் கருத்தாகும்.

பாட்டியலில்) விலக்கப் படுவன சில அவர்பாற் சார்த்திக கூறப் படுதலும் உண்டென்கின்றது.

(இ—ள்) தலைமகட்கு ஆகாதன என விலக்கப்படும் சினம், பேதைமை, பொறாமை, வறுமை ஆகிய நான்கும் ஒருபொருளைச் சிறப்பித்தல் காரணமாகத் தலைமக்கள்பாற் சார்த்தியுரைக்கப் பட்டு வரும் எ—று.

சினம் என்பது, நீண்ட நேரம் நிலைத்திருக்கும் வெகுளி. பேதைமை—அறியாமை. நிம்பிரி—பொறாமை தோன்றும் மனக் குறிப்பு. நல்குரவு—நுகர் பொருளில்லாமையாகிய வறுமை. சிறப் பொடு வருதலாவது, ஒருபொருளைச் சிறப்பிததுக் கூறும் முறை யில் இயைந்து வருதல். சினமுதலாக இங்குக் கூறப்பட்டவை நான்கும் தலைமக்கட்கு ஒவ்வாதனவாயினும் அவர்தம் உயர்நத பண்புகளில் ஒன்றனைச் சிறப்பித்தற்குச் சார்பாயவரின் விலக்கப் படுதல் இல்லையென்பதாம.

உ௬௪. சினனே பேதைமை நிம்பிரி நல்குரவு
அனைநால் வகையுஞ் சிறப்பொடு வருமே.

**இளம் பூரணம் :**

என்—எனின். மெய்ப்பாட்டியலுள் நடுவண் ஐந்திணைக்குரிய தலைமக்கட் காகாதன எடுத்தோதுகின்றா ராகலின், அவற்றுள் ஒருசாரன ஒரோவிடத்து வருமென்பது உணர்த்திற்று.

இச்சூத்திரம் எதிரது நோக்கிற்று.[1]

(இ-ள்.) சினமும் பேதைமையும் நிம்பிரியும் நல்குரவும் என்று சொல்லப்பட்ட அந்நான்கு வகையும் யாதானும் ஒரு பொருளைச் சிறப்பித்தல் காரணமாக வரும் என்றவாறு.

"கொடியியல் நல்லார் குரல்நாற்றத் துற்ற
முடியுதிர் பூந்தாது மொய்ம்பின வாகத்
தொடிய வெமக்குநீ யாரை பெரியார்க்கு
அடியரோ ஆற்றா தவர்." (கலி. அஅ)

---

1. இது, பின்வரும் மெய்ப்பாட்டியலில் தலைமக்கட்கு ஆகாதன என விலக்கியவற்றுள் சிலவற்றைக் குறித்துக் கூறுதலின் 'இச்சூத்திரம் எதிரது நோக்கிற்று' என்றார்.

இதனுள் 'தொடிய எமக்கு நீ யாரை' என்பது சினம்பற்றி வரினும் காமக் குறிப்பினாற் புணர்ந்த தலைமகள் கூறுதலின் அவள் காதலைச் சிறப்பிக்க வந்தது.[1]

''செவ்விய தீவிய சொல்லி அவற்றொடு
பைய முயங்கிய அஞ்ஞான்று அவையெல்லாம்
பொய்யாதல் யான்யாங் கறிகோமற் றைய.''
(கலி. கக)

என்பதனுள் 'யான்யாங் கறிகோ' என ஏதம்பற்றி வந்த பிரிவாற்றாமையைச் சிறப்பிக்க வந்தது.

''அகனகர் கொள்ளா அலர்தலைத் தந்து
பகல்முனி வெஞ்சுரம் உள்ளல் அறிந்தேன்
மகனல்லை மன்ற இனி.'' (கலி. கக)

என்பதனுள் தலைவி 'மகனல்லை' எனல் நிப்பிரியாகிய வெறுப்புப்பற்றி வந்தது.

இதுவும் பிரிவற்றாமையைச் சிறப்பிக்க வந்தது.

''உடுத்தும் தொடுத்தும் பூண்டுஞ் செரீஇயுந்
தழையணிப் பொலிந்த ஆயமொடு துவன்றி
விழவொடு வருதி நீயே இஃதோ
ஓரான் வல்சிச் சீரில் வாழ்க்கைப்
பெருநலக் குறுமகள் வந்தென
இனிவிழ வாயிற் றென்னும்இவ் வூரே.'' (குறுந். உகரு)

இதனுள் 'ஓரான் வல்சிச்சீரில் வாழ்க்கை' எனத் தலைமகன் செல்வக் குறைபாடு கூறிப் 'பெருநலக்குறுமகள் வந்தென விழ வாயிற் றென்னுமிவ்வூர்' என்றமையான் நல்குரவு பற்றித் தலைமகனைச் சிறப்பிக்க வந்தது.[2] இச்சூத்திரத்துள் வரைந்து கூறாமையின் தலைவியுந் தலைவனுந் தோழியுஞ் செவிலியுங் கூறப்பெறுவர் என்று கொள்க. (௩௰)

---

1. 'யான்யாங்கறிகோ' எனப் பேதைமைபற்றிவந்த பிரிவாற்றாமையைச் சிறப்பிக்கவந்தது' என்றிருத்தல் பொருத்தமாகும்.

2. 'நல்குரவு பற்றித் தலைமகளைச் சிறப்பிக்க வந்தது' என்றிருத்தல் வேண்டும்.

(பாடம்) திவ்விய.

இன்விழ வாயிற் றென்னும்இவ ளூரே.

**நச்சினார்க்கினியம் :**

இது, மெய்ப்பாட்டியலுள் ஆகாதென்பவற்றுட் சில அமைக வென வழுவமைக்கின்றது. இது பொதுவாகக் கூறலின் தலைவிக் குந் தோழிக்குங் கொள்க.[1]

(இ - ள்.) சினனே - கோபம் நீடித்தலும்; பேதைமை- ஏழ்மையும்; நிம்பிரி - பெறாமை தோன்றுங் குறிப்பும்; நல்குரவு - செல்வமின்மையும்; அனைநால்வகையும் - என்ற அத் தன்மையனவாகிய நாற்கூறும்; சிறப்பொடு வருமே - ஒரு பொருளைச் சிறப்பித்துக் கூறுதல் காரணத்தான் வரும் (எ—று.)

சினத்தை ஆண்டுக் கொடுமையினடக்கினார்.[2]

"நாணு நிறையும் நயப்பில் பிறப்பிலி." (கலி. 60)

எனவும்,

"தொடிய வெமக்குநீ யாரை" (கலி. 88)

எனவுஞ் சினம்பற்றி வரினும் அவை தன்காதலைச் சிறபித்தலின் அமைந்தன.

"செவ்விய தீவிய சொல்லீ" (கலி. 19)

எனக் கழிபெருங் காதலான் நின்னை உள்ளவாறறிந்திலே னெனத் தன் பேதைமையைக் காதலாற் சிறப்பித்தலின் அமைந்தது.

---

1. மெய்ப்பாட்டியலுள் காமக்குறிப்பாகாதன என விலக்கிய குற்றங்களுள் சினம், பேதைமை, நிம்பிரி என்னும் மூன்றுடன் அங்குச் சொல்லப்படாத நல் குரவும் ஆக இவை நான்கும் ஒருபொருளைச் சிறப்பித்தல் காரணமாகத் தோழி கூற்றிலும் தலைமகள் கூற்றிலும் பொதுவாக இடம்பெறுதலுண்டு என வழுவ மைக்கும் நிலையில் அமைந்தது இச்சூத்திரமாகும்.

2. சினன்—சினம் என்பது நெடுங்காலம் நீட்டித்து நிற்கும் வெகுளியாகும். இக்குற்றம் செயலளவிற் கொடுமையின்கண்ணும் சொல்லளவில் வன்சொல்லின் கண்ணும் அடங்கும். இங்குக் கூறிய பேதைமையும் மெய்ப்பாட்டியலிற்குறித்த ஏழைமையும் பொருளால் ஒன்றே. 'நிம்பிரி' என்பது பொறாமை தோன்றுங் குறிப்பு என்பர் பேராசிரியர். வெறுப்பு என்பர் இளம்பூரணர்.

''உறலியா மொளிவாட வுயர்ந்தவன் விழவினுள்
விறலிழை யவரொடு விளையாடு வான்மன்னோ
பெறலரும் பொழுதொடு பிறங்கிணர்த் துருத்திசூழ்ந்
தறல்வாரும் வையையென் றறையுந ருளராயின்.''

(கலி. 30)

இது நிம்பிரி; அவரோடும் விளையாடுவானெனப் பொறாமை கூறியும் அவன் ஈண்டையானாக வேண்டுமெனக் காதலைச் சிறப்பித்தலின் அமைந்தது.

''பிரசங் கலந்த வெண்சுவைத் தீம்பால்
விரிகதிர்ப் பொற்கலத் தொருகை யேந்திப்
புடைப்பிற் சுற்றும் பூந்தலைச் சிறுகோல்
உண்ணென் றோக்குபு புடைப்பத் தெண்ணீர்
முத்தரிப் பொற்சிலம் பொலிப்பத் தத்துற்
றரிகரைக் கூந்தல் செம்முது செவிலியர்.
பரீஇமெலிந் தொழியப் பந்தர் ஓடி
ஏவன் மறுக்குஞ் சிறுவிளை யாட்டி
அறிவு மொழுக்கமும் யாண்டுணர்ந் தனள்கொல்
கொண்ட கொழுநன் குடிவற னுற்றெனக்
கொடுத்த தந்தை கொழுஞ்சோறு உள்ளாள்
ஒழுகுநீர் நுணங்கறல் போலப்
பொழுதுமறுத் துண்ணுஞ் சிறுமது கையளே.'' (நற். 110)

இது, குடிவறனுற்றென நல்குரவு கூறியுங் காதலைச் சிறப்பித்தலின் அமைந்தது.

இது, மெய்ப்பாட்டியலுள் விலக்காமையின் அதனைச் சார ஈற்றிலே வைத்தார்.[1] (௩௰)

ஆய்வுரை :

இதுவும் மறைத்துரைபாடலாகிய உள்ளுறைப்பாற்படும்.

---

1. காமக்குறிப்பு ஆகாதன இவையென விளக்கும் மெய்ப்பாட்டியற் சூத்திரத்துள் இங்குக் கூறப்பட்ட நல்குரவு இடம்பெறவில்லை எனினும் நல்குரவும் விலக்குதற்குரியதொன்றே என்னும் கருத்தில் இதனை மெய்ப்பாட்டியலைச்சார இவ்வியலின் ஈற்றிலே வைத்தார் தொல்காப்பியனார் என்பது நச்சினார்க்கினியர் தரும் விளக்கமாகும்.

ஒருசார் கூற்றுவகையுணர்த்துகின்றது.

(இ—ள்) மங்கலம் அல்லாததனை மங்கலமரபினால் மறைத்துக் கூறும் சொல் வகையும். அவையிற் கூறத்தகாத இடக்கர்ப்பொருளை அடக்கிக்கூறும் சொல் வகையும், தன்னிகரில்லாத ஆண்மை காரணமாகக் கூறப்படும் சொல்வகையும் ஆகிய இவையெல்லாம் (சொல்லால் வெளிப்படப்பொருள் தராது) மறைத்துக் கூறுங் குறிப்புடையனவாய் மேற்குறித்த உள்ளுறை போன்று கொள்ளப்படும் என்பர் ஆசிரியர். (எ—று)

சொல்லதிகாரத்தில் தகுதிய வழக்கின்பாற்பகுத்துரைக்கப் படும் மங்கல மொழி இடக்கரடக்கல் என்பன தனி மொழிகள் எனவும் இங்குக் கூறப்படுவன தொடர்மொழிகளாகிய கூற்று வகைகள் எனவும் பகுத்துணர்தல் வேண்டும்.

உசஉ. அன்னை என்னை என்றலும் உளவே
தொன்னெறி முறைமை சொல்லினும் எழுத்தினுந்
தோன்றா மரபின என்மனார் புலவர்.

இளம்பூரணம் :

என்—எனின். இதுவுமொருசார் மரபுணர்த்துதல் நுதலிற்று.

(இ—ள்) அன்னை என்னை என்று சொல்லுதலும் உள-அவை முன்புள்ளார் சொல்லிப்போந்த முறைமை அவை தாம சொல்லினானும் சொல்லிற் கங்கமாகிய எழுத்தினானும் பொருள் தோன்றாத மரபினையுடைய என்றவாறு.

எழுத்தென்பது எழுத்தாகப் பிரித்தாற் படும் பொருள் வேறுபாடு இவை அகத்தினும் புறத்தினும் வரும்.[1]

"ஓரீஇ ஒழுகு மென்னைக்குப்
பரியலென் மன்யான் பண்டொரு காலே." (குறுந். உ0க)

என்பது தோழிக்குக் கூறியது.

"அன்னாய் இவனோர் இளமா ணாக்கன்." (குறுந். கக)
என்பது தோழிக்குக் கூறியது.

---

1. இச்சொல்வழக்கு அகத்திணையொழுகலாற்றிற் பயின்று வருதல்போன்று புறத்திணையிலும் வருதலுண்டு என்பார் 'இவை அகத்தினும் புறத்தினும் வரும்' என்றார் இளம்பூரணர்.

''என்னைமுன் நில்லன்மின் தெவ்விர் பலரென்னை
முன்னின்று கன்னின் றவர்.'' (குறள். ௭௭௧)

''என்னை, புற்கை யுண்டும் பெருந்தோ ளன்னே.''
(புறம். ௮௪)

இவையும் 'என்றலும்' என்ற வும்மையால் (இந்) நிகரனவுங் கொள்க.

''எந்தைதன் உள்ளங் குறைபடா வாறு.''

என வரும். (௩௧)

நச்சினார்க்கினியம் :

இது, முறைப்பெயர்பற்றி வருவதோர் வழுவமைக்கின்றது.

(இ—ள்.) சொல்லினும் எழுத்தினுந் தோன்றா மரபின - சொல்லோத்தினும் எழுத்தோத்தினுஞ் சொல்லப்படாத இலக்கணத்தனவாய; தொல் நெறி முறைமை - புலனெறி வழக்கிற்குப் பொருந்திய பழைய நெறிமுறைமையானே; அன்னை என்ஐ என்றலும் உள என்மனார் புலவர் - தோழி தலைவியை அன்னையென்றலும் தலைவி தோழியை அன்னையென்றலும் இருவருந் தலைவனை என் ஐ யென்றலும் உளவென்று கூறுவர் புலவர் (எ - று.)[1]

''அன்னாய் இவனோர் இளமா ணாக்கன்.'' (குறுந். 33)

''புல்லின் மாய்வ தெவன்கொ லன்னாய்.'' (குறுந். 150)

இவை தோழியைத் தலைவி அன்னாயென்றன.

''அன்னாய் வாழிவேண் டன்னை நம்மூர்ப்
பார்ப்பனக் குறுமகப் போலத் தாமுங்

1. அன்னை என்பது தாய் என்னும் பொருளில் வழங்குதற்குரிய முறைப்பெயர். என்னை என்பது என்தலைவன், என் தமையன் என்ற பொருள்களில் வழங்குதற்குரிய முறைப்பெயர். இம்முறையமைப்பு சொல்லிலக்கணத்திலும் எழுத்திலக்கணத்திலும் தோன்றும் மரபாகும். இம்மரபினைக் கருதாது தோழிதலைவியை அன்னையென்றலும் தலைவி தோழியை அன்னையென்றலும் இருவரும் தலைவனை என்னையென்றலும் உள. இவை சொல்லதிகாரத்தும் எழுத்ததிகாரத்தும் சொல்லப்படாத இலக்கணத்தவாய்ப் புலனெறிவழக்காகிய செய்யுட்களில் தொன்றுதொட்டு வழங்கிவரும் பழைய நெறிமுறையினவாதலால், இவை வழுவிலவாக அமைத்துக் கொள்ளத்தக்கன என்பதாம். சொல், எழுத்து என்பன இங்கு ஆகுபெயராய் அவற்றின் இலக்கணம் உணர்த்தும் சொல்லதிகாரத்தையும் எழுத்ததிகாரத்தையும் உணர்த்துகின்றன.

குடுமித் தலைய மன்ற
நெடுமலை நாடன் ஊர்ந்த மாவே.'' (ஐங்குறு. 202)

''அன்னாய் வாழிவேண் டன்னை யுவக்காண்
மாரிக் குன்றத்துக் காப்பா ளன்ன
தூவலின் நனைந்த தொடலை ஒள்வாள்
பாசி சூழ்ந்த பெருங்கழல்
தண்பனி வைகிய வரிக்கச் சினனே.'' (ஐங்குறு. 206)

இவை தோழி தலைவியை அன்னை யென்றன.

''எனக்கு மாகா தென்னைக்கு முதவாது'' (குறுந். 27)

''ஓரீஇயினள் ஒழுகும் என்ஐக்குப்
பரியலென் மன்யான் பண்டொரு காலே.'' (குறுந். 203)

இவை தலைவி தலைவனை என்ஐ யென்றன.

தோழி கூறியது வந்துழிக் காண்க. தலைவன் தலைவியை அன்னையெனக் கூறலும் உளதென்பாருமுளர். எழுத்தினுஞ் சொல்லினுமென்னாத முறையன்றிக் கூற்றானே புறத்திற்கும் இவை கொள்க.[1]

''என்னை மார்பிற் புண்ணுக்கு''

''என்னைக் கூரிஃதன்மை யானும்
என்னைக்கு நாடிஃ தன்மையானும்'' (புறம். 85)

''என்ஐமுன் நில்லன்மின் தெவ்விர் பலரென்ஐ
முன்னின்று கன்னின் றவர்'' (குறள். 781)

''என்ஐ மார்பிற் புண்ணும் வெய்ய'' (புறம். 280)

என்பன கொள்க.

ஏனைய வந்துழிக் காண்க.

---

1. எழுத்தினும் சொல்லினும் என்னாது சொல்லினும் எழுத்தினும் என் முறைமாறிக் கூறினமையால் புறத்திணையிலும் இச்சொற்கள் இவ்வாறு வழங்குதல் அமைத்துக் கொள்ளப்படும் என்பதாம்.

இனி, உம்மையாற் பிறவுமுள வென்பது பெறுதலின்,

"எந்தைதன் னுள்ளங் குறைபடாவாறு" (கலி. 61)

என்றாற்போல் வருவன பிறவுங் கொள்க (௩உ)

ஆய்வுரை :

இஃது அகத்திணைக்குரியோரால் வழங்கப்பெறும் சில முறைப்பெயர்கள் பற்றிய அமைதி கூறுகின்றது.

(இ—ள்) அகத்திணையொழுகலாற்றில் அன்புடையாரால் அன்னை, என்னை என வழங்கப்பெறும் சொல்வழக்குக்களும் உள்ளன. அவை சொல்வகையாலும் சொல்லிற்கு உறுப்பாகிய எழுத்துவகையாலும் பொருள்தோனறாத முறைமையினையுடையன. எ—று.

தாயைக் குறித்து வழங்கும் முறைப்பெயராகிய அன்னை என்ற பெயரால் தோழி தலைவியையும் தலைவி தோழியையும் அழைத்தலும் தமையனைக் குறித்த முறைப்பெயராகிய என்னை என்ற பெயரால் அவ்விருவரும் தலைவனை அழைத்தலும் அகத்திணைச் செய்யுட்களில் இடம்பெற்றுள்ளமை காணலாம். இச்சொல் வழக்குகள் சொல்லினாலும் அதற்குறுப்பாகிய ஈற்றெழுத்தினாலும் பொருள் விளங்காத முறைமையின ஆயினும் வழக்குப் பயிற்சி கருதி இவற்றை வழுவமைதியாக அமைத்துக் கொள்ளுதல் தொன்றுதொட்டு வரும் சொல்மரபு என்பது புலப்படுத்துவார் 'தொன்னெறி முறைமை சொல்லினும் எழுத்தினுந் தோன்றா மரபின என்மனார் புலவர்' என்றார் தொல்காப்பியனார்.

௨௪௩. ஒப்பும் உருவும் வெறுப்பும் என்றா
கற்பும் ஏரும் எழிலும் என்றா
சாயலும் நாணும் மடனும் என்றா
நோயும் வேட்கையும் நுகர்வும் என்றாங்கு
ஆவயின் வரூஉங் கிளவி எல்லாம்

நாட்டியல் மரபின்[1] நெஞ்சுகொளின் அல்லது
காட்ட லாகாப் பொருள என்ப.

**இளம்பூரணம் :**

என்—எனின், மேற் பொருட்பாகுபாடு முதல் கரு வுரிப் பொருளென உணர்த்தி அவற்றின் பாகுபாடு இத்துணையும் ஓதினார். அவற்றுட் பாகுபடுத்திக் காட்டலாகாதன சிலபொருள் கண்டு அவற்றைத் தொகுத்துணர்த்துதல் நுதலிற்று.

'நாட்டியமரபின்' என்பது நச்சினார்க்கினியர் உரையிற் கண்ட பாடம்.

(இ - ள்) ஒப்புமுதலாக நுகர்ச்சி யீறாக அவ்வழிவருஞ் சொல்லெல்லாம் நாட்டின் வழங்குகின்ற மரபினானே பொருளை மனத்தினான் உணரினல்லது மாணாக்கர்க்கு இது பொருள் என வேறுபடுத்தி யாசிரியன் காட்டலாகாத பொருளையுடைய என்றவாறு.

ஒப்பாவது - தந்தையையொக்கும் மகன் என்பது. அவ்விருவர்க்கும் பிறப்பு வேறாயினவழி ஒப்பாகிய பொருள் யாதென்றார்க்கு இதுவெனக் காட்டலாகாமையின், அவ்விருவரையுங் கண்டான் அவ்வொருவ ரொருவரை ஒக்குமது பிறனொருவன் மாட்டுக் காணாமையிற்றானே யப்பொருண்மையை உணரும் என்பது.

உரு என்பது—உட்கு. அது பயிலாத பொருளைக் கண்டுழி வருவதோர் மன நிகழ்ச்சி. இவருட்கினார் என்றவழி மனத்தினான் உணரக் கிடந்தது.

வெறுப்பு என்பது—செறிவு. அது அடக்கங்குறித்து நின்றது. அவரடக்கமுடையர் என்றவழி அதுவும் மனத்தினான் உணரக் கிடந்தது.

கற்பு என்பது—மகளிர்க்கு மாந்தர்மாட்டு நிகழும் மன நிகழ்ச்சி. அதுவும் மனத்தான் உணரக் கிடந்தது.

1. நாட்டு இயல்மரபாவது, உலகவழக்கில் உள்பொருள்களாக மக்களால் மனத்திற் கொள்ளப்பட்டு நாட்டில் வழங்கப்பெற்று வருதல்.

ஏர் என்பது—தளிரின்கண் தோன்றுவதோர் பொலிவு போல எல்லா வுறுப்பினும் ஒப்பக்கிடந்து கண்டார்க்கின்பத்தைத் தருவதோர் நிறவேறுபாடு. அது எல்லா வண்ணத்திற்கும் பொதுவாகலின் வண்ணம் அன்றாயிற்று. இது வண்ணம் பற்றிவரும். 'இவன் ஏருடையன்' என்றால் அதுவும் மனங்கொளக் கிடந்தது.

எழில் என்பது—அழகு. அது மிக்கும் குறைந்தும் நீடியும் குறுகியும் நேர்தி உயர்ந்தும் மெலிதாகியும் வலிதாகியும் உள்ள உறுப்புக்கள் அவ்வளவிற் குறையாமல் அமைந்தவழி வருவதோர் அழகு. இதுவும், 'அழகியன்' என்றவழி அழகினைப் பிரித்துக் காட்டல் ஆகாமையின் ஈண்டோதப்பட்டது.

சாயல் என்பது—மென்மை. அது நாயும் பன்றியும் போலாது மயிலுங் குயிலும் போல்வதோர் தன்மை. அதுவும் காட்டலாகாமையின் ஈண்டோதப்பட்டது.

நாண் என்பது—பெரியோர் ஒழுக்கத்து மாறாயின செய்யாமைக்கு நிகழ்வதோர் நிகழ்ச்சி. அதுவும் காட்டலாகாது.

மடம் என்பது—பெண்டிர்க் குள்ளதோர் இயல்பு. அது உய்த்துணர்ந்து நோக்காது கேட்டவாற்றாலுணரும் உணர்ச்சி. அதுவும் காட்டலாகாது.

நோய் என்பது—துன்பம். இவன் துன்பமுற்றான் என்றவழி அஃதெத்தன்மையது என்றார்க்குக் காட்டலாகாமையின் அதுவும் ஈண்டோதப்பட்டது.

வேட்கை என்பது—யாதானும் ஒன்றைப் பெறல்வேண்டுமெனச் செல்லும் மன நிகழ்ச்சி. இவன் வேட்கையுடையான் என்றவழி அஃது எத்தன்மை என்றார்க்குக் காட்டலாகாமையின் ஈண்டோதப்பட்டது.

ஆவயின் வருஉங் கிளவியெல்லாம் என்றதனான் அன்பு அழுக்காறு பொறை அறிவு என்பனவும் இவைபோல்வனவுங் கொள்க. இவையெல்லாம் அகத்திணை புறத்திணை இரண்டிற்கும் பொது. இவை காட்டலாகாப் பொருளவாயின் இல்பொருண்மேற் சொன்னிகழ்ந்த வென்றாலோ எனின், இது மேற்கூறப்பட்ட பொருள் பொருளென்பது அறிவித்தல். அவை உள்பொருள் என்பது வருகின்ற சூத்திரத்தான் உரைப்ப. (௩௨)

**நச்சினார்க்கினியம் :**

இது, கட்புலனாகக் காணப்படாத பொருண்மேலும் கட்புலனாகக் காணப்பட்டாற்போலப் பொருள் கோடல் வழுவமைக்கின்றது.[1]

(இ—ள்.) 1 ஒப்பாவது: ஒத்த கிழவனுங் கிழத்தியு மென்றவழி அவரொப்புமை மனனுணர்வானுணர்வ தன்றி மெய்வேறுபாடுபற்றிப் பொறியானுணரலாகாதென்றது; தந்தையரொப்பர் மக்களென்பதும் அது.

2. உருவாவது : உட்கு; அதுவும் பொறிநுதல் வியர்த்தல் போல்வனவற்றானன்றிப் பிழம்புபற்றி உணரலாகாது.

3. வெறுப்பாவது: செறிவு; அதுவும் மக்கட்குணமாய் இசையாததோர் மன நிகழ்ச்சியாதலிற் பொறியான் உணரலாகாது.

4. கற்பாவது : தன் கணவனைத் தெய்வமென்று உணர்வதோர் மேற்கோள்.

5. ஏராவது : எழுச்சி : அது எழுகின்ற நிலைமையென நிகழ்காலமே குறித்து நிற்கும்.

6. எழிலாவது : அங்கஙம் வளர்ந்தமைந்த பருவத்தும் இது வளர்ந்து மாறியதன்றி இன்னும் வளருமென்பதுபோன்று காட்டுதல்.

7. சாயலாவது : ஐம்பொறியால் நுகரும் மென்மை.

8. நாணாவது : செயத்தகாதனவற்றின்கண் உள்ளமொடுங்குதல்.

9. மடனாவது; கொளுத்தக்கொண்டு கொண்டதுவிடாமை;

---

1. சொற்கள் உணர்த்தும் பொருள்கள் உண்மை மாத்திரம் உணர்த்திப் பிழம்பு உணர்த்தப்படாதனவும் உண்மையும் பிழம்பும் ஒருங்குணர்த்தப்படுவனவும் என இருவகைப்படும் என்பர் இறையனார் களவியலுரையாசிரியர். பிழம்பு—வடிவம். உண்மை மாத்திரம் உணர்த்திப்பிழம்புணர்த்தப்படாத (வடிவமில்லாத) பொருள் கணக் காட்டலாகாப் பொருள் என்பர் தொல்காப்பியர். அருவப்பொருள்களைக் கருத்துப்பொருள் எனவும், பொறிகட்குப் புலனாகும் பொருள்களைக் காட்சிப் பொருள் எனவும் வழங்குதலுண்டு.

10. நோயாவது : நோதல்.

11. வேட்கையாவது: பொருள்கண்மேல் தோன்றும் பற்றுள்ளம்; 'செய்யுண் மருங்கின் வேட்கை' (தொல்—எழுத்-உயிர்மயங். 86) என்புழி அவாவிற்கு வேறுபாடு கூறினோம்.

12. நுகர்வாவது : இன்பதுன்பங்களை நுகருநுகர்ச்சி; 'என்றா' வென்பன எண்ணிடைச் சொல்.

என்று வருங்கிளவி-ஒப்பு முதல் நுகர்வு ஈறாகப் பன்னிரண்டென்று அகப்பொருட்கண் வருங் கிளவிகளும்.

ஆவயின் வருங் கிளவி- அப் பன்னிரண்டின் கண்ணே புறப்பொருட் குரியவாய் அவ் வாசகத்தான் வருங் கிளவிகளும்.

ஆங்கு-ஈண்டு உவமவுருபு, அவை போல்வன கிளவி என்பதாம்.

எல்லாம் நாட்டிய மரபின் நெஞ்சுகொளின் அல்லது-ஏனையவும் நாடகவழக்கத்தாற் புலனெறி வழக்கஞ்செய்த முறைமையானே நெஞ்சு உணர்ந்து கொள்ளினன்றி;

காட்டலாகப் பொருள என்ப - உலகியல் வழக்கான் ஒருவர்க்கொருவர் கட்புலனாகக் காட்டப்படாத பொருளைப் பொருளாகவுடைய என்று கூறுவர் புலவர் (எ - று.)

இவை மேல்வரும் மெய்ப்பாடுபற்றி உணர்தலிற் கட்புலனாகாவோவெனின், மெய்ப்பாடாவது மனக்குறிப்பாதலின் அதன் குறிப்பிற்குப் பற்றுக்கோடாகிய பொருளினவை[1] யென்றுணர்க.

இனி, இவை புறப்பொருட்கண் வருமாறு :

''வரைபுரையு மழகளிற் றின்மிசை'' (புறம். 38) எனவும், ''உருகெழு முரசம்'' (புறம். 50) எனவும், ''வெறுத்த கேள்வி

1. 'பொருளினவை, என்பதனைப் 'பொருளின்னவை' எனத்திருத்திக் கொள்க. நாட்டிய மரபின் நெஞ்சுகொள்ளலாவது கருத்துப்பொருளாகிய நிலையிற் பொறிகட்குப்புலனாகாத இவற்றை நாடகவழக்கினும் உலகியல் வழக்கினும் பாடல் சான்ற புலனெறிவழக்கின் துணைகொண்டு கற்போர் உள்ளத்திற் காட்சிப்பொருள் போன்று பதியுமாறு சொல்லோவியம் செய்துகாட்டுதல்.

விளங்குபுகழ்க் கபிலன்'' (புறம். 53) எனவும், ''நிலைகிளர் கூடனீளெரி யூட்டிய, பலர்புகழ் பத்தினி'' (சிலப்பதிகாரம் - பதிகம் 35-36) எனவும் வரும். இவ்வாறே ஏனையவற்றிற்கும் ஒட்டிக் கொள்க.

இனி எல்லாமாவன, ஒளியும் அளியுங் காய்தலும் அன்பும் அழுக்காறும் பொறையும் நிறையும் அறிவும் முதலியனவும் பிறவுமாம்.

1. ஒளியாவது : வெள்ளைமையின்மை.

2. அளியாவது : அன்புகாரணத்தால் தோன்றும் அருள்.

3. காய்தலாவது : வெகுளி.

4. அன்பாவது: மனைவியர்கண்ணுந் தாய்தந்தை புதல்வர் மூதலிய சுற்றத்தின்கண்ணும் மனமகிழ்ச்சி நிகழ்த்திப் பிணிப்பித்து நிற்கும் நேயம்.

5. அழுக்காறாவது : பிறர் செல்வ முதலியவற்றைப் பொறாமை.

6. பொறையாவது : பிறர் செய்த தீங்கைப் பொறுத்தல்.

7. நிறையாவது : மறைபிற ரறியாமல் ஒழுகுதல்.

8. அறிவாவது : நல்லதனலனுந் தீயதன்றீமையும் உள்ள வாறுணர்தல். இவை கண்டிலமென்று கடியப்படா கொள்ளும் பொருளென்றார். இவை ஆசிரியனாணையன்றென்பது மேற் சூத்திரத்தாற் கூறுகின்றான். (இரு)

**ஆய்வுரை :**

இது, மேல் முதல் கரு உரியெனப்பொருளைப்பாகுபடுத் துணர்த்திய ஆசிரியர் அவற்றுள் உண்மை மாத்திரமுணர்த்திப் பிழம்புணர்த்தப்படாதனவாகிய பொருள்கள் சிலவற்றைத் தொகுத்துணர்த்துகின்றார்.

(இ—ள்) ஒப்பு, உரு, வெறுப்பு எனவும், கற்பு, ஏர், எழில்

எனவும், சாயல், நாண், மடன் எனவும், நோய், வேட்கை நுகர்வு எனவும், இவ்வாறு அவ்வவ்விடங்களிற் பேசப்பட்டு வருஞ்சொற்களெல்லாம் நாட்டினகண் உணர்ந்து கூறுவாரும் கேட்டுணர்வாரும் ஆக வழங்குகின்ற வழக்கியல் முறைமையினா லே இப்பொருள்களை மனத்தினால் உணர்ந்து கொள்வதல்லது மாணாக்கர்க்கு 'இச்சொல்லாற்குறித்த பொருள் இது' என்று ஐம்பொறிவாயிலாகக் கண்டுணரும்படி காட்டவொண்ணாத அருவப்பொருள்களையுணர்த்துவன என்பர் ஆசிரியர் எ—று.

'ஆவயின் வரூஉங் கிளவியெல்லாம்' என்றதனால் இவ்வாறு வருவனமேலும் பலவுள என ஆசிரியர் குறித்தலால் அன்பு, அறிவு, அழுக்காறு, பொறை, நிறை என்பனவும் இவை போல்வனவும் காட்டலாகாப் பொருளவாதல் கொள்க.

௨௪௪. இமையோர் தேஎத்தும் எறிகடல் வரைப்பினும்
அவையில் காலம் இன்மை யான.

இளம்பூரணம் :

என்—எனின் இதுவும் மேற்கூறப்பட்ட பொருள், பொருள் என்பது அறிவித்தலை நுதலிற்று.[1]

(இ-ள்.) தேவருலகத்தினுங் கடல்சூழ்ந்த வுலகத்தினும் மேற்சொல்லப்பட்ட பொருளில்லாத காலம் இன்மையான் உள் பொருளென்றே கொள்ளப்படும் என்றவாறு. (௫௩)

நச்சினார்க்கினியம் :

இஃது, இவையுங் காட்டலாகாப் பொருள்கள் ஆசிரியனாணையாற் கொண்டன அல்லவற்றைப் பொருளெனக் கொள்க என்கின்றது.[2]

---

1. மேலே கூறப்பட்ட ஒப்பு முதலாயின பொறிகட்குப் புலனாக இன்னவுருவின எனக்காட்டலாகாப் பொருளவாயினும் என்றும் யாண்டும் உள்ள பொருள்களே என்பதனை அறிவிப்பது இச்சூத்திரம் என்பதாம்.

2. "இஃது இவையும் ஆசிரியன் ஆணையாற் கொண்டன அல்லஇவற்றைப் பொருளெனக் கொள்க என்கின்றது" என இக்கருத்துரைப் பகுதியிருத்தல் வேண்டும்.

மேல் ஒப்பு முதலான நுகர்வு ஈறாகச் சொல்லப்பட்டனவற்றைக் காட்ட லாகாப்பொருள் எனவே அவை உண்மையல்லாத இல்பொருளோ என ஐயுற்று வினவிய மாணாக்கர்க்கு இன்னோரன்னவை இல்லாதன அல்ல என்றும் யாண்டும் உள்ளனவே என ஐயமகற்றும் நிலையில் அமைந்தது இச்சூத்திரமாகும்.

(இ-ள்.) இமையோர் தேஎத்தும் எறி கடல் வரைப்பினும் தேவருலகத்தின்கண்ணுந் திரையெறியுங் கடல்சூழ்ந்த நிலத்தின் கண்ணும்; அவை இல் காலம் இன்மையான - அறம் பொருளின்பங்களின் நுகர்வு இல்லாததோர் காலம் இன்றாகையால் அவற்றைப் பொருளென்றே கொள்க (எ-று.)

தமிழ்நடக்கும் எல்லை கூறாது தேவருலகையும் மண்ணுலகையுங் கூறினமையின் இவை யாண்டும் ஒப்ப முடிந்தன வெனவும் அவை உள்ள அளவும் இவை நிகழ்வனவெனவுங் கூறலின் வழுவமைதியாயிற்று. இமையாக் கண்ணராகலின் இமையோர் என்றார். இடையூறில்லா இன்பச் சிறப்பான் இமையோரை முற்கூறினார்.[1] (௫௪)

ஆய்வுரை :

இஃது ஒப்பு முதலாக நுகர்வு ஈறாகச் சொல்லப்பட்டன வெல்லாம் எங்கும் என்றும் உள்ள பொருள்களே என ஏதுககாட்டி நிறுவுகின்றது.

(இ—ள்) இமைத்தல் இல்லாத கண்களையுடைய வானோர் உலகத்தும் வீசுகின்ற அலைகளையுடைய கடலாற் சூழப்பெற்ற நில எல்லையிலும் ஒப்புமுதலாக மேற் கூறப்பட்ட பொருள்கள் இல்லாதகாலம் என்றும் இல்லாமையால் அவையனைத்தும் உள்பொருள்களே எனத் துணியப்படும் எ—று.

ஒப்பு, உருவு முதலாகக் கூறப்பட்ட இப்பொருள்களை இல்லையென மறுப்போர் வானுலகினும் மண்ணுலகினும் யாண்டும் இல்லாமையால் இவை உள்பொருள்களே என்பதற்கு

---

1. இமையார், இமையோர் என ஆ ஓ வாயிற்று. இமையார்—கண் இமைத்தல் இல்லாதார் என்றது இமையாக் கண்களையுடையராய தேவர்களை. இமையோர் தேஎம்—விண்ணுலகர். எறிகடல்வரைப்பு—அலைகள்வீசும் கடலினை எல்லையாக வுடையது என்றது மண்ணுலகத்தினை. இவ்வுலகில் விண்ணும் மண்ணும் அழிவின்றியுள்ள காலமளவும் இப்பொருள்கள் உயிர்களின் மனத்தகத்தே நிலை பெற்றுள்ளமையின் இவை கட்புலப்படாவாயினும் இவை யில்லாதகாலம் யாண்டும் இன்மையின் இவை என்றும் உள்பொருள்களே என வலியுறுத்தியவாறு.

யாவருஞ் சான்றாவார் எனக் கூறி ஒப்பு முதலா மேற்கூறப்பட்டன உள் பொருளாதலை நிறுவியவாறுணர்க.

இங்ஙனம் ஆசிரியர் தொல்காப்பியனாரால் 'காட்டலாகப் பொருள்' எனக்கூறப்பட்ட பொறியுணர்வுக்குப் புலப்படாத பொருள்களை 'உண்மை மாத்திரம் உணர்த்திப் பிழம்புணர்த்தப் படாதன' என்ற பகுப்பினுள் அடக்குவர் இறையனார் களவியலுரையாசிரியர்.

# நூற்பா முதற்குறிப்பு அகரவரிசை

( எண் பக்கத்தைக் குறிக்கும் )



குறிப்பு: முதல் பதின்மூன்று நூற்பாக்களுக்குக் ௧ முதல் ௧௩ என்ற வரிசைஎண்ணும் ௧௪-ஆவது நூற்பா முதல் தொல்காப்பியப் பொருளதிகாரத் தொடர் எண்ணும் (௨0௯) பின்பற்றப் பட்டுள்ளது என்பதனை நினைவு கூர்க.